# 1

தீர்ப்பை நீதிபதி வாசித்து முடிக்கிற வரையில் அருணுக்குப் பொறுமையில்லை. இதைக் காட்டிலும், மாணவனாய் லட்சணமாய் சட்டக் கல்லூரியில் பேராசிரியரின் போரையே சகித்துக் கொண்டு உட்கார்ந் திருக்கலாமே?

ஒன்றா, இரண்டா? ஃபுல்ஸ்காப் காகிதத்தில் ஒன்பது தாளாவது இருக்கும். இப்போதுதான் பாதி வந்திருக்கிறது.

கோர்ட் அறையின் ஒரு மூலையில், கதவுக்குப் பக்கமாக உட்கார்ந்திருந்தான் அருண். இருக்கை கொள்ளாததால், விரல்கள் பெஞ்சியில் துருத்திக் கொண்டிருந்த ஓர் ஆணியை வெளியே இழுப்பதும் உள்ளே தள்ளுவதுமாகச் சேட்டை புரிந்தவாறிருந்தன.

'என்னய்யா வளவளவென்று!' – தன் மனத்துக்குள் திட்டிக் கொண்டான் அருண். பத்மனாபன் பல முறை சொல்லியிருக்கிறான் இந்த ஜஸ்டிஸ் நீலமேகத்தைப் பற்றி. சுத்த இது.

அருகில் நின்றிருந்த டவாலி கொட்டாவி விட்டான். அவனை அப்படியே கட்டிக் கொள்ளலாம் போல் இருந்தது அருணுக்கு.

ஜஸ்டிஸ் நீலமேகம் ஒரு கண்ணாடியைக் கழற்றி, சாவதானமாக மேஜைமீது வைத்துவிட்டு, வேறொரு கண்ணாடியை இன்னொரு பிளாஸ்டிக் கூட்டுக்குள்

ளிருந்து எடுத்து 'மாட்டிக் கொண்டு மேலே தொடர்ந்தார். ஷார்ட் ஸைட், வெள்ளெழுத்து, சாளேசுரம் எல்லாக் கோளாறுகளுக்கும் சேர்ந்து, ஒரே கண்ணாடியாகப் பிரமாதமாய்த் தயாரிக்கிறார்கள். என்ன ஜட்ஜ் உத்தியோகம் பார்த்து என்ன? இந்தச் சின்ன விஷயம் தெரியாமல், ஒவ்வொரு நிமிடத்துக்கு ஒரு கண்ணாடி என்று மாற்றிக் கொண்டிருக்கிறீர்! ஹூம்!

எழுந்து போய் ஒரு கிரஷ்ஷாவது குடித்துவிட்டு வரலாமா? செருப்பைத் துழாவி, மெதுவாய் மாட்டிக் கொண்டான் அருண். ஒரு கால் அவன் வருவதற்குள் தீர்ப்புச் சொல்லி முடித்துவிட்டால்? அந்த முக்கியமான கட்டத்துக்காகக் காத்திருந்ததெல்லாம் வீணாகிவிடாதா? அருண், கழுத்தை உயர்த்தி, பிராசிக்யூட்டரின் பொறுப்பை நிறைவேற்றிக் கொண்டிருக்கும் நண்பனைப் பார்த்தான். பத்மனாபனுக்கு எத்தனை அமைதி! "அவர் சிரிக்கிறாரா, கோபமாய் இருக்கிறாரா? கொஞ்சம் முகத்தைப் பார்த்துச் சொல்லுங்களேன்," என்று பத்மனாபனின் மனைவி கல்யாணி அடிக்கடி அருணிடம் சொல்வதுண்டு. அத்தனையும் அவ்வளவும் உண்மை. அழுத்தக்காரன். நம்மைப் போல் நூறு மடங்கு பதற்றம் அவனுக்கு இருக்கும். நிச்சயம். ஆனால் என்ன கம்பீரமாக, எப்படிப் பட்ட அறிவாளித்தனமான புன்னகையுடன் நீதிபதியின் ஒவ்வோர் உச்சரிப்பையும் ரசித்து மகிழுகிற மாதிரி நடித்துக்கொண்டிருக்கிறான்.

பத்மனாபா! நீ அரசாங்க வக்கீலாக ஒளி வீசுவாயோ மாட்டாயோ, நடிப்புத் தொழிலில் புகுந்தால் உனக்கு மண் காட்ட ஓர் ஆள் இருக்காது!

"...... ஆகவே, இரண்டு தரப்பு வாதங்களையும் ஒப்பிட்டுக் கவனிக்கையில்...."

அருண் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

ஜஸ்டிஸ் நீலமேகம் தீர்ப்பைச் சொல்லி முடித்தார். 'நெக்ஸ்ட்' என்று இன்னொரு கட்டை எடுத்து வைத்துக் கொண்டு, மீண்டும் கண்ணாடி மாற்று படலத்தில் இறங்கினார்.

அருணின் முகம் மலர்ந்து விரிந்தது.

பத்மனாபன் முதல் தடவையாக, அவனைப் பார்த்துப் புன்னகை செய்தான். அந்தப் புன்னகையின் விரிவு அரையங்குலம்தான் இருந்தது. ஆனால் அதில் செறிந்திருந்த திருப்தியும் பெருமிதமும் நன்றியும் ஆயிரம் டன் எடைக்கு மேலேயே இருந்திருக்கும்.

அருணுக்குக் கையும் காலும் பறந்தன. சில்க் ஸ்லாக் சட்டையின் ஒரு பக்கத்துப் பையில் கைவிட்டான். ஒரு பிடி சில்லறை வந்தது. அப்படியே, பக்கத்திலிருந்த டவாலியின் கையில் அழுத்தி, ''இவ்வளவுதான் இருக்கிறது!'' என்று சொல்லிவிட்டு, கோர்ட் ஹாலை விட்டு வெளியே வந்தான்.

கல்யாணிக்குச் சொல்ல வேண்டும் முதலில். இவனைப் போல உம்மணா மூஞ்சியா அவள்? இல்லை. மகிழ்ந்து போவாள். ஐந்தே நிமிஷத்தில் ஒரு கேசரி யாவது கிளறி, ''இந்தாருங்கள் ஸ்வீட்!'' என்று வெள்ளித் தட்டில் வைத்து நீட்டுவாள். சாயந்தரம் சினிமாவுக்குக் கட்டாயம் போகவேண்டும். பத்மனாபன் பிகு செய்வான். விடக் கூடாது.

வெளி வெராந்தாவில் நின்றபடியே கோர்ட்டை நோக்கினான் அருண். என்ன இது? பத்மனாபன் வரவே மாட்டானா?

பிராசிக்யூடர் பத்மனாபன் கட்டுகளை அடுக்கி வைத்துக் கொண்டிருந்தான். எதெதிலோ கையெழுத்துப் போட வேண்டியிருந்தது. யார் யாருக்கோ பதில்

சொல்ல வேண்டியிருந்தது. இரண்டொருவர் அவன் கையை லோசாகக் குலுக்கிப் பாராட்டிக் கொண்டிருந் தார்கள். கோர்ட் நடவடிக்கைகளுக்கு இடையூறு விளைவிக்காமல் பாராட்டையும் பெற்று, நன்றியையும் தெரிவித்தவாறிருந்தான் பத்மனாபன்.

அருணுக்குச் சலிப்பு ஏற்பட்டது.

இவன் எப்போது வந்து, எப்போது வீட்டுக்குப் போய்...

*கல்யாணிக்குப் போன் பண்ணிச் சொல்லிவிட்டால்?*

விடுவிடுவென்று வக்கீல்களின் அறை வரிசை வழியே நடந்தான்.

கட்சிக்காரர்களும், சாட்சிகளும், ஜூனியர்களும் பல்வேறு நிலையில் பல்வேறு பாவங்களில் காட்சி யளித்தார்கள் ஒவ்வோர் அறையிலும். சில அறைகளில் உரத்த வாக்குவாதம் கேட்டது. ''சாயபு! நீர் கவலையே படாதேயும். இவன் ஒரு மடையன்...'' என்று ஒரு குரல். ''கறிகாயையும் பழங்களையும் வீட்டண்டேயே இறக்கி விட்டேனுங்க,'' என்று இன்னோர் தகவல். டக் டக் கென்று குதிகால் செருப்பணிந்த ஒரு பெண் அருணைத் தள்ளிக் கொண்டு விரைந்தாள்.

வக்கீல் அனந்துவின் அறை கொஞ்சம் சௌகரிய மாய் இருக்கும். தனி அறை வைத்திருக்கிறவர் அவர். இந்த மாதிரி ஏழெட்டுப் பேருடன் கூட்டுத் குடித்தனம் பண்ணுகிறவரல்ல. ஆனால் அவருக்கும் உடும்புக்கும் ஒரே ஒரு வித்தியாசம்தான். உடும்புக்குத் தொண தொணக்கத் தெரியாது.

''அட! அருணா! ஏது, சட்டக் கல்லூரி மாணவனுக்கு ஹைகோர்ட் பக்கம் கூட காற்றடிக்கிறது!''

அயன் அனந்துவேதான்!

ஆனால் நல்லவேளை, எங்கேயோ கிளம்பிக் கொண்டிருக்கிறார். கத்தரித்து விடலாம்.

''வணக்கம் சார். ஒரு சினேகிதனைப் பார்ப்பதற்காக வந்தேன். சாரையும் பார்த்து ரொம்ப நாளாயிற்றே என்றுதான்....''

''இதோ பார்! '' என்று வக்கீல் அனந்து தனது இரு செவிகளையும் பிடித்து இழுத்துக் காட்டினார் அருணுக்கு. ''எனக்கு ஒரு வயசாகிற போதே என் அப்பா அம்மா காது குத்திவிட்டார்கள். நீ வேறு செய்யாதே!''

''ஐயய்யோ! பொய்யில்லை. சார், நிஜமாய்!''

''சரி, சரி. உன் வாலை நிமிர்த்த நம்மாலே ஆகாது!'' என்றார் அனந்து. ''நான் சொல்வதைக் கேள். படி படி என்று அப்பா உன் :.பிராணனை வாங்குகிறார் என்பதற் காக, நாலு வருஷமாய் லா படிக்கிறதா? உன்னோடு படித்தவனெல்லாம் இரண்டு பை போதாமல் நாலு பை தைத்துக் கொள்கிறான்! பேசாமல் ஏதேனும் ஒரு வேலை பார்த்துக் கொள்ளக் கூடாது? மூளையை மட்டும் ஒழுங்காய் உறுதியாய்ச் செலவழித்தால் உன்னை எவன் 'பீட்' பண்ண முடியும்?''

''வக்கீல் சார்! எவ்வளவோ தெரிந்த நீங்கள்கூட இப்படிச் சொல்லலாமா? நான் வேலைக்குப் போனால், உண்மையிலேயே வேலைக்காக அலைகிற ஒருத்தன் வாயில் மண்தானே? அந்தப் பாவம் எனக்கேன்?''

''பேசடா ராஜா பேசு!'' என்று அவர் பெருமூச் செறிந்தார். ''அப்பா ஒரு முனிசிபல் கமிஷனர்! ஒரு அண்ணன் பிலாயில் எஞ்சினியர், ஒரு அண்ணன் நேவியில் அதிகாரி, ஒரு அண்ணன் இந்துஸ்தான் டெலிபோனில் ஆபீசர், ஒரு அண்ணன் பம்பாயில் கவர்மெண்ட் செகரட்டரி, ஒரு அண்ணன் ஷேர் மார்க்கெட்

சூரன் – என்று ஐந்து பேர் படியளக்க எனக்கும் இருந்தால் உன்னைக் காட்டிலும் உல்லாசமாக ஊர் சுற்றுவேன்!''

''கண் வைக்காதீர்கள் சார்!'' என்று கெஞ்சினான் அருண். ''இந்த மாசம் இந்த நிமிஷம் வரை ஐந்து பேரும் கப்சிப்! பணம் அனுப்ப மறந்து விட்டார்கள், சார்! உங்களைப் போன்ற குடும்ப சிநேகிதர்களைத் தான் பிடிக்க வேண்டும் என்றிருக்கிறேன்....''

''அப்பா மகாராஜா! போய் வா!'' என்று கையெடுத்துக் கும்பிட்டுவிட்டு, வெட்டிக் கொண்டார் வக்கீல் அனந்து.

''கொஞ்சம் போன் பண்ணணும், சார்! ரூம் திறந் திருக்கிறதா?''

''ஜூனியர் இருக்கிறான். ஞாபகமாய்ப் பதினைந்து பைசாவைக் கொடுத்துவிடு அவனிடம்!''

பத்மனாபனின் மனைவிக்குப் போன் செய்து தகவலைத் தெரிவித்த பிறகு, இன்னொரு யோசனை தோன்றியது.

ஜூனியரின் கையில் விரிந்திருந்த தினசரித் தாள் தான் அதற்குக் காரணம்.

எண்களை மறுபடி ஒருமுறை சுழற்றினான். ''உதவி ஆசிரியர் திருவேங்கடம் என்று ஒருத்தர் இருக்கிறாரா சார் அங்கே?'' என்று கேட்டான்.

''ஆமாம்.''

''கொஞ்சம் கூப்பிடுகிறீர்களா? ஒரு சிநேகிதர் என்று சொல்லுங்கள்.''

பலவிதமான பொத்தான் ஓசைகளுக்குப் பிறகு, திருவேங்கடம் லயனில் கிடைத்தார்.

கடகடவென்று ஆரம்பித்தான் அருண்: ''என்னை நினைவிருக்கிறதா சார்? அருண்! போன மார்ச் மாதம் மதுரையிலிருந்து உங்களோடு பட்டணம் வரையில் வந்தேனே? நீங்கள் கூட உங்கள் விலாசம் கொடுத்தீர் களே?''

உதவி ஆசிரியர் திருவேங்கடம் இப்படிப் பல பேரிடம் விலாசம் கொடுத்து விட்டுத் திண்டாடியவர் என்பது அவரது பதிலிலேயே தெரிந்தது. ''இருக்கும். ஆமாம். என்ன வேண்டும்?''

''ஒன்றுமில்லை. ஒரு சின்ன உதவி. ஜெயஸ்ரீ கம்பெனி மோசடி வழக்கு என்று எட்டு மாதமாய் நடக்கிறதில்லையா?''

''ஆமாம்.... லட்ச ரூபாய் மோசடி வழக்குதானே?''

''அதே அதே! அப்பீலிலே தீர்ப்பு சொல்லிவிட் டார்கள். சாயந்தரப் பேப்பரில் நியூஸ் போடுவீர்களோ?''

''ரிப்போர்ட்டர்கள் நியூஸ் கொண்டு வந்தால், தகுந்தபடி செய்வோம்.''

''என்னமோ போல் சொல்கிறீர்களே? சார் கட்டாயம் பிரசுரியுங்கள். பொது மக்கள் ரொம்ப ஆவலாய்ப் படிப்பார்கள்.''

''ஆகட்டும், பார்க்கலாம்'' என்றார் உதவி ஆசிரியர். ''ஆமாம், இதிலே உங்களுக்கு என்ன அக்கறை?''

''கேட்டீர்களே ஒரு கேள்வி. பிராசிக்யூஷன் தரப்பில் பூராபூரா கேஸை நடத்தியது பத்மனாபன் என்ற என் உயிர் சினேகிதன்தான். முதல் கேஸ்....''

உதவி ஆசிரியர் இடைமறித்தார். ''பிராசிக்யூட்டராக இருப்பது தாஸ் இல்லையோ?''

''ஆமாம், ஆமாம். அவருடைய அஸிஸ்டெண்ட் தான் இந்தப் பத்மனாபன். கடைசி இரண்டு நாளைக்கு

தாஸ் வரவேயில்லை உடம்பு சரியில்லை என்று. ''நீரே நடத்தய்யா! இனிமேல் அட்ஜார்ன்மெண்ட் தர முடியாது!'' என்று ஒரு நாள் ஜஸ்டிஸ் நீலமேகம் பச்சைக் கொடி காட்டிவிட்டார். அதற்கப்புறம், என் சிநேகிதன் பத்மனாபனே பாயிண்ட் பாயிண்டாய்ப் பிய்த்து.....''

''சரி. கவனிக்கிறேன்; அவ்வளவுதானே?''

''பத்மனாபனின் பெயரைக் கொஞ்சம் பெரிய எழுத்தில்....''

''எப்படி வழக்கமோ அப்படிச் செய்கிறோம். முதலில் நியூஸ் வரட்டும்.''

'' நன்றி சார்,'' என்று டெலிபோனை வைத்தான் அருண்.

பெரிய காரியத்தைச் சாதித்துவிட்ட திருப்தியுடன், ஸ்லாக் பையில் கையை நுழைத்தான். வெறும் கை வெளியே வந்தது. மறு பையை ஆராய்ந்தான். ஒற்றை ரூபாய்த் தாள் கிடைத்தது. முப்பது பைசா டெலி போனுக்கு. பாக்கியில், ஓட்டலை அடைந்துவிடலாம்.

''தாங்க்ஸ் சார்,'' என்று நீட்டினான் வக்கீல் அனந்துவின் ஜூனியரிடம். அவர் இன்னும் தினசரியிலேயே மூழ்கி யிருந்தார்.

கையை விரித்தார் அவர். ''சில்லறை இல்லையே? அப்புறம் வேண்டுமானால் கொடுங்கள்.''

''நான் மாற்றி வந்து தருகிறேன்.''

வெராந்தாவுக்கு வந்தான்.

அவசர அவசரமாய்ச் சென்று கொண்டிருந்த அந்த யுவதிதான் அவன் சந்தித்த முதல் நபர்.

ஆபத்துக்குத் தோஷமில்லை. ''மன்னிக்க வேண்டும்... சில்லறை இருக்குமோ?''

''நோ!'' என்று கடுமையாகப் பதிலளிப்பதைத்தான் 'பாஷன்' என்று அந்த வயதுப் பெண்கள் நினைப்பது வழக்கம். இவள் அப்படியில்லாமல், சிறிய பர்ஸொன்றைத் திறந்து, ''இரண்டு எட்டணாத்தான் இருக்கிறது,'' என்று கூறிக் கொடுத்தாள். பிறகு, ''எட்டாம் நம்பர் கோர்ட்டாமே. அது எங்கேயிருக்கிறது?'' என்று ஆர்வத்துடன் விசாரித் தாள். சாக்லேட் நிறத்தில் பாவாடை தாவணியும், செக்கச் செவேலென்ற சோளியும் அணிந்திருந்தாள் அவள்.

''நேரே போய், படியேறி, வலது கைப் பக்கம் திரும்புங்கள்,'' என்று வழிகாட்டினான் அருண். அப்போதுதான் அந்த முகத்தையும் கூர்ந்து கவனித்தான். பதற்றம் முத்து முத்தாக வியர்த்திருந்தது.

''நன்றி,''என்று அவள் புறப்பட்டாள். அப்படித் திரும்பிய வேகத்தில், அவள் முகத்தை மீண்டும் பார்க்க இதுதான் சாக்கு என்று நினைத்த மாதிரி, பின்னல் சரேலென முன்னால் வந்து எட்டிப் பார்த்துவிட்டு நகர்ந்தது.

அருண் பின்தொடர்ந்தான்.''நான் கேட்டது சில்லறை. நீங்கள் கொடுத்தது தானம்.''

திகைத்து நின்றாள் முதலில். அருணின் நீட்டிய கையில் இருந்த நோட்டைக் கண்டதும் நாணத்துடன் புன்னகைத்தபடி பெற்றுக் கொண்டாள்.

''எட்டாம் நம்பர் கோர்ட்டையா தேடுகிறீர்கள்?'' அருணுக்கு ஏதோ சந்தேகம் தட்டியது. ''அங்கே யாரைப் பார்க்கவேண்டும்?''

''யாரையும் பார்க்கக் கூடாது!'' குறும்பைக் காட்டிலும் கவலை அதிகம் தென்பட்டது அந்த விழி களில். ''முக்கியமாக என் அப்பா வந்திருப்பார். தீர்ப்பு என்னவென்று தெரிந்து கொள்வதற்காக. அவர்

கண்ணிலே பட்டுவிடாமல், தீர்ப்பை மட்டும் தெரிந்து கொண்டு போக வேண்டும்.''

''தீர்ப்பா?''

''ஜெயஸ்ரீ கம்பெனி கேஸில் இன்றைக்குத் தீர்ப்பு.... கட்டாயம் தெரிந்து கொள்ள வேண்டும் என்று காலேஜுக்குக்கூட மட்டம் போட்டுவிட்டு ஓடி வந்தேன்.'' பட்டுப் போன்ற கையின் பவுன் வளையல் களை நெருடியவாறே அவள் பதிலளித்தாள்.

''அதுவா? தீர்ப்புச் சொல்லிவிட்டார்களே!''

''எப்போது?'' சங்கு போன்ற கழுத்து, சிலிர்த்து நிமிர்ந்தது. ''இன்னும் நேரமாகுமென்று சொன்னார் களே?''

''கொஞ்சம் முந்திதான் சொன்னார்கள். நான் அங்கே யிருந்துதான் வருகிறேன்... உங்களுக்கு.... யார்....''

''தீர்ப்பு என்ன, அதைச் சொல்லுங்கள்!'' பரபரத் தாள் அவள் கையைப் பிசைந்துகொண்டு. ''அண்ணாவை விட்டு விட்டார்களா? விடுதலை செய்து விட்டார்களா?''

''அண்ணாவா?'' அருணின் குரலில் தயக்கமும் கலக்கமும் தொனித்தன.

''ஆமாம். மூர்த்தி என்பது என் சொந்த அண்ணா தான். யாரோ பொறாமைக்காரர்கள், அவன் பிரமாத மாய்ப் பிஸினஸ் பண்ணுவது பொறுக்காமல், கன்னா பின்னாவென்று ஜோடனை பண்ணி... போகட்டும். விடுதலை செய்துவிட்டார்கள் இல்லையா?''

அருண் நிலை குலைந்தான்.

''அடக்கடவுளே! என்னுடைய ஆனந்த மாளிகை இவளுடைய கண்ணீரின்மீதா கட்டப்பட்டிருக்கிறது!'' என்று நினைக்கும் பொழுது அவன் மனத்தில் வேதனை ஏற்பட்டது. கேள்விக்குறியாக விரிந்து நிற்கும் கண்கள்,

ஆச்சரியக் குறியாக நிமிர்ந்து நிற்கும் அதரங்கள் - இவற்றைப் பார்த்த பின்னும், எப்படிச் சொல்வது உண்மையை?

''அ...ஆமாம்...வந்து...'' என்று தடுமாறியதை அவள் தவறாகப் புரிந்து கொண்டாள்.

''எனக்கு அப்போதே தெரியும்! விடுதலை செய்து விடுவார்கள் என்று!'' குதூகலமாகப் பேசினாள் அவள். சுட்டு விரலை ஆட்டும் போது, செக்கச் செவேலென்ற நகப்பூச்சு டாலடித்தது. ''இந்த அம்மா ஒரு பயந்தாங் கொள்ளி! அப்பா, சும்மா இரைவதோடு சரி! நான்தான் ஆரம்பத்திலிருந்தே நம்பிக்கையாய் இருந்தேன்.... ரொம்ப தாங்க்ஸ்! வீட்டுக்குப் போய் அம்மாவிடம் சொல்ல வேண்டும்!'' என்றவள், எட்டாம் நம்பர் கோர்ட்டின் திசையை ஏக்கத்துடன் பார்த்து, ''அப்பாவின் கண்ணில் பட்டேனோ, சட்னிதான்!'' என்று முணு முணுத்தவாறே திரும்பி ஓடினாள்.

''மிஸ்டர் மூர்த்தியைப் பார்த்தால் ரகசியமாய்ச் சொல்கிறேன், 'உங்கள் தங்கை வந்திருந்தார்' என்று!'' என்றான் அருண். ''உங்கள் பெயர்?''

''மாயா! கட்டாயம் அண்ணாவிடம் சொல்லுங்கள். ரொம்பச் சந்தோஷப்படுவான்!'' வெராந்தாவின் திருப் பத்தில் அவள் சென்று மறைந்து விட்டாள்.

அருண் மெல்ல நடந்தான். சிறகொடிந்த பறவை யாக அவனுடைய உற்சாகம் அந்த வெராந்தாவிலேயே விழுந்து துடித்தது.

''என்ன அருண், ஒரு கங்கிராஜுலேஷன், கை குலுக்கல், காபி எதுவும் கிடையாதா எனக்கு?''

வெற்றிப் புன்னகை முகத்தில் கூத்தாட எதிரில் நின்றான் பத்மனாபன்.

''வா, வா! வீட்டுக்குப் போகலாம். உனக்காகத் தான் காத்திருக்கிறேன்.''

''அடப்பாவி! என்னவோ ஜெயிலுக்கு நீ போகப் போகிற மாதிரியல்லவா பேசுகிறாய்!'' என்ற பத்மனாபன், நண்பனின் கலக்கத்துக்குக் காரணம் புரியாமல் திகைத்தான்.

**மா**யாவுக்குத் தரையிலே கால் பாவவில்லை.

நடையிலே துள்ளலுடன், ஹைகோர்ட்டின் துருப் பிடித்த பழைய கேட்டை ஒரு தட்டுத் தட்டிவிட்டு, சைனா பஜாருக்கு வந்தாள்.

சேத்துப்பட்டுக்குச் செல்லும் பஸ், சைனாபஜாரின் கோடியில், அனாதையாக நின்றிருந்தது. காலி காலியா யிருந்த ஆசனங்கள் அவளை வா வாவென்று அழைத்த போதிலும், மாயாவுக்கு அதில் செல்ல இஷ்டமில்லை. ஒன்றரை மணி நேரம் ஊர்ந்து போகும். அதற்குள் அப்பா, அண்ணா எல்லாரும் வந்திருப்பார்கள். அவர் களுக்கெல்லாம் முன்னதாக வீட்டையடைந்து எல்லோ ருக்கும் சொல்ல வேண்டாமா?

''டாக்ஸி! டாக்ஸி!'' என்று கை தட்டிக் கூப்பிட்டாள்.

நடைபாதை ஓரத்துக்கு விர்ரென்று வளைத்து வண்டியைக் கொணர்ந்தான் டாக்ஸியோட்டி. பின் ஸீட்டில் அமர்ந்து கொண்டாள். ''சேத்துப்பட்டு பூந்த மல்லி ஹைரோடில் ஓட்டு.'' பர்ஸை முன்னெச்சரிக்கை யாகப் பார்த்துக் கொண்டாள். மூன்று ஒற்றை ரூபாய் நோட்டுக்கள் இருந்தன. ஒன்று 'அவர்' கொடுத்தது. நல்ல மனிதர்.

ஸீட்டில் அவள் விரல்கள் தாளமிட்டன. ஜன்னல் கண்ணாடியில் வெறும் விரலினால் பல கோலங்கள் இட்டாள்.

சாயந்தரம் பேப்பரில் வரும்! ஊருக்கெல்லாம் அப்புறம் தெரியும். 'மிஸ்டர் மூர்த்தி குற்றவாளி அல்ல! ஒரு நயா பைசா மோசடிகூடச் செய்யத் தெரியாது அவருக்கு'– என்பதெல்லாம் அப்புறம்தான் விளங்கும்!

டாக்ஸியில், ஸ்டியரிங்குக்குப் பக்கத்தில் உள்ள மாடத்தில் அன்றைய தினசரி இருந்தது.

''அந்தப் பேப்பரைக் கொஞ்சம் கொடுக்கிறீர்களா?'' என்று கை நீட்டினாள் மாயா. ''ஒரு நியூஸ் பார்க்க வேண்டும்.''

டிரைவர் ரொம்ப அழுத்தம். ''என்ன நியூஸ்?'' என்று கேட்காமலே, ஏன் தலையைக் கூட திருப்பாமலே, பேப்பரை எடுத்துத் தந்துவிட்டு, வண்டியை ஓட்டினான்.

சரக் பரக்கென்று சத்தம் கேட்கிற மாதிரி இப்படியும் அப்படியும் புரட்டினாள் பேப்பரை. ''ஊஹும், காண வில்லையே? அந்த ஜெயஸ்ரீ கம்பெனி வழக்கிலே தீர்ப்பு என்று சொன்னார்கள், ஒன்றையும் காணோம்!'' என்று வாய்விட்டே முணுமுணுத்தாள். பிறகு தானாகவே கலகலவென்று சிரித்துக் கொண்டு, ''அடடே! நான் ஒரு சுத்த இவள்! இன்றைக்குத் தீர்ப்பு என்றால், இன்றைக்குச் சாயந்தரம், இல்லாவிட்டால் நாளைக் காலையில்தானே பேப்பரில் வரும்!'' என்று சொன்னாள்.

கடன்காரன்! கொஞ்சம் திரும்பி என்ன விஷயம், ஏது என்று கேட்கமாட்டானா?

''டேய் முனியாண்டி!'' என்று டாக்ஸியிலிருந்து இறங்கும்போதே கூவினாள் மாயா. ''அண்ணாவை விடுதலை பண்ணிவிட்டார்கள்! நேரே கோர்ட்டுக்கே போய்க் கேட்டுவிட்டு வருகிறேனாக்கும்!'' தகவலைத் தெரிவித்தவாறே டாக்ஸியோட்டிக்குப் பணத்தைக் கொடுத்தாள்.

காம்பவுண்டுச் சுவரை ஒட்டினாற்போலிருந்த கிணற்றடியில் பற்றுத் துலக்கிக் கொண்டிருந்த வேலைக்காரி ஓட்டமாய் ஓடி வந்தாள். ''சின்னையா வந்துவிடுவாராம்மா? ஆமாம், யாரும் கோர்ட்டுக்கு வரக்கூடாது என்று பெரிய ஐயா கண்டிப்பாய் உத்தரவு போட்டிருந்தாரே! துணிஞ்சு போனீங்களா, சின்னம்மா?''

''ஹா! பெரிய உத்தரவு! போடி சரிதான்!'' என்று உதட்டைச் சுழித்துவிட்டு உள்ளே ஓடினாள் மாயா.

சமையல் கட்டிலிருந்த அம்மா, சப்பாத்திக்கு மாவு பிசைந்த கையோடு புடவைத் தலைப்பை முழங்கையால் இழுத்துச் செருகிக் கொண்டு, புறங்கையால் நெற்றிக் கூந்தலை ஒதுக்கிக் கொண்டு பதறப் பதற வந்தாள். ''மூர்த்தியை விட்டு விட்டார்களா? நிஜமாகவா? தாயே, மீனாட்சி! வெள்ளி தவறாமல் உனக்கு நெய் விளக்குப் போடுகிறேனடி அம்மா!''

மாயாவுக்குக் கோபம் மூக்குக்குமேல் வந்தது. ''யார் சொன்னது உனக்கு? இந்த ஓட்டை வாய் முனியாண்டியா? உன்னை யாரடா சொல்லச் சொன்னது? அம்மாகிட்டே முதலிலே நான் சொல்லவேண்டும் என்று அத்தனை ஆசையாய் வருகிறேன். எல்லாவற்றை யும் கெடுத்து....''

''யார் சொன்னால் என்னடி மாயா? என் வயிற்றில் பால் வார்த்தாயே! இரு, சுவாமி சன்னிதியில் இரண்டு ஊதுவத்தி ஏற்றி நமஸ்காரம் பண்ணிவிட்டு வருகிறேன்!'' என்று உள்ளே திரும்பினாள் அம்மா.

முனியாண்டிக்குச் சின்ன எஜமானியைச் சாந்தப் படுத்த வேண்டுமென்ற தவிப்பு.

''சின்னம்மா!'' என்றான் மெல்ல.

''என்ன?''

''எனக்கு ஒரு பிரமாதமான யோசனை தோணுது! பெரிசாய் ஒரு ரோஜாப்பூ மாலை வாங்கி வைச்சிருந்து ஐயா வந்ததும் நீங்க போடுங்க! நாங்கள்ளாம் கை தட்டுகிறோம்! எப்படி!'' என்றான்.

''ஐடியா!'' என்று தன் உள்ளங்கையில் ஒரு குத்து வைத்துக் கொண்டாள் மாயா, தன் கோபத்தை அந்த நொடியே மறந்து. உள்ளே ஓடிப்போய்ப் பணம் எடுத்து வந்தாள். ''இந்தா ஐந்து ரூபாய்! பிரமாதமான மாலையாக இருக்கணும்! ஒரு அரளிப் பூ இருந்தது. ஒரு உழக்கு ரத்தம் வருகிற மாதிரி தலையில் குட்டுவேன்! ஓடு, ஓடு!'' என்று பணத்தை வீசினாள்.

வாசலிலேயே நின்று கொண்டாள், வைத்த கண்ணை எடுக்காமல் தெருவைப் பார்த்தபடி. முனியாண்டி தெருவெல்லாம் பரப்பிக்கொண்டே போனான் செய்தியை. அவன் மாலையை வாங்கி வரும் முன்னால் இவர்கள் வந்து விட்டால் என்ன பண்ணுவது என்ற தவிப்பு ஏற்பட்டுவிட்டது.

முனியாண்டி வந்துவிட்டான், மாலையும் கையுமாக.

காம்பவுண்டுச் சுவருக்குப் பின்னாலிருந்து, விரற்கடை அகலம் மல்லிகைப் பூ செருகிக் கொண்டிருந்த ஒரு தலை எட்டிப் பார்த்தது.

''ஏண்டி பெண்ணே, உன் அண்ணாவைக் கடைசியில் விட்டுவிட்டார்களாமே? கேஸ் ரொம்பப் பலமாயிருக்கிறது, தப்புவது ரொம்பக் கஷ்டம் என்று என்னென்னவோ சொன்னார்களே...''

மாயாவுக்கு ரோசம் வந்தது.

''நீங்களும் நானும் நினைக்கிறபடி கோர்ட்டிலே நடக்குமா, அத்தை? நியாயம் எது, நல்லவர்கள் யார்,

அயோக்கியர்கள், வயிற்றெரிச்சல்காரர்கள், பொறாமைக் காரர்கள் – இதெல்லாம் யார் என்பதைக் கண்டுபிடிக்கத் தானே ஆயிரக் கணக்கில் சம்பளம் கொடுத்து ஜட்ஜ் போட்டிருக்கிறார்கள்...''

மாயாவின் பேச்சு பாதியில் நின்றது.

ஆமாம். ஸ்டாண்டர்டு கார்தான். அவர்கள் வீட்டு வண்டிதான்.

அப்பாவே ஓட்டிக் கொண்டு வருகிறார்.

நடைக்கு ஒரு தாவுத் தாவி, ''அம்மா! அண்ணா வருகிறான்!'' என்று ஒரு குரல் கொடுத்துவிட்டு, திரும்பி வந்து அகட்டிப் பிரித்த ரோஜா மாலையுடன் தெருவுக்கே போய் நின்று கொண்டாள் மாயா. அண்டை வாசலில் பலபேர் நின்று வேடிக்கை பார்ப்பதையும் அதே சமயம் கவனித்து வைத்துக் கொண்டாள்.

அப்பா இறங்கினார். இறங்கிவிட்டார். கதவைப் படீரென்று சாத்தினார்.

கழுத்தை வளைத்து, நிமிர்த்தி, ஒடித்து, திருப்பி, எட்டெட்டுத் திசைகளிலும் புயல் வேகத்தில் பார்வையைச் சுழற்றினாள் மாயா.

''அப்பா!.... அண்ணா...''

அவர் முகம் ஏன் இப்படி உயிரற்று , ஒளியற்று, சவக்களை அடிக்கிறது?

''அண்ணாவுக்கு.... விடுதலையாகி வருகிறானே என்று...'' மாயாவின் தொண்டை அடைத்துக் கொண்டது. அக்கினித் திராவகத் துளிகள் குப்பென்று அவள் இமை விளிம்புகளில் கொப்புளித்தன.

''யாரடி சொன்னார்கள் அப்படி? பாவிப் பெண்ணே!'' என்று பல்லைக் கடித்தார் மாயாவின் அப்பா. ''உன்

அண்ணன் என் தலையில் கல்லைப் போட்டு விட்டான்! மூன்று வருஷம் ஜெயிலில் தள்ளி விட்டார்கள்!''

கத்தினாள் அம்மா.

''என்ன! என்ன சொன்னீர்கள்? மூர்த்தியை ஜெயிலில் போட்டு விட்டார்களா? என் குழந்தையையா...! ''

அப்பா உள்ளே கூடப் போகவில்லை. கிணற்றடியிலிருந்த துவைக்கும் கல்லின் மீது பொதேலென்று உட்கார்ந்தார்.

மேல் துண்டினால் வாயை அடைத்துக் கொண்டு விம்மி விம்மி அழலானார்.

''என்னடி மாயா இப்படி ஆகிவிட்டது?'' என்று ரொம்பப் பரிந்தவள் மாதிரி அடுத்த வீட்டம்மாள் மெனக்கெட்டு வீட்டைச் சுற்றிக்கொண்டு வந்து மாயாவை விசாரித்தாள். ''நல்லவர்களுக்கு இப்படி வரலாமோ? உலகத்திலே மோசக்காரர்கள், பொறாமைக் காரர்கள், வயிற்றெரிச்சல்காரர்கள் எல்லாம் சௌக்கிய மாய் இருக்க, தங்கமான பிள்ளை மூர்த்திக்கா இப்படி நேர வேண்டும்?''

அவள் பேச்சிலிருந்த குத்தல், மாயாவின் புண்பட்ட இதயத்தைப் பிய்த்துப் பிறாண்டி ரணகளமாக்கிற்று.

விக்கித்துக் போனவளாக, தெருப் படியிலேயே உட்கார்ந்து கொண்டாள் அவள். கையிலிருந்த ரோஜா மாலையை ஒவ்வோர் இதழாகப் பிய்த்துப் பிய்த்துத் தெருவில் எறிந்தன யந்திரமாகிவிட்ட கரங்கள்.

பூவிதழ் சாகச் சாக, தன்னை இப்படிக் குரூரமாக, கொடுமையாக ஏமாற்றி அவமானப்படுத்திய அந்த அறிமுகமில்லாத ஆண்பிள்ளையின்மீது அவளுக்கு ஏற்பட்டிருந்த ஆத்திரம் பல்கிப் பெருகிக் கோண்டே போயிற்று.

பலூன் வெடித்துச் சிதறிய பின்னரும் வெறும் நூலைப் பிடித்துக்கொண்டு நிற்கும் குழந்தையைப் போல, பூவை இழந்து நிற்கும் மூளி நாரை அவள் விடாமல் பற்றிக் கொண்டிருந்தாள்.

# 2

அருண் அதிக நேரம் சோர்வாய் இருக்கவில்லை.

தப்பான தகவலுடன் கோர்ட்டிலிருந்து சென்ற பெண்ணுக்கு என்னென்ன ஏமாற்றங்களும் அதிர்ச்சி களும் நேரிடுமோ என்றெண்ணிக் குழம்பியிருந்தவன், பத்மனாபனோடு பேசிய கொஞ்ச நேரத்துக்கெல்லாம் பழைய உற்சாகத்தைத் திரும்ப அடைந்தான்.

நண்பனிடம் வாக்களித்தபடி சினிமாவுக்கு டிக்கெட் வாங்கினான். தண்டையார்பேட்டையிலுள்ள தன் அறைக்குச் சென்றான். (சட்டக் கல்லூரிக்கு, நாலாவது நாளாக அன்றைக்கும் மட்டம்.) உடை மாற்றிக் கொண்டான். டாக்ஸி பிடித்தான். பத்மனாபன் வீட்டை அடைந்தான்.

எல்லாம் உற்சாகத்தோடுதான்.

தியேட்டரில் இடைவேளையில் 'டிரிங்க்' வர வழைக்கும்போது இந்த உற்சாகம் விடைபெற்றுக் கொண்டு போய்விடும் என்றோ பழைய வாட்டம் வந்துவிடும் என்றோ அவனுக்குத் தெரியுமா என்ன?

ஆனால் அப்படித்தான் நடந்தது.

டாக்ஸியை வெயிட்டிங் போடச் சொல்லிவிட்டு, பத்மனாபனின் வீட்டு வாசலில் இறங்கினான்.

வழியில் வாங்கிய தினசரியை விசிறிப் பிடித்துக் கொண்டு, நடையில் செருப்பை உதறி எறிந்துவிட்டு அட்டகாசமாக நுழைந்த அருண், உள்ளே நிலவும் அமைதியைக் கவனித்துத் திகைத்தான். திருவல்லிக் கேணியில் கடற்கரையைப் பார்த்த வீடாகையால் ஜிலுஜிலுவென்று வந்து கொண்டிருந்தது காற்று. ஆனால், அதனால்கூட வீட்டின் புழுக்கத்தைக் குறைக்க முடியவில்லை.

வட்ட மேஜையைச் சுற்றிலுமுள்ள பிரம்பு நாற் காலிகள் ஒன்றோடொன்று பிணக்கம் கொண்ட மாதிரி தலைக்கொரு திசையில் திரும்பியிருந்தன. பூச்சாடியில் இருந்த மலர்க்கொத்து வாட்டத்துடன் தலையைத் தொங்கப் போட்டிருந்தது.

அலுவலக அறையில், கனமான புத்தகங்கள் நிறைந்த பீரோக்கள் திறந்து கிடந்தன. மேஜை மீது கிடந்த பேப்பர் கட்டுகளை அடுக்கி வைக்க ஒரு முழு நாள் பிடிக்கும்.

பிரித்து வைத்த தாஸ்தாவேஜிகளை ஒரு கையால் புரட்டியவாறே, மறு கையால் டயரியில் குறித்துக் கொண்டிருந்தான் பத்மனாபன். நடுவே கிணுகிணுத்த டெலிபோனையும் எடுத்து, ''ஆமாம் சார்... எல்லாம் உங்கள் ஆசீர்வாதம்,'' என்று பதிலளித்தான்.

சமையலறையிலிருந்து ஸ்டவ்வுக்குக் காற்றடிக்கும் ஓசை கேட்டது. கல்யாணி வெளியே வரக்காணோம்.

''என்னப்பா இது? மணி ஆறடிக்கப்போகிறது! சினிமாவுக்குக் கிளம்புகிறவர்களா நீங்கள்? என்ன செய்து கொண்டிருந்தீர்கள் இதுவரை?'' என்று அருண் படபடத்தான்.

''எல்லாம் அவளால்தான்,'' என்று சமையலறையைக் கட்டினான் பத்மனாபன்.

''யாரானால் என்ன? கிளம்பு, கிளம்பு! இந்தா, இதைப் பார் முதலில்! காலையில் ஓர் ஆளைக் குளிப்பாட்டி, ஜம்மென்று உன் பெயர் வரும்படி நியூஸ் போடச் சொன்னேன்!'' அருண் தினசரியைப் பரப்பினான் மேஜைமீது.

மேலோட்டமாகப் பார்வையை வீசிவிட்டு, ''அவளிடம் காட்டு! அப்புறமாவது என் அருமை தெரியட்டும்!'' என்று இரைந்தே கூறிய பத்மனாபன் குரலைத் தாழ்த்தி, ''கல்யாணி என்னைக் கங்கிராஜுலேட் பண்ணவேயில்லை! அதனால் கொஞ்சம் அழ விடு கிறேன்,'' என்றான்.

''நல்ல கூத்தடிக்கிறீர்கள் இரண்டு பேரும்!'' என்று சொல்லிக்கொண்டே சமையல் கட்டுக்குச் சென்றான் அருண்.

கெரஸின் நெடி மூக்கைத் துளைத்தது. கல்யாணியின் கையில் கரி. முகத்தில் வியர்வை. தலையில் தூசு. புடவையெல்லாம் திட்டுத் திட்டாக ஈரம்.

''நாசமாய்ப் பேச்சு!'' என்று தலையில் அடித்துக் கொண்டான் அருண். ''உன் உடம்பை ஓவரால் பண்ண ஒரு வாரம் ஆகுமே கல்யாணி? அப்புறம் எப்போது கிளம்புவது? டிக்கெட்வேறே வாங்கிவிட்டேன். காலை யிலேயே நான் போன் பண்ணிச் சொல்லவில்லை?''

''நான் என்ன பண்ணட்டும்?'' என்று குரல் தழு தழுக்கப் பதிலளித்தாள் கல்யாணி. உயிர் நிறைந்த அந்த விழிகளின் முனையில், புல்நுனி பனித்துளி போல இப்போதோ அடுத்த வினாடியோ என்று தத்தளித்துக் கொண்டிருந்தது கண்ணீர்த்துளி.

''என்ன பண்ணட்டுமா? இத்தனைநேரம் என்ன பண்ணினாய் என்றுதான் கேட்கிறேன்!''

உரிமையுடன் வாய்விட்டு அருண் கோபித்துக் கொண்டதே அவளுக்குச் சமாதானமாயிருந்தது. ''நீங்களே சொல்லுங்கள். என் அத்தை பெண்ணுக்கு முதுகில் கட்டி என்று இன்றைக்கு ஆபரேஷன். 'யாரும் துணையில்லை, நீ வா' என்று அவசரமாய்ச் சொல்லியனுப்பினார்கள். அதுவும் எப்போது? நீங்கள் போன் பண்ணின ஐந்து நிமிடத்துக்கெல்லாம்! தலையைக் காட்டிவிட்டு வந்துவிடலாம் என்று ஜி.எச்.சுக்கு ஓடினேன். ஆபரேஷன் முடிந்து 'பெட்'டுக்கு அழைத்து வரவே மணி நாலாகி விட்டது. அதற்குமேல் டாக்ஸி கிடைக்காமல், ஆட்டோ கிடைக்காமல்..... ''

''சரி, சரி, சரி! நீ வாழ்த்தோ பாராட்டோ சொல்லவில்லையாம். வேண்டுமென்றே அவன் முறுக்குப் பண்ணுகிறான். நீ போய் டிரஸ் மாற்றிக்கொள்!''

''ஒரு டிபனாவது பண்ணித்- தரவேண்டாமா அவருக்கு? பாவம், காலையில் சாப்பிட்டவர்...''

''எல்லாம் மத்தியானம் டிபன் மூக்கைப் பிடிக்கக் கொட்டிக் கொண்டிருப்பான்! நீ போய், ஒரு உரிமட்டை நார் எடுத்து முகத்தையும் கை காலையும் சுரண்டிக் கொண்டு, ஒரு நல்ல நைலான் கந்தலாய்க் கட்டிக் கொண்டு வந்து சேர்!'' சொல்லிக்கொண்டே அருண் ஸ்டவ்வின் காற்றைத் திறந்து விட்டுவிட்டான். புஸ்ஸென்று அணைந்தது அது.

''ஐயையோ! அவருக்குக் காபியாவது தர வேண்டும்!''

''நீ போ முதலில், நான் செய்கிறேன் அந்த வேலையை.''

காக்கடாவைக் கெரஸினில் தோய்த்து ஸ்டவ் பற்றவைத்து, பாலைக் காய்ச்சியபோது, கல்யாணி முகம் கழுவிக்கொள்ள நுழைந்த குளியலறையிலிருந்து சோப்பின் நுரை ஓசையும் இனிய மணமும் வந்தன.

''கல்யாணி! காபிப் பொடி எந்த டப்பாவில் இருக்கிறது?'' சீட்டெழுதி ஒட்டியிருந்த டப்பாக்களைப் படித்து ஆராய்ந்து, புரியாமல் போன பிறகே கேட்டான் அருண்.

''கௌ அண்ட் கேட் டப்பாவில் இருக்கும் பாருங்கள்! நீல டின்! ''

அப்புறமும் தெரியவில்லை. ''பத்மனாபா! கௌ அண்ட் கேட் நீல டின்னாமே, உனக்குத் தெரியுமா?''

''அவளைச் சீக்கிரமாய்ப் பாத்ரூமைக் காலி பண்ணச் சொல்,'' என்றான் பத்மனாபன்.

''நம்மாலே காபி போட முடியாது. வெறும் பாலையே குடியுங்கள்,'' என்று அலுப்பாக ஸ்டவ்வை மறுபடி அணைத்துவிட்டான் அருண்.

''சார்! எத்தனை நேரம் வெயிட்டிங்? நாலு இடத்திலே சம்பாதிக்கப் போகிறவன் சார் நான்!''- டாக்ஸியோட்டி கெஞ்சலும் மிரட்டலும் சேர்த்துக் குரல் கொடுத்தான்.

''இதோ! இதோ!'' என்று அவனை வாசலுக்கு அனுப்பிவிட்டுத் திரும்பினான் அருண்.

''கங்கிராஜுலேஷன் சொல்லாதது தப்புத்தான்... மன்னியுங்கள்...'' என்று கணவனின் கையைக் குலுக்கிக் கொண்டிருந்தாள் கல்யாணி. டிரஸ்ஸும் பளிச்சென்று மாறியிருந்தது.

அருண் தொண்டையைக் கனைத்தான்.

**டா**க்ஸி தியேட்டரை நோக்கிப் பறந்து கொண்டிருந்தது. மீட்டரைக் கவனித்த கல்யாணி திடுக்கிட்டு, ''பார்த்தீர்களா அநியாயத்தை! ஏழே முக்கால் ரூபாய் ஆகியிருக்கிறது! இன்னும் எவ்வளவு ஆகுமோ?'' என்றாள்.

''நினைத்தால் வயிற்றெரிச்சலாய்த்தான் இருக்கிறது!''என்று உதட்டைப் பிதுக்கினான் அருண். ''ஒரு கார் வாங்கிவிட்டால் எவ்வளவு ஜாலியாய் நாம் மூன்று பேரும் சுற்றலாம்! அந்தஸ்தாய் இருக்கும், வாங்கு என்றால் உன் புருஷன் கேட்கிறானா!''

''அப்பனே! இருக்கிற அந்தஸ்து போதும்! நீ இவளைக் கிளப்பி வைக்காதே!'' என்றான் பத்மனாபன்.

பச்சை விளக்குக்காக டாக்ஸி சற்று நின்று புறப்பட்டது.

''சரி, உன்னை ஏன் காருக்குக் கெஞ்ச வேண்டும்? பார்த்துக்கொண்டேயிரு, நானே ஒன்று வாங்கிவிடுகிறேன்! '' என்றான் அருண்.

''டிக்கெட்டை என்னிடம் கொடுத்தீர்களோ? காணோமே?'' கல்யாணி கைப்பையைத் துழாவினாள்.

அருண் தலையில் அடித்துக்கொண்டு, ''போச்சா! டாக்ஸியைத் திருப்பி விடலாமா வீட்டுக்கு!'' என்றான்.

''இதோ இருக்கிறது,'' என்று கல்யாணி சிரித்தாள்.

பத்மனாபன், ''என்னவோ கீழே போட்டுவிட்டாயே?'' என்று ஒரு உறையை எடுத்துத் தந்தான்.

''மறந்தே போனேன்,'' என்ற கல்யாணி அருணிடம், ''நீங்கள் என்னை ஒரேயடியாய் ஆகாயத்தில் தூக்கி வைத்து பம்பாய் அண்ணிக்கு எழுதியிருந்தீர்களா? ஆயிரம் விதமாய் என்னைப் பாராட்டி, பத்துப் பக்கம் கடிதம் போட்டிருக்கிறார் எனக்கு! படிக்கவே கூச்சமாகி விட்டது!'' என்று குறைப்பட்டாள்.

''பின்னே என்ன? 'பத்மனாபனின் சம்சாரம் உன்னை அடிக்கடி கவனித்துக் கொள்கிறாளா?' என்று கேட்டிருந்தாள் என்னை. பதில் அனுப்பினேன் சுடச்சுட! 'டவுனில் ஒரு நாள் போலீஸ் அடிதடி, கலாட்டா என்று எல்லா

ஓட்டல்களும் மூடிவிட்டபோது, ராத்திரி பத்து மணிக்குக் கரியரில் சாப்பாடு எடுத்துக் கொண்டு மெனக்கெட்டு ஆட்டோ ரிக்ஷா வைத்துக் கொண்டு தண்டையார் பேட்டை வந்து, தன் கையாலேயே சாப்பாடு பரிமாறி விட்டுப் போனவளாக்கும் எங்கள் கல்யாணி!' என்று எழுதிப் போட்டேன்!''

''அட, எனக்குக் கூடத் தெரியாதே!'' என்றபோது பத்மனாபனின் குரலில் வியப்பு தொனித்தது.

தியேட்டருக்குள் நுழைந்தபோது படம் ஆரம்ப மாகியிருந்தது. ஆகவே இடைவேளை வரை பேச வாய்ப்பு இருக்கவில்லை, படத்தைப் பற்றி இரண்டொரு கிசுகிசுப்பு விமரிசனங்களைத் தவிர.

வெட்டுக்கிளியின் பாய்ச்சலைப் போல் குபுக்கென்று ஒளி வெள்ளம் பாய்ந்தது தியேட்டரில். புகைப்பதற்காக எழுந்தவர்களும், விற்பதற்காக நுழைந்தவர்களும் உரசி நெருக்கினார்கள்.

''ட்ரிங்க்!'' என்று கூப்பிட்டான் அருண்.

''ஊஹூம்! எனக்கு வேண்டாம். இவருக்கு மட்டும் வரவழையுங்கள்,'' என்றாள் கல்யாணி.

''ஐயையோ! இவள் என்னப்பா இப்படி வயிற்றைக் காயப்போடுகிறாள்?'' என்று நண்பனிடம் முறை யிட்டான் அருண். ''கல்யாணத்தின்போது இவள் அப்பா அம்மா அத்தனை பேரும் என்னிடம் மாப்பிள்ளை கொஞ்சம் முரடாம். எங்கள் கல்யாணி கண்ணைக் கசக்காமல் நீங்கள்தான் பார்த்துக் கொள்ள வேண்டும்' என்று மன்றாடினார்களே? நானும் சம்மதித்தேனே! என்ன பதில் சொல்வேன் அவர்களிடம்?''

பத்மனாபனும் கல்யாணியும் கடகடவென்று சிரித்தார்கள். காரணம் அருணின் அண்ணிமார்கள்தான்

கல்யாணியிடம் ''எங்கள் அருண் தாயில்லாப் பிள்ளை; நீ கவனித்துக் கொள்ளம்மா,'' என்று சொல்லியிருந்தார்கள்.

இடைவேளை இசைத் தட்டுக்களின் ஒலி காதைத் துளைத்தது.

பத்மனாபன் நீட்டிய ஐந்து ரூபாய் நோட்டைக் கண்டு, குளிர் பானம் கொணர்ந்த பையன், ''சில்லறை இல்லை சார்,'' என்று இளித்தான்.

''நான் தருகிறேன்,'' என்று அருண் கொடுத்தான்.

**மா**யாவின் நினைவு அருணை மீண்டும் அரிக்கத் தொடங்கியது, சில்லறைப்பற்றிய பேச்சு வந்த அப்போது தான்.

''என்ன யோசனை?'' என்றான் பத்மனாபன்.

''ஒன்றுமில்லை.''

''சும்மா சொல்லு.''

கண்ணாடி கிளாசை மடியில் ஏந்திக் கொண்டான் அருண். ''வெற்றியைக் கொண்டாட நாம் சினிமாவுக்கு வருகிறோம். டிரிங்க் சாப்பிடுகிறோம். இதே நேரத்தில், ஜெயிலுக்குப் போனவனுக்கும் ஒரு அம்மா, அப்பா, தங்கை என்று இருப்பார்கள் அல்லவா? அவர்கள் என்ன பாடு பட்டுக் கொண்டிருப்பார்கள்? அதை நினைத்தாயா?''

''பிரமாதம் போ!'' என்றான் பத்மனாபன் கேலியாக. ''ஜெயிலுக்குப் போனவனின் மோசடியினால் எத்தனை குடும்பம் துன்பத்தில் சிக்கியிருக்கும்! அதைப் பாரேன் கொஞ்சம்! இவன் அழுவானே, அவன் மனைவி விதவை யாவாளே என்று பார்த்தால், நீதி என்ன ஆகிறது?''

அருண் மௌனமாய் இருந்தான்.

இசைத்தட்டு நின்று, விளக்குகள் பெரும்பாலும் அணைந்து, ஸ்லைடுகள் திரையில் தோன்றின.

பத்மனாபன் சொன்னான். ''ஜெயிலுக்குப் போனவனின் குடும்பத்தைப் பற்றி நான் நினைக்க ஆரம்பித்தால், கல்யாணி நைலக்ஸ் கட்டிக்கொள்ள முடியாது. ஈரத்துணிதான் கட்டிக் கொள்ள வேண்டியிருக்கும்!''

கல்யாணி அருணிடம், ''என்ன உங்களுக்கு திடீரென்று இந்த எண்ணமெல்லாம்? கோர்ட்டில் அந்தக் குற்றவாளியைப் பார்த்தீர்களா?'' என்று கேட்டாள்.

''அப்பீலாயிற்றே? அவன் வரமாட்டான்,'' என்றான் அருண். ''அவன் தங்கையாம்.. ஒரு பெண்.. எல்லோரையும் விட்டுவிட்டு என்னைப் போய் 'தீர்ப்பு என்ன ஆயிற்று' என்று விசாரிக்க, நான் மென்று விழுங்க, தன் அண்ணன் விடுதலை ஆகிவிட்டான் என்று நினைத்துக் கொண்டு அவள் குதூகலமாக ஓடிவிட்டாள்!''

''பார்த்தாயா கல்யாணி? இவன் அனுதாபமெல்லாம் ஆளைப் பொறுத்துத்தான்!'' என்றான் பத்மனாபன். ''குற்றவாளியின் தங்கையைப் பார்க்காமல் பாட்டியைப் பார்த்திருந்தால் இப்படிப் பேசுவானா!''

'உஸ்!' என்று பின்னாலிருந்து உரையாடலுக்குக் கண்டனம் வந்தது, படம் ஆரம்பித்து விட்டதால்.

கல்யாணி தாழ்ந்த குரலில், ''எனக்குக்கூட அந்தப் பெண்ணை நினைத்தால் பரிதாபமாய் இருக்கிறது. மறுபடி சந்திக்க நேர்ந்தால் நம் வீட்டுக்கு அழைத்து வாருங்கள்'' என்றாள்.

அருண் பத்மனாபனுக்கு மட்டும் கேட்கும்படி, ''எங்கே அப்படி நேரப் போகிறது? அவள் விலாசமே எனக்குத் தெரியாதே!'' என்றான்.

''உஸ்!'' என்று பத்மனாபனே அதட்டினான் இப்போது.

படம் விட்டது.

''பாவம், டாக்ஸியோ பஸ்ஸோ பிடித்துக் கொண்டு தண்டையார்பேட்டை வரையில் போகவேண்டுமே நீங்கள்,'' என்று இரக்கப்பட்டாள் கல்யாணி.

''பேசாமல் எங்களோடு வந்து சாப்பிட்டுவிட்டு, படுத்துக் கொண்டுவிடேன். காலையில் எழுந்து நேரே காலேஜுக்குப் போய்க் கொள்ளலாம்,'' என்று அழைத் தான் பத்மனாபன்.

''இந்தக் கட்டைக்கு, தண்டையார்பேட்டையைத் தவிர வேறிடத்தில் தூக்கம் வராது,'' என்றான் அருண். ''ஹூம்! சொந்தக் கார் வாங்குகிற வரையில் இந்தக் கஷ்டம்தான்!'' பேசிக் கொண்டேயிருந்தவன், தன்னைத் தாண்டிச் சென்ற ஒரு நபரைப் பார்த்தும், ''ஐயா நரசிம்மலு!'' என்று சட்டையைப் பிடித்து இழுத்தான்.

''நமஸ்காரம் சார்!'' என்று கும்பிட்டார் அந்த அரை வழுக்கை.

''நினைத்த இடத்திலே, நினைத்த நேரத்திலே காட்சியளித்து விட்டீரே! கார் ஒன்று வேண்டும்! ஒரு செகண்ட் ஹாண்ட் வண்டி இருந்தால் சொல்லு, ஐயா!''

நரசிம்மலு ஒரு கார் தரகர் என்று தெரிந்து கொண் டார்கள் கல்யாணியும் பத்மனாபனும்.

''ஐயாவுக்கு இல்லாத வண்டியா? என்ன விலை யிலே இருக்கலாம்?'' என்றார் நரசிம்மலு.

''சும்மா இரண்டு, மூன்று...''

''நீங்க ஒண்ணு! அதிலே ஏறினால் உங்க மதிப்பு என்ன ஆவது? அஞ்சாவது ஒதுக்கங்க! அண்ணாத்தை களுக்கு ஒரு ஆறு பைசா கார்டு போட்டால் கதறிக்கிட்டு வருது பணம்!'' என்று திட்டம் கொடுத்து, வழியும் காட்டினார் நரசிம்மலு.

மரியாதைக்குரிய அண்ணாத்தைமார்களுக்கு,

அன்புள்ள, அனாதைத் தம்பி, சென்னையிலிருந்து எழுதுவது. உங்களை வாரம் ஒரு தடவைக்குமேல் உபத்திரவப் படுத்துவதில்லை என்று எவ்வளவோ உறுதியாயிருந்த போதிலும், சந்தர்ப்பம் இப்படி நேரிட்டுவிடுகிறது.

ஒரு நாளாவது நேரத்தோடு காலேஜ் போக முடிய வில்லை. தினமும் லேட்தான். நான் எஃப் எல் வகுப்பைத் தாண்டாமலே இருப்பதன் மர்மம் இதுதான். பஸ்ஸில் (அது கிடைத்தால்) போய், பஸ்ஸில் வருகிற நேரத்துக்கு எத்தனை பாடங்களைப் படிக்க முடியும்! அத்தனை நேரமும் வேஸ்ட்!

இந்தச் சின்னப் பையனின் படிப்புக்கும், சௌகரி யத்துக்கும் மதிப்புக் கொடுத்து, ஒரு கார் வாங்குவதற்குப் பணம் அனுப்பி உதவுமாறு கேட்டுக் கொள்கிறேன். நான் படித்துத் தேறி, சொந்தமாகச் சம்பாதிக்கத் தொடங்கியதும் இந்தத் தொகையைத் திருப்பியனுப்பி விடுகிறேன்.

பரிதாபத்துக்குரிய
கடைத்தம்பி,

அருண்.

நகல்:

1. சிவராம், பிலாய்.
2. ராம்கிஷண், பெங்களூர்.
3. ஜி.கே. சேது, பம்பாய்.
4. மேஜர் சந்திரநாத், புதுடில்லி.
5. நாராயண், ஹைதராபாத்.

அருண் கடிதத்தை ஒருமுறை படித்துப் பார்த்து விட்டுக் கவரில் வைத்து ஒட்டினான். எதிர்ச்சாரியில்,

பால் டெப்போவுக்குப் பக்கத்திலிருந்த தபால் பெட்டியில் தானே கொண்டு போய்ப் போட்டான்.

ஒரு வார காலம் வரையில் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுத்து இருந்தான் அருண். பிலாயில் உள்ள பெரிய அண்ணாவான சிவராம்தான் பதில் தயாரிப்பது வழக்கம். அது அடுத்த அண்ணாக்களின் பார்வைக்குச் சென்று, கையெழுத்தாகி வரும்.

எதிர்பார்த்ததே போல் எட்டாம் நாள் பதில் வந்தது.

சிரஞ்சீவி அருணுக்கு,

அனேக ஆசீர்வாதம்.

உன் கடிதம் கிடைத்தது. நீ காலேஜுக்கு லேட்டாகப் போகிறாய் என்று கேட்க வருத்தமாய் இருந்தாலும், போகிறாய் என்பதே மகிழ்ச்சிக்குரியதாய் இருந்தது. நீ அது கூடச் செய்வதில்லை என்பது பலர் அபிப்பிராயம்.

நிற்க. நீ கடந்த நாலு ஆண்டுகளாக கன்னாபின்னா வென்று செலவழித்துக் கொண்டு, வாழ்க்கையில் ஒரு லட்சியமும் இல்லாமல் காலமோட்டுவதை நாங்கள் அடிக்கடி கண்டித்து வருகிறோம். படிப்பில் நிஜமான அக்கறை உண்டென்றால் நீ ஹாஸ்டலில் அல்லவா சேர வேண்டும்? எங்கேயோ ரூம் வைத்துக் கொண்டு, போகவரத் திண்டாடுவானேன்? கார் வேண்டுமென்று நீ கேட்பதெல்லாம் வெறும் ஜம்பத்துக்குத்தான். இந்த மாதிரி விஷயங்களில் உனக்கு இடம் கொடுப்பதில்லை என்று முடிவுபண்ணிவிட்டோம். இந்தத் தடவை உனக்குத் துளியும் சலுகை கிடையாது. நீ தலைகீழாய் நின்றாலும் சரி. ஐயாயிரம் ரூபாய் தொலையட்டும் என்று இத்துடன் செக் வைத்திருக்கிறோம். இதற்கு மேல் ஒரு பைசா தர முடியாது. உன் எதிர்காலத்தைப் பற்றி மிகுந்த அச்சம் கொண்டுள்ள,

சிவராம், ராம்கிஷண், ஜி.கே.சேது, மேஜர் சந்திரநாத், நாராயண்.

அருணுக்குக் கண்ணீருடன் புன்னகை பிறந்தது – அண்ணன்களின் கண்டிப்புக் காட்டத் தெரியாத வாஞ்சையை நினைக்கையில்.

நரசிம்மலு சுத்தச் சோம்பேறி என்பது அருணின் அபிப்பிராயம். அதைப் பொய்ப்பித்து விட்டார் அவர்.

வேலையை ஒப்படைத்த நாலாம் நாளே, அருணின் வீட்டு வாசலில் ஓர் 33-ஆம் வருடத்து மாடல் நின்று கொண்டிருந்தது.

''இதுவா விற்பனைக்கு?'' – ஜன்னல் வழியே பார்த்த அருணுக்கு மூச்சு நின்றது.

''அது விற்பனைக்கு இல்லைங்க. நம்ம சொந்த வண்டி,'' என்று அபயமளித்துவிட்டு, ''வாங்க போகலாம்,'' என்று அருணை அழைத்தார், நரசிம்மலு.

''எங்கே?''

''அட வாங்களேன், காட்டறேன்,'' என்று கூறி, கைப்பிடியாகத் தன் வாகனத்தில் ஏற்றிக் கொண்டார் நரசிம்மலு.

சென்னைப் பட்டணத்தின் இன்னொரு கோடியை அடைந்து விட்டோமோ என்றெண்ணும் அளவுக்குக் கார் பிரயாணம் நீண்டது.

கடைசியில் வேகம் குறைந்தது. காரின் உறுமலும் லேசாயிற்று.

''என்னவோ முடையிலே இருக்கிறாங்களாம். என்ன பிஸினஸ் நஷ்டமோ என்னவோ தெரியலை,'' என்றார் நரசிம்மலு.

''அப்படியானால் ரொம்பச் சீப்பாய்த் தட்டி விடலாம். கார் வாங்க இஷ்டமேயில்லாத மாதிரி நான் நடிக்கிறேன் பாரும்,''என்றான் அருண்.

கார் நின்றது. நரசிம்மலு உள்ளே சென்றார்.

அருண் இறங்கி நின்று கொண்டான்.

தரகர் திரும்பி வந்தார். ''வீட்டுக்குப் பெரியவர் உள்ளே இருக்கிறார். என்னவோ வெளியே வரப் பிரியப்படவில்லை. காரை காட்டும்படி பெண்ணை அனுப்பியிருக்கிறார். வர்றாங்க.''

அருண் நிமிர்ந்தான்.

வீட்டுக்குள்ளேயிருந்து மாயா வந்து கொண்டிருந்தாள்.

# 3

மாயா!

வெளிர் பச்சைத் தாவணியின் தலைப்பை நெருடிய படி அவள் தலை குனிந்து வந்து கொண்டிருப்பதைக் கண்டான் அருண். அவனுடைய உஃளம் படபடத்தது.

''இவர்தானம்மா,'' என்றார் நரசிம்மலு. ''லா காலேஜில் படிக்கிறார், ஊம், தண்டையார்பேட்டை. தினசரி போக வர ரொம்பச் சிரமமாய் இருக்கிற தென்று சொன்னார். நம்ம வண்டி சின்னதாய் சௌகரிய மாய் இருக்குமென்று அழைத்து வந்தேன்.''

''வணக்கம்,'' என்று கை குவித்தபோது அருணுக்கு நா குழறிற்று. மாயா அவனை ஏறெடுத்துப் பார்த்தாள். மின்னலடித்தாற்போல் சினம் அவள் முகத்தில் தோன்றிய கணத்தில் மறைந்தது. சமாளித்துக்கொண்டவளாய், குரலில் எவ்வித உணர்ச்சியும் புலப்படாதபடி, நிதான

மாக, ''காரைப் பார்க்கலாமே? அதோ இருக்கிறது'' என்று முன்னே நடந்தாள்.

'கொள்ளை அழகு மட்டுமல்ல, அழகுக்கு மேற் பட்ட இன்னொரு சக்தியும் இந்தப் பெண்ணிடம் இருக்கும் போலும்,' என்ற எண்ணம் அருணுடைய உள்ளத்தில் ஒரு நெகிழ்ச்சியை ஏற்படுத்திற்று.

முந்தின தினம் லேசாகத் தூறியிருந்ததால் ஈரமாகி யிருந்த மண்ணில் சின்னப் பாதங்கள் சுவடேற்படுத்த மாயா முன்னே சென்று கொண்டிருந்தாள். முழுதும் பின்னிக்கொள்ள நேரமில்லாததுபோல் கூந்தலைப் பாதியில் நிறுத்தி, நிறுத்திய இடத்தில் ஒரு சிவப்பு மலரைச் செருகி, வெள்ளை ரிப்பனால் அரண் அமைத் திருந்ததைப் பார்த்துக் கொண்டே, அருண் தரகருடன் பின் தொடர்ந்தான்.

பிரத்யேகமான 'ஷெட்' இல்லை. சாதாரணக் கீற்றுக் கொட்டகையில்தான் வண்டி நிறுத்தப் பட்டிருந்தது.

காரை அடைந்ததும், ''இதுதான்,'' என்றாள் மாயா. பின்னர் கையைப் பின்புறம் கோத்துக்கொண்டு, இரண்டடி தள்ளி நின்று கொண்டாள்.

நரசிம்மலு, ஸ்டியரிங் பக்கத்துக் கதவைத் திறந்து உள்ளே குனிந்து நோக்கினார். மைலேஜ் விவரத்தைப் பார்த்து, காரின் வயதைச் சுட்டிக்காட்டும் நோக்கத்துடன், ''நிறைய ஓடியிருக்கிறதே?'' என்றார்.

அருண் குறுக்கிட்டு ''இது அப்படி ஒன்றும் அதிக மில்லை சார்,'' என்றான்.

கண்ணால் அவன் காட்டிய சாடையைப் புரிந்து கொள்ளாத தரகர், ''ஒரு ட்ரையல் விட்டுப் பார்த்துவிட வேண்டியதுதானே?'' என்று கேட்டார்.

''எதற்கு அனாவசியமாய்? வண்டி நல்ல கண்டி ஷனில் இருப்பது பார்த்தாலே தெரிகிறதே!'' என்றான் அருண்.

''எதற்கும் நன்றாய் டெஸ்ட் பண்ணி விடுங்கள். பின்னாடி, குறை சொல்லக் கூடாது,'' என்று கூறி, சாவியைக் கொடுத்தாள் மாயா.

அருண் அதைப் பெற்றுக் கொண்டு, ஏறி அமர்ந்தான். அவனுக்கு நரசிம்மலு மீது ஒரே எரிச்சல். நாகரிகம் தெரியாத மனிதர்! பாவம், அந்தப் பெண் இருக்கும் மன நிலையில் அனாவசியமாகத் தொல்லை கொடுக்கலாமா?

ஆனால், தரகர் மாயாவிடம், ''நீங்களும் வருவது தான் நல்லது,'' என்று வாதாடி அவளைக் காரில் ஏற்றிக் கொண்டபோதோ! நரசிம்மலுவைக் கட்டித் தழுவிக் கொள்ளலாம் போலிருந்தது அருணுக்கு.

கார் தெருவுக்கு வந்தது.

''இந்த மாடல் இப்போது – பார்த்து பார்த்து! – என்னமாய் குறுக்கே ஓடுகிறான், பாருங்களேன்! – இப்போதெல்லாம் கிடைப்பதேயில்லை,'' என்று காரைப் புகழ்ந்து வைத்தார் நரசிம்மலு, காற்று அடிக்கும் திசையை ஒருவாறாகப் புரிந்து கொண்டு.

''இந்த வண்டி எனக்குக் கிடைத்தது அதிர்ஷ்டம் தான்,'' என்றான் அருண்.

அவளுடைய குரலைக் கேட்க வேண்டும் போலிருந்தது அவனுக்கு.

ஷெனாய் நகருக்குள் புகுந்து வெளிவந்தது கார். பழைய பாதையில் திரும்பியது.

''எப்படி? சுகமாயிருக்குதா ஓட்ட?'' என்று நரசிம்மலு விசாரித்தார்.

''ஓ! பிரமாதம்! வண்டி எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது, இவ்வளவு நல்ல வண்டி ஸெகண்ட் ஹாண்டிலே எங்கே கிடைத்தது?'' என்றான் அருண்.

முதல் முறையாக மாயாவின் முகத்தில் மலர்ச்சியும் கனிவும் ஏற்பட்டன: ''அண்ணாவுக்கு இதனிடம் தனி அக்கறை... கண்ணுக்குள் வைத்துக் காப்பாற்றுவதால் இப்படி இருக்கிறது,'' என்றாள்.

கார் வீட்டுக்குள் நுழைந்து நின்றது. சாவியைக் கழற்றி மாயா கையில் கொடுத்தான்.

''விலையைப் பற்றி....''

அருண் முடிக்கவில்லை. அடுத்த வீட்டுப் பக்கத்திலிருந்து ஒரு கச்சல் பெண்மணி, ''ஏண்டியம்மா மாயா,'' என்று; கூப்பிட்டுக்கொண்டே வந்தாள்.

''காரை விற்கப் போகிறீர்களாமே? இப்பத்தான் வேலைக்காரன் முனியாண்டி சொன்னான்.'' அந்தப் பெண்மணியின் புடவைத் தலைப்பு கண் முனையோடு உறவாடி ஈரமாயிற்று. ''என்னவோ அம்மா, மனிதர்களுக்குக் கஷ்டங்கள் வருவது சகஜம்தான். ஆனாலும் ஈசுவரன் உங்களை ரொம்பத்தான் சோதனை பண்ணுகிறான்...''

அறையலாம் போலிருந்தது அருணுக்கு. வேலை வைக்காமல், வார்த்தையாலேயே கொன்றுவிட்டாள் மாயா.

''என்ன அத்தை பண்ணுவது? போன வருஷம் கிராமத்திலேயிருந்த வீட்டையும் நிலத்தையும் நீங்கள் விற்றீர்களே, எப்படியோ மனசைத் தேற்றிக் கொள்ளவில்லையா? அப்படி நாங்களும் தேற்றிக் கொள்ள வேண்டியதுதான்,'' என்று வெடுக்கென்று மாயா பதிலடித்ததும் –

''அம்மாவைப் பார்த்துவிட்டு வருகிறேன்,'' என்று அவள் உள்ளே நழுவிவிட்டாள்.

சபாஷ் என்ற மனதுக்குள் மெச்சிக்கொண்டான் அருண்.

''ரெஜிஸ்திரேஷனை மாற்றித் தரும்படி கடிதம் டைப் அடித்துத் தயாராய் வைத்திருக்கிறோம். பெயர், விலாசம் முதலானதைப் பூர்த்தி செய்ய வேண்டியது தான். எடுத்து வரட்டுமா?'' என்று மாயா கேட்டாள்.

''ஓ,'' என்றான் அருண்.

''ரொக்கமாகக் கொண்டு வந்திருக்கிறீர்களா?''

''ஆமாம். ஐம்பது நூறு ரூபாய் நோட்டாக வைத்துக் கொண்டிருக்கிறேன், ஹாண்ட் பாக்கில். சரிதானே?''

''ஐயாயிரமா? ஆறுக்குக் குறைந்து நாங்கள் விற்ப தாக இல்லையே,'' என்றாள் மாயா.

நரசிம்மலு உடனே, ''பெரிய ஐயாவோடு முன்னேயே பேசிவிட்டேனே? ஐந்துக்கு ஒப்புக் கொண்டிருந்தாரே?'' என்றார்.

அருண் அவரை அமர்த்தினான்: ''பரவாயில்லை, நரசிம்மலு. ஆறாயிரம் தாராளமாய்த் தரலாம். நான் போய் எடுத்து வருகிறன் குறைகிற தொகையை. இப்போது இதை வைத்துக் கொள்ளுங்கள்.''

பணத்தைப் பெற்றுக் கொள்ள மாயா தயங்கினாள்.

''பரவாயில்லை. நான் பாக்கியையும் கொண்டு வந்து கொடுத்துவிட்டு, காரை எடுத்துப் போகிறேன்,'' என்ற அருண் நோட்டுக் கற்றையை அவள் கையில் திணித்தான். அந்த விரல்கள்தான் எவ்வளவு மென்மை யாக, மல்லிகை மொட்டுப்போல் இருந்தன!

''ஒரு வேண்டுகோள்,'' என்றாள் அவள்.

''சொல்லுங்களேன். கட்டாயம் செய்கிறேன்,'' என்றான் அருண்.

''இந்தக் கார், என் அண்ணா மூர்த்தி ரொம்பப் பிரிய மாக வைத்துக் கொண்டிருந்தது. அதனால் எனக்கும் இதனிடம் பிரியம் ஜாஸ்தி.'' மாயா அருணை நிமிர்ந்து முழுமையாகப் பார்த்தாள். ''அண்ணா மீது அபாண்ட மான பழி விழுந்து, எங்கள் போதாத காலம், அவருக்குத் தண்டனை கிடைத்திருக்கிறது.''

நரசிம்மலு பாவம், ஒன்றும் புரியாமல், திருதிரு வென்று விழித்தார். அருணோ, மாயா என்ன சொல்ல முனைகிறாள் என்பதை ஊகிக்க முடியாமல் தவித்தான்.

மாயா தொடர்ந்தாள்: ''காரை நீங்களே வைத்திருக்க வேண்டுமே தவிர, இன்னொருத்தருக்கு விற்றுவிடக் கூடாது.''

நரசிம்மலு குறுக்கிட்டு, ''அது எப்படியம்மா...'' என்று ஆரம்பித்தார். ''இருங்கள், சொல்லி முடிக்கட்டும். நாம் ஏன் இன்னொருவருக்கு விற்கிறோம்?'' என்று அருண் அவரை அடக்கினான்.

''என்றைக்காவது ஒருநாள், நானே சம்பாதித்து. ஆறாயிரம் ரூபாய் சேர்த்து எடுத்துக்கொண்டு உங்களிடம் வந்தாலும் வருவேன். அப்போது காரை எனக்கே திருப்பி விற்றுவிடவேண்டும்,'' என்று முடித்தாள் மாயா.

நரசிம்மலு அருணின் முகத்தைப் பார்த்தார். ''அதற் கென்ன, அப்படியே செய்கிறேன்,'' என்று அருண் வாக்களித்ததும் மாயா போய்விட்டாள்.

''என்ன சார் இது! அவங்க கேட்கிற தொகைக்கும், நிபந்தனைக்கும் தலையாட்டி விடுவதா! வயசுப் பெண் என்பதால் இறங்கி விட்டீர்கள்!'' என்று நரசிம்மலு குறை கூறினார். ''நாளைக்கே ஒன்று இரண்டு கூட

வந்தால் நாம் விற்றுவிடுகிறோம். இவர்கள் என்ன நம் கையைப் பிடித்துத் தடுப்பது?''

,'':எனக்கெதற்கு பிஸினஸ் நரசிம்மலு?'' என்று சிரித்தான் அருண். ''உம் தொழிலிலே நான் போட்டிக்கு வரலாமா?''

''என்னவோ செய்யுங்கள்,'' என்று சூள் கொட்டினார் நரசிம்மலு. ''நான் நாளைக்கு வந்து பார்க்கிறேன் உங்களை. இன்னேரம் டி. நகரில் இருக்க வேண்டியவன்.''

''ரைட்டோ!'' என்று தரகருக்கு விடை கொடுத்தான் அருண்.

**க**ணவன் வருகிற நேரம்.

பாத்ரூமில் முகம் கழுவிக் கொண்ட பிறகு, வளையல்களையும் கம்மலையும் கழற்றி, சோப்பு நுரையில் சுத்தம் செய்து கொண்டிருந்தாள் கல்யாணி. தரையில் வழுக்கல் அதிகமாகிவிட்டது. சுண்ணாம்புத் தண்ணீர் தெளித்துத் தேய்க்கும்படி வேலைக்காரியிடம் சொல்ல வேண்டும்..

கதவைத் தட்டும் ஓசை.

கையைக் கழுவிக் கொண்டு பரபவென்று எழுந்து வந்தாள் கல்யாணி. வாசல் கதவைத் திறந்தாள்.

உள்ளே வந்த அருண், அவள் முகத்தைப் பார்த்ததுமே, ''கோரம், கோரம்! முகத்தை நன்றாய்த் துடைத்துக் கொண்டு வா! சீக்கிரம்! ஒரு விஷயம் இருக்கிறது!''

கல்யாணி கண்ணாடியைப் பார்த்துக் கொண்டாள். நெற்றியின் ஓரத்திலும், செவிகளின் மேல் புறத்திலும், பால் பாத்திரத்தில் தங்கிய ஏடு போல, சோப்பின் திவலைகள் வரியிட்டிருந்தன.

சிரித்தபடி பாத்ரூமுக்குச் சென்று முகத்தை நன்றாய்ச் சுத்தம் செய்து கொண்டு வந்தாள். ''என்ன அப்படித் தலைபோகிற சமாசாரம்?''

''ஓர் ஆயிரம் ரூபாய் கொடு. அவசரமாக வேண்டியிருக்கிறது.''

''ஆயிரமா!'' கல்யாணி யோசித்தாள்.

''எல்லாம் இருக்கும், பார். அப்பறம் விவரம் சொல்கிறேன்.''

கல்யாணி ஸ்டீல் பீரோவைத் திறந்தாள். ''பாங்குக்குக் கூட இனிமேல் நேரமில்லையே... அவ்வளவு தொகை அவர் வைத்திருப்பது கிடையாது.. அட! இருக்கிறதே! ஆனால் எந்தக் கட்சிக்காரனின் பணமோ?'' அவள் ஓர் உறையை எடுத்தாள்.

''நான் கேட்டு, இல்லையென்றுகூடச் சொல்லி விடுவாயா? கொண்டா இப்படி!'' அருண் கை நீட்டினான்.

கல்யாணி எண்ணிப் பார்த்து, ''சரியாய் ஆயிரம் இருக்கிறது. ராசிக்காரர்தான். ஆனால் காரணத்தைச் சொல்லாத வரையில் கால் பைசா பெயராது!'' என்று உறையைப் பின்புறம் மறைத்துக் கொண்டாள்.

''காரணம்தானே? இன்னும் முக்கால் மணி நேரம் பொறு! நாலு சக்கரம், ஒரு என்ஜின், இரண்டு ஸீட்டுடன் காரணம் இதே வாசலில் வந்து நிற்கும்!'' என்ற அருண், சடக்கென்று பணத்தைப் பறித்துக் கொண்டான்.

''காரா!'' கல்யாணியின் முகம் மலர்ந்த மலர்ச்சி!

''காரேதான்! டிரஸ் பண்ணிக் கொண்டு ரெடியாயிரு! அந்த மடையன் வந்தால் அவனையும் இருக்கச் சொல். காரோடு வருகிறேன். மெரினாவில் ஒரு டிரைவ் அடித்த பிறகுதான் சாப்பாடு!''

அருண் திரும்ப மாயாவின் வீட்டை அடைந்த போது இருட்டிக் கொண்டிருந்தது. வாசல் புறம் யாரையும் காணவில்லை.

உள்ளே போய் பார்த்துவிடலாம்.

நடையில் செருப்பைக் கழற்றிப் போட்டுவிட்டு, எட்டிப் பார்த்தான். ஹாலில் வெறும் ஊஞ்சல், காற்றில் அசைந்து கொண்டிருந்தது. சுவரில் பல கர்னாடகமான படங்கள் மூட்டை பூச்சி மாதிரி அடைந்திருந்தன.

அடுத்த அறையில் பேச்சுக் குரல் கேட்டது. மெது வாகப் பார்த்தான். நரைத் தலையானாலும் அழகாகக் கிராப் வாரிக்கொண்டிருந்த ஒரு பெரியவர் ஒரு சோபாவில், ஏகப்பட்ட தலையணைகளுடன் சாய்ந்த நிலையில் உட்கார்ந்திருந்தார். அவர்தான் ராஜப்பா - மாயாவின் தந்தை – போலும்.

சற்றுத் தள்ளி, பிரம்பு நாற்காலியில் ஒரு காலைக் குந்திக் கொண்டு உட்கார்ந்திருந்த மனிதர், தமிழரா தெலுங்கரா என்று தெரியவில்லை. ஆனால் தமிழில் வெடுக்கென்று பேசினார்: ''அட வேணாம் அம்மா எனக்கு! கொடுத்தா மொத்ததையும் கொடு! இல்லாட்டா மொத்தத்தையும் எப்படி வசூல் பண்ணணுமோ அப்படிப் பண்ணிக்கிறேன்! எட்டாயிரத்துக்கு, ஐயாயிரம் தர்றாங் களாம், ஐயாயிரம்! கத்தரிக்காய் வியாபாரமா, என்ன?''

அப்போதுதான் அருண் கவனித்தான்.

மாயா அவரிடம் நோட்டுக் கற்றையை நீட்டிக் கொண்டிருந்தாள். சற்றுமுன் அருண் கொடுத்த அதே கட்டு.

மாயாவின் அப்பா, ''ஊரிலிருந்து பணம் வர வேண்டும். கட்டாயம் அடுத்த மாதத்திலே பாக்கியையும் தந்து விடுகிறேன், '' என்று மென்று விழுங்கினார்.

''இன்னும் கூட உங்களை நம்பச் சொல்றீங்க? ஒரு நாளும் மாட்டேன்! நாளை ஒருநாள் போனால் போகிறதென்று டயம் தர்றேன்! அவ்வளவுதான்!''

அருண் நடைக்குத் திரும்பி வந்து நின்று கொண்டு, ''ஸார்!'' என்று குரல் கொடுத்தான். மாயா வெளியே வந்து அவனைப் பார்த்ததும் உள்ளே சென்றாள். அவள் கண்கள் கலங்கியிருந்த விதம், அருணை என்னவோ செய்தது.

சற்றைக்கெல்லாம் 'ஸி' சர்டிபிகேட், இன்ஷ்யூரன்ஸ், டிரான்ஸ்ஃபர் கடிதம் முதலியவற்றைத் தந்தவளிடம், ''ரொம்ப நன்றி. மீண்டும் உங்களைச் சந்திக்க முடியு மென்று நம்புகிறேன்,'' என்றவாறு, பணத்தைத் தந்தான் அருண்.

மாயா அதிகம் பேசுகிற நிலையில் இல்லை. வீட்டுக்குள் சென்று விட்டாள்.

காரைக் கிளப்பிய அருண், இரண்டு வீடுகள் தள்ளி, தெரு ஓரமாக வண்டியை நிறுத்திக் கொண்டான்.

**அ**வன் எதிர்பார்த்தபடியே ஐந்து நிமிடத்துக் கெல்லாம் அந்தக் 'கடன்காரர்' மாயாவின் வீட்டிலிருந்து வெளிப்பட்டு வந்தார்.

''சார்! இப்படி வாருங்கள்! நம் வண்டியிலே போய்விடலாம்,'' என்று அருண் அழைத்தபோது அவருக்கு ஏற்பட்ட திகைப்பு!

''மிஸ்டர் ராஜப்பாவின் வீட்டில் உங்களைப் பார்த்தேன். நீங்கள் என்னைக் கவனிக்கவில்லை..... ஏறிக் கொள்ளுங்கள்.'' பக்கத்துக் கதவைத் திறந்து விட்டான் அருண்.

''அதுவும் சரிதான். அயோக்கியப் பசங்க வூட்டுக்கு வந்ததற்குப் பஸ் காசாவது மிச்சமாய் இருக்கட்டும்.''

அருண் காரைச் செலுத்திக்கொண்டே நேரடியாக விஷயத்தில் இறங்கினான். ''என்ன பண்ணினார்கள் அப்புறம்? மொத்தப் பணத்தையும் கேட்டீர்களே, கொடுத்தார்களா?''

''எங்கேங்க? சுத்த மோசடிக்காரக் கும்பல்!'' என்று அவர் திட்டலானார்.

''எவ்வளவு தரவேண்டும்?''

''வட்டியும் முதலுமாய் எட்டாயிரமுங்க. ஐயாயிரம் இன்னைக்குத் தர்றாங்களாம். மிச்ச மூவாயிரம் அடுத்த மாசம் தர்றாங்களாம்.''

எழும்பூர் மேம்பாலத்தை நெருங்கிக் கொண்டிருந் தார்கள் இருவரும். டிராபிக் கான்ஸ்டபிள், ஒரு கையைச் சட்டைக்குள் விட்டு முதுகைச் சொறிந்தவாறே, இன் னொரு கையால் அருண் திரும்புவதற்கு அனுமதி தந்தார்.

''கையில் பணம் இருந்தால் கொடுக்க மாட்டார் களா?'' என்று பரிந்தான் அருண்.

''நீங்க ஒண்ணு!'' என்றவர், காருக்குள்ளேயே சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு, அருணின் செவியருகில் கிசுகிசுத்தார். ''ஜெயிலுக்குப் போனானே பிள்ளை, பெரிய எத்தன் அவன்! மோசடி பண்ணின பணத்தைப் பத்திர மாய்ப் பதுக்கி வைச்சிருப்பான். அந்தச் சமாசாரம் அப்பனுக்குத் தெரியுமோ, தெரியாதோ, பெண்ணுக்கு நல்லா தெரியும்.''

''மாயாவுக்கா?''

''ஆமாம். அண்ணன்கிட்டே ரொம்ப இது உண்டு அதற்கு. நிச்சயமாய், அவன் எங்கே தொகை வைச்சிருக் கிறான் என்று அந்தப் பெண்ணுக்குத் தெரியும். தெரிஞ் சிட்டே நம்மகிட்டே வேஷம் போடுது. நானா ஏமாறு வேன்?''

அருண் கொஞ்ச நேரம் மௌனமாக ஓட்டினான். பிறகு: ''உங்களுக்கு எங்கே வீடு?'' என்று கேட்டான்.

''இதோ, இங்கே சிந்தாதிரிப்பேட்டை.''

''தெரு?''

''சோத்துக்கை பக்கம் திரும்பினால் நாலாவது வீடு. ஏனுங்க சிரமம், பாவம்....''

காரை வீட்டு வாசலில் நிறுத்தினான் அருண். தானும் இறங்கிக் கொண்டான்.

சாவியைக் கழற்றி அவர் கையிலே கொடுத்தான்.

''காரை வைத்துக் கொள்ளுங்கள். மாயா வீட்டிலிருந்து வர வேண்டிய பணத்துக்கு இது ஈடு!''

''என்னங்க இது?'' பிரமிப்பில் அவருக்கு மாரடைத்தது.

''பரவாயில்லை. அவர்களிடம் ஐயாயிரத்தை இன்று வாங்கிக் கொள்ளுங்கள். மிச்சம் மூவாயிரத்துக்கு இது ஜவாப். அது கிடைத்த பிறகு காரை என்னிடம் திருப்புங்கள்..'' அருண் அவர் முகத்தை நோக்கினான்: ''அதுவரையில் தயவு செய்து மாயாவைப் பற்றி அவதூறாய் எதுவும் சொல்லாமல் இருங்கள்!''

# 4

அம்மா மூக்கைச் சிந்திக்கொண்டிருந்தாள்.

மாயா கையில் விண்டு வைத்திருந்த தோசை உதட்டருகிலேயே நின்றது. வேதனையுடன் பொழுது விடிவதென்பது இப்போது அன்றாட நிகழ்ச்சியாகி விட்டது.

பலகாரத் தட்டை நகர்த்தி வைத்து விட்டு. தாயை அணைத்துக் கொண்டாள் மாயா.

''என்னம்மா நீ, இப்படி அழுது கொண்டு! அப்புறம் நானும் அழுது கொண்டு பட்டினி கிடக்க ஆரம்பித்து விடுவேன்! ஆமாம்.''

''கோபிக்காதேடி பெண்ணே!'' என்று கண்ணைத் துடைத்துக் கொண்டாள் தாய். ''அந்தப் பாவிப் பிள்ளைக்கு ஊரிலேயில்லாத தனி ருசி. தோசைக்குப் போய் நெய்யும் சர்க்கரையும் தொட்டுக் கொள்வான்! அதை நினைத்துக் கொண்டேன்.''

''எங்கே போய்விட்டான்? இன்னும் கொஞ்ச நாளிலே என் தோசையிலே பங்கு கேட்க வந்துவிட மாட்டானா?'' என்று சிரித்தாள் மாயா. ஆனால் எஃகுத் தளத்தில் மல்லிகையைப் பூக்க வைக்கிற மாதிரி, துயர மேறிய உள்ளத்திலிருந்து அந்தச் சிரிப்பைக் கொண்டு வருவது எத்தனை கடினமாயிருந்தது!

அம்மாவின் சந்தோஷத்துக்காக மிச்சப் பலகாரத்தையும் விழுங்கிவிட்டு, தட்டிலே கை கழுவினாள். தாவணித் தலைப்பில் உதட்டை அழுத்தித் துடைத்த போது, மென்மையான கன்னச் சருமங்களில் குப்பென்று செம்மை தோன்றி மறைந்தது.

அப்பாவுக்காக எடுத்து வைத்திருந்த காபியை எடுத்துக் கொண்டு அவர் அறையை அடைந்தாள்.

'இடிந்த மனிதன்' என்ற தலைப்புக்குப் பொருத்த மான ஒரு சிற்பத்தைச் செய்ய எந்தச் சிற்பியாவது தவித்துக் கொண்டு இருந்திருப்பானேயானால் அந்த அறையின் பிரம்பு நாற்காலியில் ஆறடி சரீரத்தை இரண்டடியாகக் குறுக்கிக்கொண்டு ஒண்டிக் கிடக்கும் அந்த மனிதர், மிக அருமையான மாடலாக அமைந் திருப்பார்.

முன்கோபக்காரர், கண்டிப்பு மிருந்தவர், கறார்க் காரர் என்றெல்லாம் எந்தத் தந்தையிடம் மாயா அஞ்சி நடுங்குவாளோ, அவர் இப்படிக் கூசிக் குறுகிக் கிடப் பதைக் காணக் காண மாயாவின் உள்ளத்தை வேதனை அரித்தது.

கோர்ட்டிலிருந்து திரும்பி, கிணற்றடியில் உட் கார்ந்து விம்மினாரே, அன்றைக்கே பழைய தந்தையைத் தான் இழந்து விட்டோம் என்று மாயா உணர்ந்தாள். அந்த இழப்பைத்தான் அவளால் பொறுக்கக் கூட வில்லை.

''காபி சாப்பிடுங்கள் அப்பா,'' என்ற குரல் கேட்டு, கைகளில் புதையுண்டிருந்த தலையை விடுவித்தார் ராஜப்பா. ''வாசல் பக்கம் யாராவது இருக்கிறார்களா, மாயா?''

''யாருமில்லை. என்ன வேண்டும் உங்களுக்கு?''

''தோட்டத்தில் கொஞ்சம் உலவலாம் என்று பார்க்கிறேன். நிச்சயமாய் யாருமில்லையே?''

''இல்லையப்பா,'' என்று மகள் மீண்டும் உறுதி யளித்ததும் கதவுக்கு வெளியே கிடந்த கான்வஸ் செருப்பை மாட்டிக்கொண்டு, சுவரைப் பிடித்தபடியே, காலைத் தேய்த்துத் தேய்த்து நடந்து வாசல்புறம் சென்றார் அவர்.

சுவரிலிருந்த நிலைக்கண்ணாடியில் தூசு அடைந் திருந்தது. வேலைக்காரனை நிறுத்தியதன் விளைவு. வெறும் கையினாலேயே துடைத்தாள் மாயா.

தந்தை அமர்ந்திருந்த பிரம்பு நாற்காலியில் தலை யணைகள் குழிந்து சுருங்கியிருந்தன. கூச்சத்துடன் அறைக்குள்ளே வந்த மெல்லிய காற்று, தலையணை உறையின் நாடாக்களைப் படபடக்க வைத்துக் கொண் டிருந்தது.

காபி டபராவைக் கிணற்றடியில் கழுவுவதற்காக வெளியே வந்தாள்.

எங்கே அப்பாவைக் காணோம், தோட்டத்தில்? வாசல் கேட் திறந்திருக்கவில்லை. சாத்தியிருந்தது.

விதவையாகிவிட்ட கார் ஷெட்டின் பக்கம் பார்வை திரும்பியபோது, பின்புறம் கைகளைக் கட்டிக்கொண்டு நின்றிருக்கும் தந்தையின் உருவம் புலப்பட்டது.

தெருவில் யாரோ அட்டகாசமாய்ச் சிரித்துக் கொண்டு சென்றார்கள். அண்டை அயல் ரேடியோக்கள் கும்மாளமான இசையை வாரி இறைத்துக் கொண்டிருக் கின்றன.

மாயாவுக்குக் குமுறிக்கொண்டு வந்தது துக்கம். ஆனந்தமயமான உலகத்தில் இந்த ஒரு வீடு மட்டும் கண்ணீரில் நனைய வேண்டும் என்றிருக்கிறதே!

''உள்ளே வாருங்கள், அப்பா!'' என்று அவரது வலுவான கரங்களைப் பரிவோடு பற்றினாள் மாயா. எவ்வளவு மெலிந்து விட்டார் அப்பா!

தேவதனையோடு கோபமும் ஏற்பட்டது அவளுக்கு.

வீட்டின் எந்தப் பக்கம் திரும்பினாலும் கண்ணீர்! ஆனால் அதைத் துடைப்பதற்கு யார் என்ன செய்கிறார்கள்? ஒன்றுமில்லை. கையாலாகாத வெறும் புலம்பல்.

''ஏன் அப்பா, மூர்த்தியண்ணாவின் விடுதலைக்கு அடுத்த நடவடிக்கை ஒன்றும் எடுக்காமல் எல்லாரும் கையைக் கட்டிக்கொண்டிருந்தால் எப்படி?''

''நீ ஒன்று!'' என்று புன்னகைத்தார் ராஜப்பா. தாயின் தூண்டுதலினால் புன்னகை செய்யும் நோயாளிக் குழந்தையைப் போல எத்தன்ன சோகைப் புன்சிரிப்பு அது! ''என்ன வழியுண்டோ அத்தனையும் பார்த் தாயிற்றம்மா! அவ்வளவுதான் நம் தலைவிதி!''

''உங்கள் வாயால் அப்படிச் சொல்லாதீர்கள் அப்பா! வக்கீலை மறுபடி கேட்டீர்களா?''

''யார், ஜகதீசன்தானே? கிட்டே நெருங்காதே என்று சொல்லிவிட்டார். எந்தப் பாயிண்ட்டும் இனிமேல் கிடையாதாம்!''

''ஆமாம், கண்டார்! நான் போய்க் கேட்கிறேன்! திருவல்லிக்கேணியில்தானே அவர் வீடு? முன்னேகூட ஒரு தரம் உங்களோடு...''

''மாயா!'' என்று ராஜப்பா ரொம்ப நாளைக்கப்புறம் குரலை உயர்த்தினார். ''நீ ஒரு இடத்துக்கும் போக வேண்டாம். சும்மா இரு! நமக்கெல்லாம் வெளியே தலைகாட்ட யோக்கியதைகூட இருக்கிறதா?''

அவரை எதிர்த்துச் சொல்ல முடியாமல் மாயாவின் உதடுகள் படபடத்தன. கடைசியில் அப்பாவும் அல்லவா ஊரார் கட்சியில் சேர்ந்துவிட்டார்!

வீட்டுக்குள் திரும்பிய மாயா தலையை ஒற்றைப் பின்னலாக அவசர அவசரமாய்ச் சரி செய்து கொண்டாள். சாந்துப் புட்டியில் குச்சியைக் காணோம். நக நுனியால் ஒரு கீறலிட்டுக் கொண்டாள். மிளகாய்ப் பழ நிறத்தில் கறுப்புக் கரையிட்ட தாவணி அவளுக்குப் பிடித்தமானது. சலவை மடிப்புக் கலைந்திருந்தாலும், பளிச்சென்று இரண்டு தரம் உதறிவிட்டு அணிந்து கொண்டாள். சிறிய நீலநிற டம்பப் பையில் கொஞ்சம் சில்லறை எடுத்துப் போட்டுக் கொண்டு ஜன்னல் வழியே பார்த்தாள்.

அப்பாவின் தலையைக் காணோம். விடுவிடு வென்று வெளியேறினாள்.

''**வா**ம்மா. உட்கார்.''

மெத்தை தைத்த நாற்காலியை ஆக்கிரமித்திருந்தன, இரண்டு கனமான சட்டப் புத்தகங்கள், அவற்றைத்

தூக்கி மேஜை மீது வைத்துவிட்டு, தாவணியை இழுத்துப் போர்த்துக் கொண்டு உட்கார்ந்தாள் மாயா.

லாயர் ஜகதீசன் தலைப்பாகையைச் சரியாகக் கட்டிக் கொள்ளக் குமாஸ்தாவின் உதவியை அந்தச் சமயம் நாடியிருந்தார். அமர்ந்திருந்தது சுழல் நாற்காலி. ஆகவே, அவர் குரல் விட்டு விட்டு, வெவ்வேறு திசையிலிருந்து கேட்டது. ''அப்பா ஏதாவது காரியமாய் அனுப்பினாரா?''

''இல்லை, சார். நானாகத்தான் வந்தேன்.''

''நீயா! உனக்கு - காதை மடக்காதீர், ஓய்! - உனக்கு என்ன காரியம்?''

''அண்ணா விஷயம்தான்.''

''த்சு. ரொம்பத் துரதிருஷ்டம் போ. ஹூம். நானும் எவ்வளவோ பிரயாசைப் பட்டேன்....''

''இன்னொரு தரம் பார்த்து விடுங்கள், சார். எங்கள் குடும்பமே மூர்த்தி அண்ணா இல்லாமல் நடுத்தெருவில் நிற்கிறது. தயவு பண்ணுங்கள், சார்.''

''ஐயய்ய, நீ என்ன பச்சைக் குழந்தை மாதிரி பேசு கிறாய்?'' என்று ஜகதீசன் சிடுசிடுத்தார். கட்டி முடித்த தலைப்பாகையை மரப் பீரோவின் நிலைக் கண்ணாடியில் சரிபார்த்துக் கொண்டு, ''எல்லாம் உன் தகப்பனாரோடு பேசியாகிவிட்டது, அம்மா. இனிமேல் வழியில்லை என்றுதான் விட்டுவிட்டோம்.''

''வேறு ஏதாவது பாயிண்ட்டில் அப்பீல் பண்ண முடியாதா, சார்?''

''எனக்குக் கோர்ட்டுக்கு நேரமாகிறது. வழி விடு.''

''சார்....''

''ஏன் வீண் பேச்சு? இன்னொரு தரம் எல்லாக் குப்பையையும் கிளறுவதானால் அதற்கு ஏகப்பட்ட

பணம் செலவாகும். உங்களால் அது இனிமேல் முடியாது. விடு. யாரடா அது? கார் ரெடியா?... போய் வாம்மா.''

உள்ளம் எரிமலையாய்க் குமுற, தெருவுக்கு வந்தாள் மாயா.

சிந்தனையுடன் நடக்க நடக்க, அவள் உறுதி அதிகரித்தது.

''இந்த ஜகதீசன் இல்லாவிட்டால் ஆயிரம் ஜகதீசன்!''

தெருவில், பல வீடுகளின் காம்பவுண்டுகளில் மாட்டப்பட்டிருந்த 'பி.எல்.' போர்டுகள் அவளை வேடிக்கை பார்த்தன.

ஒரு லாயர்! ஒரே ஒரு வழக்கறிஞர்! அவள் துன்பம் அறிந்து, சுமையை ஏற்கத் துணிவுள்ள ஒரு வக்கீல்!

அவர் எங்கே இருப்பார்? எப்படிக் கிடைப்பார்?

மாயா நடந்து கொண்டிருந்தாள்.

''**நே**ற்று சாயந்தரம்தான் பிர்மாதமாய் முஸ்தீபு பண்ணிவிட்டு, புசுக்கென்று ஏமாற்றி விட்டீர்கள்! இப்போதாவது ஏதாவது புரோகிராம் உண்டா?'' என்று கல்யாணி வினவினாள், ''சீக்கிரம் சொல்லுங்கள். காலை டிபன் தயாரிப்பதா வேண்டாமா என்று நான் முடிவு செய்ய வேண்டும்!''

''நீ ஒன்று!'' என்ற அருண், பத்மனாபனிடம் பேச்சைத் தொடர்ந்தான்.

''பாவம், அவர்கள் குடும்பத்தை நினைத்தாலே கஷ்டமாயிருக்கிறது. எவனோ ஒரு கடன்காரன். பத்தாயிரம் பாக்கியாம். தற்செயலாய்க் கவனித்தேன். நான் கொடுத்த தொகையை மாயா – அதுதான் அந்தப் பெண் – கொடுத்தாள் அவனிடம். மொத்தத்தையும்

கொடு என்று நாக்கில் நரம்பில்லாமல் பேசினான். அவனைக் கொண்டு போய் அவன் வீட்டு வாசலில் விட்டு விட்டு, காரையும் நிறுத்திவிட்டு, 'வைத்துக் கொள்ளய்யா இந்த வண்டியை!' என்று கொடுத்து விட்டு, நடையிலேயே திரும்பவிட்டேன் என் ஜாகைக்கு. பஸ்ஸுக்குக் கூடச் சில்லறை இல்லை!''

கல்யாணி அவன் கால்களை அனுதாபத்தோடு நோக்கினாள்.

பத்மனாபனின் முகபாவம், அருண் சொல்லச் சொல்ல மாறிக் கொண்டே வந்தது. அவன் முடித்ததும், ''ரசீது வாங்கிக் கொண்டாயா?'' என்று சுருக்கமாய்க் கேட்டான்.

''என்ன ரசீது?''

''நான்ஸென்ஸ்!'' என்று வட்ட மேஜையை ஓர் அறை அறைந்துவிட்டு எழுந்தான் பத்மனாபன். ''ஒரு பக்கா கிரிமினலின் தங்கை! அவளுக்காக நீ அனுதாபம் காட்டினதே முதல் மடத்தனம்...''

''நீ என்ன, குடும்பம் மொத்தமே ஜெயிலுக்குப் போனால்தான் திருப்திப்படுவாய் போலிருக்கிறதே!'' என்று அருண் குறுக்கிட்டான்.

பத்மனாபனின் குரல் இறங்கியது.

''சரி, இன்னும் எத்தக் கிரிமினல்களுக்கு வேண்டு மானாலும் வாரியிறை! ஆனால் பண்ணுகிற தருமத்தை மூளையோடு பண்ணு! யாரோ ஒரு பெண்ணுக்காகப் பிரமாதமாய்த் தியாகம் செய்துவிட்டதாக நினைத்துக் கொண்டிருக்கிறாய். அது அவளுக்குத் தெரியாமல், அவளுக்கு உபயோகமில்லாமல் கூடப் போய்விடுமே!''

அருண் குறுக்கிட்டு, ''தெரிய வேண்டும் என்று நான் நினைத்திருந்தால் அவளிடமே நேரில் காரையோ

பணத்தையோ கொடுத்திருப்பேனே!'' என்றான் ரோசமாக. "இல்லையா கல்யாணி?" என்று சாட்சிக்கழைத்ததும் அவள் கடமை தவறாமல் தலையாட்டினாள்.

''அது புத்திசாலித்தனமாயும் இருந்திருக்கும்!'' என்றான் பத்மனாபன். ''இப்போது, இந்த ஆள், எவனோ ஒரு மோசடிப் பேர்வழி என்று வைத்துக் கொள். கிரிமினல் வீட்டோடு சம்பந்தம் வைத்திருந்தவன் என்ன மகா யோக்கியனாக இருந்திருக்கப் போகிறான்? அவனிடம் ஒரு சீட்டு நாட்டு வாங்கி வைத்துக் கொள்ள வேண்டாம்?''

கல்யாணி இருவர் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தபடி தரையில் உட்கார்ந்தே விட்டாள், முழந்தாளைக் கட்டிக்கொண்டு.

''இப்போது என்ன செய்ய வேண்டும் என்கிறாய்?'' அருண் பரிதாபமான குரலில் கேட்டான்.

''நீ ஒன்றும் செய்ய வேண்டாம். நான் போய்ப் பண்ண வேண்டிய பந்தோபஸ்தைப் பண்ணிக் கொள்கிறேன்.''

''இதோ பார்! அந்தப் பெண்ணுக்கு மனதார நான் செய்த உதவி அது. கடன்காரனின் தொல்லை தாங்காமல் அவள் தவித்தபோது நீ பார்த்திருந்தால்—''

''அடடா! என்ன கரிசனம்?'' என்றாள் கல்யாணி.

''ஆக்வே, காரைத் திருப்பி வாங்கிக் கொண்டு வரக்கூடாது அந்த ஆளிடம்!''

''அட, மாட்டேனப்பா! இன்னாருக்காக, இன்ன கடனுக்காகப் பெற்றுக் கொண்டதாக ரசீதும், தொகை கிடைத்ததும் திருப்பித் தருவதாக எழுத்து மூலம் வாக்குறுதியும் வாங்க வேண்டாம்? அதைச் செய்கிறேனே!''

''அப்படியானால் சரி.''

''சிந்தாதிரிப்பேட்டைக்காரரின் வீட்டு அடையாளத்தைச் சொல்லு.''

''நானும் வருகிறேனே?'' என்று புறப்பட்டான் அருண்.

''மூச்! காலேஜில் ஒரு கிளாஸுக்காவது போய் எத்தனை ஜன்மமாகிறது? ஊருக்கு எழுதிக் கார் வரவழைத்துக் கொள்வதில் குறைச்சல் இல்லை! மணி பத்து! பிடி ஓட்டம்! மற்றதை நான் பார்த்துக் கொள்கிறேன்!''

''உள்ளே வந்து ஏதாவது சாப்பிட்டு விட்டுப் போங்கள்,'' என்று அருணை அழைத்தாள் கல்யாணி.

சிந்தாதிரிப்பேட்டைக்காரர் பத்மனாபனின் அதட்டல் மிரட்டலுக்கு முதலில் அஞ்சவில்லை. ''எனக்குப் பணம் தரவேண்டியவங்க ஒருத்தர். அதற்காகக் காரை ஈடு கொடுத்தவர் இன்னொருத்தர். இரண்டு பேருக்கும் சம்பந்தமில்லாமல் நீங்கள் யார்?'' என்றார்.

தான் யார், எப்படிப் பட்டவன் என்பதை பத்மனாபன் நாலைந்து வாக்கியங்களில் சுருக்கமாக விவரித்தானோ இல்லையோ, சிந்தாதிரிப்பேட்டையாரின் சிந்தை கலங்கியது.

''சார்!'' அவன் கையைப் பிடித்துக் கொண்டார். ''ஜெயிலுக்குப் போனானே ஒரு அயோக்கியன், அந்தக் குடும்பம் மொத்தமும் ஒரு தகல்பாஜி கும்பல் சார்! பாருங்க, எனக்குப் பத்தாயிரம் வரணும்... இல்லாவிட்டால் உங்க சினேகிதர் கார் கொடுத்ததும் வாங்கிக் கொள்வேனா? சாவிதானுங்களே, இதோ! கார் அதோ!''

''நல்ல வக்கீலாகப் பிடித்துப் பணத்தை வசூல் பண்ணப் பாருங்கள்,'' என்று அறிவுரை வழங்கி விட்டுக் காரில் அமர்ந்தான் பத்மனாபன்.

திருவல்லிக்கேணிக்காகத் திரும்பினான்.

வெய்யில் ஏறிக் கொண்டிருந்தது. ஆனால் ஓட்டும் அலுப்பே தெரியவில்லை என்பதில் பத்மனாபனுக்குத் திருப்தி. அருண் எதில் ஏமாந்தாலும் இதில் ஏமாற வில்லை. அந்தப் பெண் பெரிய ஆளாய்த்தான் இருக்க வேண்டும். சிந்தாதிரிப்பேட்டைக்காரன் கூடச் சொல் கிறானே! சரியான கிரிமினல் குடும்பம்! இந்தக் காரைக் கூட நாளைக்கு நல்ல கம்பெனிக்கு அனுப்பி, காலோடு தலை ஆராயச் சொல்ல வேண்டும்...

சட்டென்று நின்றுவிட்டது கார். எஞ்சினை உயிரூட்டினான், உறுமியது. ஆக்ஸிலரேட்டரில் கால் வைத்ததும் மறுபடி மௌனமாயிற்று.

இறங்கி, பானெட்டைத் திறந்து பார்த்தான். ஓட்டத் தெரியுமே தவிர, காருக்கு வரும் நோய்களைப் பற்றி அவனுக்கு அதிகம் தெரியாது. நடமாட்டம் அதிகமான காலை வேளை. பக்கத்தில் பஸ் ஸ்டாப். போவோரும் வருவோரும் நின்று வேடிக்கை பார்ப்பது எரிச்ச லூட்டியது.

எதிர்ச்சாரியில் நின்றிருந்த ஒரு பெண் பத்மனாபனின் கவனத்தைக் கவர்ந்தாள். அந்த நீண்ட விழிகளைக் குறுக்கிக் கொண்டு அவள் எதை உற்று உற்றுப் பார்க் கிறாள்?

பத்மனாபன் தன் உடைகளை ஆராய்ந்தான். தோள்புறம் ஒட்டியிருந்த ஒரு சிறு இலைச் சருகைத் தட்டிவிட்டான்.

அதன்பின்னும் அவள் கூர்ந்து கவனித்தவாறுதான் இருந்தாள்.

இப்போது சாலையைக் கடந்து வருகிறாள். அவள் புருவம் நெற்றிக்கு ஏறுகிறது, அவனைப் பார்த்ததும்.

''யார் இந்தப் பெண்?'' என்று திகைத்தான் பத்மனாபன். தாவணியின் கறுப்புக்கரை அவளது சிவந்த பாதத்தை எப்படி எடுத்துக் காட்டுகிறது! நெற்றியில் ரொம்ப லேசாகப் பொட்டு வைத்திருந்தாள் போலும். கலைந்துவிட்டது.

காரின் முன்னே வந்து நம்பர் பிளேட்டைப் பார்த்தாள். பிறகு சந்தேகம் தீராதவளாக, பின்புறமும் சென்று பார்த்தாள்.

''என்ன வேண்டும் உங்களுக்கு?'' என்று பத்மனாபன் பொறுக்க மாட்டாமல் கேட்டுவிட்டான்.

''கார் உங்களுடையதா?'' என்று திருப்பிக் கேட்டாள் அவள்.

''இல்லை. என் சிநேகிதனுடையது, இரவல் வாங்கி வந்தேன் . ஏன்?''

அவள் முகம் மலர்ந்தது. ''அதுதானே பார்த்தேன்!'' என்றாள். பின்னர் பானெட்டைத் திறந்து, குனிந்து கொண்டாள்.

பத்மனாபனிடம், ''உள்ளே ஏறி அமர்ந்து ஸ்டார்ட் செய்யுங்கள்,'' என்று கூறினாள்.

திகைத்தான் பத்மனாபன், ''உங்களுக்கு... நீங்கள்...''

''ப்ளீஸ்! சொன்னபடி செய்யுங்கள். ரொம்ப நேரமாய்க் கஷ்டப்படுகிறீர்களே?''

பத்மனாபன் பேசாமல் காருக்குள் ஏறி, ஸ்டார்ட் செய்தான். அவள் என்ன செய்தாளோ, இந்தத் தரம் ஆக்ஸிலரேட்டரை அழுத்தியபோது எஞ்ஜின் ஆஃப் ஆகவில்லை.

''நன்றி-'' பத்மனாபன் வெளியே பார்த்தான்.

அவள் திரும்பிப் போய்க் கொண்டிருந்தாள்!

''உங்களைத்தானே! நீங்கள் யார், என்னவென்று சொல்லாமலேயே போகிறீர்களே?''

அவள் நின்று, பார்த்தாள்.

உடம்பை முறுக்கினாற்போல் பாதி திரும்பியதால், அவளுடைய தோள், கழுத்து, இடை ஆகியவற்றின் முழுச் செழுமையும் வளமையும் வெளிப்பட்டன.

அவளது அழகு பத்மனாபனை மெய்சிலிர்க்க வைத்தது.

# 5

ஓடித் திரிந்த மதயானை அலுத்துக் களைத்து ஓய்ந்தாற்போல, சென்டிரல் ஸ்டேஷனில் வந்து நின்றது பெங்களூர் மெயில். டிரைவர் பிளாட்பாரத்தில் குதித்து இறங்கி, ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு, எஞ்ஜினின் முகத்தைப் பார்த்துப் புன்னகை செய்தார் - தாமதமின்றி வந்து சேர்ந்ததைப் பாராட்டுவது போல.

விடிந்ததும் விடியாததுமான அந்த வேளையில், பிளாட்பாரத்து நீல விளக்குகள் சோகையான வெளிச்சத்தைப் பரப்பிக் கொண்டிருக்க, தேனீக் கூட்டைக் கலைத்து விட்ட மாதிரி ஒரே வினாடிக்குள் பரபரப்பும் கூச்சலும் சந்தடியும் அங்கே மிகுந்தன.

முதல் வகுப்புப் பெட்டியைக் கடந்து செல்கிறவர்கள் மட்டும் - எத்தனை அவசரமானப் போய்க் கொண்டிருந்தாலும் சரி - ஒரு முறை திரும்பிப் பார்த்து விட்டுச் சென்றார்கள்.

அவர்களைக் கவர்ந்தது இருபது வயது மங்கையல்ல. ஐம்பது வயது ஆண்பிள்ளைதான். ஆறடி உயரமும், அதற்கேற்ற சுற்றளவும், கறுப்பும் நரையும் சரிசமமாய்க்

கலந்த அடர்த்தியான மீசையும் கொண்டிருந்த அவர், மிக நேர்த்தியாகத் தைக்கப்பட்டிருந்த நீல நிற ஸூட்கேஸ் இருந்தது. கோட்டின் இடது பக்கத்து மேல் பையில், கையகலமுள்ள ஒரு நோட் புத்தகமும், அதிலேயே செருகப்பட்டுள்ள சிறு பென்சிலும் தென் பட்டன.

பரபரவென்று இங்குமங்குமாக ஓடிக் கொண்டிருந்த ரயில்வே அதிகாரிகளில் ஒருவர் அவர் அருகில் வந்து, ''தங்களுக்கு ஏதாவது உதவி தேவையா?'' என்று மரியாதையுடன் விசாரித்தார்.

ஸூட்காரர் அப்போதுதான் உதட்டில் ஒரு சிகரெட்டைச் செருகிக் கொண்டு, பளபளவென மின்னும் தங்க முலாம் பூசிய லைட்டரால் பற்ற வைத்துக் கொள்ளவிருந்தார். இரண்டையும் திரும்பக் கோட் பைக்குள் போட்டுக் கொண்டு நோட் புத்தகத்தில் இருந்து ஒரு தாளைக் கிழித்தார். பென்சிலால் ஆங்கிலத்தில் எழுதிக் காட்டினார்:

"நான் ஊமை. தயவுசெய்து ஏஷியா ஹோட்டலுக்குச் செல்ல ஒரு டாக்ஸி அமர்த்திக் கொடுங்கள்.''

மரியாதையும் கம்பீரமும் கலந்த புன்சிரிப்புடன் அதிகாரியிடம் காகிதத்தைக் காட்டினார் அவர். ஏற்கெனவே அவரைத் திரும்பித் திரும்பிப் பார்த்தவாறு சென்று கொண்டிருந்த பிரயாணிகளும் போர்ட்டர்களும் இந்தக் காட்சியைக் கண்டதும் இன்னும் வியந்துபோய், வேலையை மறந்து நின்றார்கள்.

ரயில்வே அதகாரி ஒருகணம் பின்னடைந்தார் எனினும், மறுகணமே, இத்தகை நிகழ்ச்சி தன் வாழ்க்கையில் ஒரு நாளைக்கு ஆயிரம் நடப்பதுண்டு என்று தெரிவிக்கிற தோரணையில், ''ஓ எஸ். வாருங்கள். உங்கள் லக்கேஜ்?'' என்று உரத்த குரலில் கேட்டார்.

''இந்த ஸூட்கேஸ் ஒன்றுதான்,'' என்று ஜாடை காட்டிய அவர், தான் ஊமையே தவிர செவிட்டூமை அல்ல என்பதையும் சைகை மூலம் தெரிவித்தார். பிறகு, காகிதத் துண்டைக் கிழித்தெறிந்துவிட்டு, ஸூட்கேஸுடன் அதிகாரியைப் பின் தொடர்ந்தார்.

ஏஷியா ஓட்டலில் தங்குவதற்காக விவரங்கள் கொடுத்த போதுதான் அவரைப் பற்றிய தகவல்கள் தெரிந்தன.

அவர் பெயர் : ராஜரத்தினம்.

நிரந்தர முகவரி : சாமுண்டி நிவாஸ், மல்லேசுவரம், பெங்களூர்.

சென்னைக்கு வந்த காரணம் : குடும்ப விஷயம்.

தொழில் : உல்லன் நூல் மொத்த வியாபாரம்.

முப்பது நிமிட நேரம் வரையில்தான் ராஜரத்தினத்தை ஓட்டல் சிப்பந்திகள் அதிசயத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். பிறகு அவர்களுக்குப் பழக்கமாகி விட்டார் அவர்.

காலை எட்டு மணிக்குள் ராஜரத்தினம் தமது ஸ்நானம் பலகாரம் முதலியவற்றை முடித்துக் கொண்டார். முன்னதாக ஏற்பாடு செய்திருந்தபடி டாக்ஸியொன்று காத்திருந்தது.

ராஜரத்தினம் கோட்டுப் பையிலிருந்து ஒரு நீலநிற 'இன்லண்டு' கடிதத்தை எடுத்தார். பலமுறை கையாண்டதால் சுருங்கிக் கசங்கிக் காணப்பட்டது அது. கடிதத்தின் வெளிப்புறத்தில் தரப்பட்டிருந்த முகவரியை டாக்ஸி டிரைவருக்குக் காட்டிவிட்டு ஏறிக் கொண்டார்.

வடசென்னையின் ஒரு கோடியில், மத்தியதரக் குடும்பத்தாருக்கு ஏற்ற வீடுகள் கொண்ட ஒரு சில தெருக்களில் அந்த முகவரியும் ஒன்று. தெரு முனையை

அடையும் போதே டிரைவரின் முதுகில்தட்டி, டாக்ஸியை நிறுத்தச் சொல்லி இறங்கிக் கொண்டார் ராஜரத்தினம். மீட்டரைப் பார்க்காமல், உத்தேசமான – ஆனால் கணிசமான – ஒரு தொகையை டிரைவருக்குத் தந்து அனுப்பினார்.

இன்னொரு சிகரெட் பற்ற வைத்துக் கொண்டார். வெள்ளிப் பூணிட்ட கைத்தடியை லேசாகச் சுழற்றியபடி, ஒவ்வோர் வீட்டுக் கதவு இலக்கத்தையும் கவனித்தவாறு நடந்தார்.

குறித்த வீட்டை அடைந்ததும் நின்றார். நடுத் தரத்துக்கும் சற்று தாழ்ந்த குடும்பம் இருக்கக்கூடிய இடம் அது. திண்ணையில் சோழி விளையாடிக் கொண்டிருந்த இரண்டு சிறுமிகள் அவரை வியப்புடன் பார்த்து? ''யார் மாமா வேண்டும்!'' என்று விசாரித் தார்கள்.

ராஜரத்தினம் சிகரட்டை எறிந்துவிட்டு, ''ஹூம்,'' என்று கனைத்தார். விசித்திரமான சப்தம் வெளிப்பட்டது.

சிறுமிகள் மிரண்டுபோய் உள்ளே ஓடினார்கள். அடுத்த நிமிடம், வேட்டியை 'டபிள்' கட்டுக் கட்டிக் கொண்டிருந்த ஒரு பெரியவர் உள்ளேயிருந்து வெளிப்பட்டு, ''யாரைத் தேடுகிறீர்கள்?'' என்று கேட்டார். சிறுமிகள் இருவரும் அவருக்குப் பின்புறம் ஒளிந்து கொண்டு எட்டிப் பார்த்தனர்.

நோட் புத்தகத்தை வெளியிலெடுத்து ''நான் ஊமை. சுபத்ரா என்று ஒரு பெண்ணைப் பார்க்க வந்தேன்,'' என்று எழுதிக் காட்டினார் ராஜரத்தினம்.

வந்தவரின் முகத்தில் குழப்பமும் திகிலும் படர்ந்தன. அவர் ஊமை என்பதால் பாதி; ''நீங்கள்... சுபத்ராவுக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார்.

நோட்டில் பென்சில் ஓடியது. ''தகப்பனார்.''

''அடப்பாவமே!'' என்றார் அந்த மனிதர். ''சுபத்ரா... அவள்...''

ராஜரத்தினம் மார்பைப் பிடித்துக் கொண்டார்.

''இறந்து போய் ஒரு மாதம் ஆகிறதே!'' என்றார் குடித்தனக்காரர்.

கோரமான சப்தமொன்று எழுந்தது ராஜரத்தினத்தின் கண்டத்திலிருந்து. கையினின்றும் நழுவிய கைத்தடியைச் சரேலெனப் பற்றிக் கொண்டார். செய்தியை நம்ப முடியாதவராக, அதிர்ச்சி அடைந்தவராக, நிலைகுத்தி நின்றார். உதட்டைக் கடித்துக் கொண்டு தலைகுனிந்தார்.

குடித்தனக்காரர், ''ஒன்றரை வருடமாய் அந்தப் பெண் சாப்பாட்டுக்கும் துணிமணிக்கும் திண்டாடித் தவித்ததே...'' என்னும்போது, ராஜரத்தினத்தின் செல்வச் செழிப்பைக் காட்டும் தோற்றத்தின் மீது இகழ்ச்சியுடன் ஓடியது பார்வை. ''அப்போது எங்கே போய்விட்டீர்கள்? எப்போதாவது ஒருகால், ஒரு பிள்ளையாண்டான் அவளைப் பார்க்க வருவான். புருஷனாம், பாவி! அவனும் கூடக் கடைசிக் காலத்தில் வரவில்லை. படுத்த படுக்கையாகக் கிடந்து, கடைசியில்... நாங்கள் குடித்தனக்காரர்கள் சேர்ந்து, ஆளுக்குக் கொஞ்சம் போட்டு, காரியங்களைச் செய்து...''

வீட்டின் ஜன்னலுக்கும் கதவுக்கும் அப்பாலிருந்து பல பெண்களின் தலைகள் தெரிந்தன. ராஜரத்தினம் உடம்பு கூசியவராக, மௌனமாய்க் கைகுவித்து விட்டுத் திரும்புகையில்—

வீட்டுக்குள்ளிருந்து ஒரு பெண்ணின் கனைப்புக் கேட்டது. அந்தக் குடித்தனக்காரர், ''கொஞ்சம் இருங்கள்,'' என்று சொல்லிவிட்டு உள்ளே விரைந்தார். இரண்டு

நிமிடங்கள் திரும்பி வந்து, ''நீங்கள்தான் சுபத்ராவின் அப்பா என்பதற்கு என்ன அத்தாட்சி?'' என்று வினவினார்.

ராஜரத்தினத்துக்கு அதன் பொருள் விளங்கவில்லை. 'ஆண்டவன்தான் அத்தாட்சி, என்பது போல வானத்தைக் காட்டிவிட்டு, கோட்டுப் பையிலிருந்து அந்த 'இன்லண்டு' கடிதத்தை நீட்டினார். அதன் மீது எழுதப்பட்டிருந்த விலாசதார் தான்தான் என்பதையும் சைகை மூலம் சொன்னார்.

''அப்படியானால் சரி,'' என்ற குடித்தனக்காரர், ''இந்தா! கொண்டு வா!'' என்று உள்புறம் நோக்கிக் குரல் கொடுத்தார்.

மறு வினாடி, நாணிக் கோணிக் கொண்டு வெளிவந்த ஒரு அம்மாள், அவர் கையில் ஒப்படைத்தாள்–

ஒன்றரை வயதுள்ள ஆண் குழந்தை ஒன்றை.

வறுமைக்குச் சவால் விடும் வாளிப்பான தோற்றமும் களங்கமற்ற பார்வையும் கொண்டிருந்த அந்த மதலையை ஆனந்தமும் பிரமிப்புமாக ராஜரத்தினம் வாங்கி அணைத்துக் கொண்டார்.

''உங்கள் பேரன்,'' என்றாள் அந்த அம்மாள்.

வாய் திறந்து ஒரு வார்த்தை பேசாமல், உணர்ச்சி யினால் நடை தள்ளாட, குழந்தையை இறுக்கித் தோளில் சாத்தியபடி ராஜரத்தினம் நடந்தார்.

தெருமுனையில் ஒரு வெற்றிலை பாக்குக் கடை இருந்தது.

தனது வழக்கமான 'பிராண்ட்' சிகரெட்டைச் சுட்டிக் காட்டி வாங்கிக் கொண்டார்.

கடை வாசலில் கிடந்த ஒரு பெஞ்சில் அமர்ந்து, குழந்தையை அணைத்த மாதிரி பக்கத்தில் இருத்திக் கொண்டு, புகை பிடிக்கத் தொடங்கினார்.

குழந்தை, கடையில் எதையோ பார்த்துக் கை நீட்டிற்று. ராஜரத்தினம் கூர்ந்து கவனித்தார். சாக்லேட்டா? அவர் உதட்டில் முறுவல் முளைத்தது. வாங்கித் தந்தார். குழந்தை ஆசையுடன் சுவைக்கத் தொடங்கியது.

மீண்டும் அந்த 'இன்லண்டு' கடிதத்தை வெளியில் எடுத்தார் ராஜரத்தினம். பிரித்துப் படித்தார்.

இரண்டு மாதத்துக்கு முந்திய தேதி அதில் குறிக்கப் பட்டிருந்தது.

'வடக்கே உன் அம்மாவுடன் சுற்றுப்பிரயாணம் போய்விட்டு, நேற்றுத்தான் பெங்களூருக்கு ஒன்றிக் கட்டையாகத் திரும்பினேன். சுபத்ரா! நானே இங்கே வரவிருந்த போது உன் கடிதமும் காத்திருந்தது. ஓடிவந்தேன். உபயோகமில்லாமல் போய்விட்டது. அதை உனக்கு எப்படி இனிமேல் விளக்கப் போகிறேன்?' என்று தனக்குள் சொல்லிக் கொண்ட மாதிரி அவர் உதடுகள் அசைந்தன.

கடிதத்தைப் படிக்கையில், கண்ணைத் துடைத்துக் கொண்டார் ராஜரத்தினம். சிகரெட் புகை அவர் பார்வையை உறுத்துகிறது போலும் என்று கடைக்காரன் எண்ணிக் கொண்டான்.

கண்ணீரையே நெய்து தயாரித்த திரையொன்று அவிழ்த்து பிரிய. அதிலே காட்சியொன்று எழுந்தது ராஜரத்தினத்தின் கண்முன்னால்.

இடம் : காசியில் ஒரு தர்ம ஆஸ்பத்திரி.

கடுமையான சீதபேதிக்கு ஆளாகி, குற்றுயிரும் குலையுயிருமாகக் கட்டிலில் கிடக்கும் மனைவியைப் பார்த்தபடி பித்துப் பிடித்து உட்கார்ந்திருக்கிறார் ராஜரத்தினம். இந்த நிலையில் பிரயாணம் மேற்கொள்ளக் கூடாது என்று மிகக் கண்டிப்பாக டாக்டர்கள் எச்சரித்து விட்டார்கள்.

இது ராஜரத்தினத்துக்கு இரண்டாவது இடி.

ஆறு மாதங்களுக்கு முன்பு, பெங்களூரில் அவரே மரணத்தின் பிடியில் தத்தளித்துக் கொண்டிருந்தார். பயங்கரமான வைசூரிக் காய்ச்சல், அவரை வாழவும் விடாமல் சாகவும் விடாமல் வாட்டிக் கொண்டிருந்தது. லட்சாதிபதியான அவரைக் காப்பாற்ற, கல்கத்தாவில் இருந்தும், பம்பாயில் இருந்தும் டாக்டர்கள் ஓடி வந்தார்கள்.

காப்பாற்றவும் செய்தார்கள் – அவருடைய நாவைத் தவிர! எந்தக் குரல் ஒரு சக்கரவர்த்தியின் அட்டகாசத் துடன் நாளெல்லாம் ஒலிக்குமோ, அது போயே போய் விட்டது. இனி என்றென்றைக்கும் அவர் பேசமுடியாது என்று சொல்லிவிட்டார்கள்.

உடம்பு பழையபடி தேறிற்று, மனம் தேறவில்லை. நிம்மதியைத் தேடி, மனைவியுடன் தலயாத்திரை மேற்கொள்ளப் போக, காசியில் இரண்டாவது இடி அவரது மனைவி மீது இறங்கி விட்டது.

நினைவற்றுக் கிடக்கும் மனைவியின் முகத்தருகே குனிகிறார் ராஜரத்தினம்.

அவள் உதடுகள் அசைகின்றன.

''என்ன, என்ன? சொல்லு.'' என்று அவர் பதறுகிறார்.

திணறித் திணறி அவள் பேசுகிறாள்: ''சுபத்ரா... நம்.... கண்மணி...''

அவர் முகம் கறுக்கிறது.

அவர் மனைவி கூறுகிறாள்: ''வேண்டாம்... இனி மேலும் அவள் மீது துவேஷம் வைக்காதீர்கள்... படித்த பெண்... தனக்குத் தகுதி இல்லாதவனையா கல்யாணம் பண்ணிக் கொண்டிருப்பாள்?''

ராஜரத்தினம் கோபமடைகிறார்:

''நீ அறிந்தது அவ்வளவுதான். பிஸினஸ் முறையில் அவனை எனக்கு நன்றாய்த் தெரியும். படு அயோக்கியன். எதற்கும் துணிந்தவன். அவனை நம் வீட்டுக்குள் நுழைய விட்டதால்தான் அத்தனை விபரீதமும் நேர்ந்தது. என்னைத் துரும்பாக அல்லவா எறிந்து விட்டாள் சுபத்ரா?''

''விடுங்கள் அந்தப் பேச்சையெல்லாம்! குழந்தை பட்டணத்தில்தான் இருப்பாள். தேடிக் கண்டு பிடியுங்கள்... எனக்கு நன்றாய்த் தெரிகிறது... அவள் இடுகிற சாபம் தான் நாம் இப்படியெல்லாம் தவிக்கிறோம்...''

சாபம்!

ராஜரத்தினம் உடம்பு நடுங்கியது. மெல்லத் தலையசைத்தார். ''சரி, ஆகட்டும். நாம் இருவருமே பட்டணத்துக்குப் போய்ப் பார்க்கலாம். நிம்மதியாக இரு.'' என்றார்.

இருவராகத் திரும்ப வாய்ப்பே இருக்கவில்லை. அவள் புண்ணியாத்மா. கங்கைக் கரையில் வாழ்க்கையை முடித்துக் கொண்டுவிட்டாள்...

**ரா**ஜரத்தினம் பழைய நினைவுகளை எண்ணி கண்ணீரைத் துடைத்துக் கொண்டார்.

சாக்லேட் சுவைத்த உதடுகளை அவர் பாண்ட்டில் துடைத்தது குழந்தை. அதை மடியில் சாய்த்துக் கொண்டு, சுருட்டை சுருட்டையான அதன் தலைமயிரைக் கோதி விட்டவாறு, கையிலிருந்த கடிதத்தைப் பார்த்தார்.

அன்புள்ள அப்பா,

உங்களை இப்படிக் கூப்பிடும் உரிமையை நான் என்றைக்கோ இழந்து விட்டேன். இருந்தாலும் துணிந்து இப்போது கூப்பிடுவதற்காக மன்னியுங்கள்.

உங்கள் வார்த்தையை மீறிக் காதல் திருமணம் செய்து கொண்டதன் பலனை முழுக்க முழுக்க அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். உங்களுடைய திரண்ட செல்வத்துக்கு நான் ஒரே வாரிசு என்ற ஒன்று தான் அவர் என்னைக் காதலித்த காரணம் என்று உணராமல் போனேன். உங்களையும் உதறினேன். கல்லூரிப் படிப்பையும் உதறினேன். வட்டியும் முதலுமாக அவர் என்னை உதறிவிட்டார். பணக்காரர், என் கண்ணில் நீர் வராமல், என்றைக்கும் யார் தயவையும் நான் நாடாமல் காப்பாற்றுவார் என்று எவரை நம்பினேனோ அவர் என்னை அடியோடு புறக்கணித்து விட்டார். திக்கற்று, நோயாளியாகக் கிழிந்த படுக்கையில் கிடக்கிறேன் இப்போது.

அவர் என்னைப் பார்க்கக்கூட வருவதில்லை; பார்த்தாலும் பரிவாக இரண்டு வார்த்தை பேசுவதில்லை. அவரை நானாக எந்த விதத்திலும் அணுக முடிவதில்லை. அவருக்கும் ஒரு குடும்பம் இருக்கிறது என்று இன்று வரை எனக்குத் தெரியாது.

நான் அதிக நாள் உயிர் வாழ மாட்டேன். போகு முன்னால், உங்களை ஒரு முறை பார்த்து, 'இந்த நன்றி கொன்ற மகளை நெஞ்சார மன்னியுங்கள் அப்பா' என்று கதற வேண்டும்போல் இருக்கிறது. கதறிவிட்டு, உங்கள் உடமையான ஒன்றை உங்களிடம் ஒப்படைக்கவும் வேண்டும். அதற்காகவேதான் இதை எழுதினேன்.

சுபத்ரா.

மடியில் கடிதத்தைப் பிரித்து வைத்துக் கொண்டு வெகு நேரம் உட்கார்ந்திருந்தார் ராஜரத்தினம். சுளீரென உறைக்கும் வெய்யிலைத் தாங்க மாட்டாத குழந்தை அவரது கோட்டுப்பையை இழுத்து, சிணுங்கிற்று. அதைத் தூக்கி அணைத்துக் கொண்டு எழுந்தார்.

ஜயஸ்ரீ கம்பெனி.

போர்டு, ஒரு பக்கத்து ஆணியைப் பிடித்து தொங்கிக் கொண்டிருந்தது. பூட்டில் அரக்கு சீல் வைத்திருந்தது.

குழந்தையைத் தோளில் சாய்த்துக் கொண்டிருந்த ராஜரத்தினம் திடுக்கிட்டு நின்றார்.

''ஏதாவது டைப் செய்து தரணுமா சார்?''

குரல் கேட்ட பிறகே நிமிர்ந்து நோக்கினார்.

பூட்டியிருந்த கதவுக்குப் பக்கத்து அறையில் 'இவ்விடம் ஜாப் டைப்பிங் செய்யப்படும்' என்ற பலகை ஊசலாடியது.

தான் ஊமை என்பதைச் சாடையால் விளக்கி விட்டு, கைத்தடியினால், அரக்கு சீலிட்ட பூட்டைத் தொட்டு, ''என்ன விஷயம்?'' என்று கண்ணால் கேட்டார் ராஜரத்தினம்.

ஜாப் டைப்பிஸ்டு அவரையும், குழந்தையையும் மாறி மாறிப் பார்த்தார்.

''அட கடவுளே! மூன்று மாதமாய்ச் சிரிப்பாய்ச் சிரித்ததே கேஸ், தெரியாதா உங்களுக்கு? இந்தத் தெருவே நாறிப் போய் விட்டதே!'' என்றார் ஜாப் டைப்பிஸ்டு.

மேற்கொண்டு விவரம் தெரிந்து கொள்ள விரும்புவதை ராஜரத்தினத்தின் பார்வை உணர்த்தியது.

டைப்பிஸ்டு சொன்னார்:

''மோசடிக் கேஸ் சார். லட்ச ரூபாய் சாப்பிட்டான். மூன்று வருடம் ஜீரண மாத்திரை விழுங்க வேண்டுமாம். ஜெயிலுக்கு அழைத்துப் போயிருக்கிறார்கள்!' என்று பதில் வந்தது.

கைத்தடியைத் தரையில் தட்டிக் கொண்டு, குழந்தையின் வதனத்தை நோக்கியபடி, நின்றார் ராஜரத்தினம்.

**ம**வுண்ட் ரோடிலிருந்த ஓர் ஆங்கில தினசரி காரியாலயத்தின் பரந்த வரவேற்பு அறை.

''மூன்று மாதத்துப் பேப்பர்கள் தேவை. பணம் கொடுத்து வாங்கிப் போகிறேன்'' என்று ஒரு பியூனிடம் சீட்டு எழுதியனுப்பினார் ராஜரத்தினம்.

''பசிக்கிறதா ராஜா?'' என்று குழந்தையை விசாரிக்க வேண்டும் போல் இருந்தது. தன் சைகை அதற்குப் புரியாதே? ராஜரத்தினத்துக்கு எதுவோ நெஞ்சை அடைத்தது.

கால் மணி காத்திருந்த பின்னர், பேப்பர் கட்டும், பில்லும் வந்தன. ராஜரத்தினம் காத்திருந்த டாக்ஸியில் ஏறிக் கொண்டார்.

இரண்டொரு பேப்பர்களைப் பிரித்தார். ஆனால் வண்டியின் அசைவில் சரியாய்ப் பார்க்க முடியவில்லை. பெரிது பெரிதாயிருந்த படங்களைக் குழந்தைக்கு வேடிக்கை காட்டினார்.

ஓட்டலில் சாப்பாட்டைத் தன் அறைக்கே வரவழைத்தார். குழந்தைக்கு, அதிகக் காரமில்லாத வகைகளாகக் கொஞ்சம் கொஞ்சம் ஊட்டிவிட்டு, தானும் உணவருந்தினார். மெத்தை விரித்த கட்டிலில் குழந்தையைத் தூங்கவிட்ட பிறகு, பழைய பேப்பர் களை ஆராயலானார்.

மோசடி வழக்கின் விவரங்கள் அவருக்குக் கொஞ்சம் கொஞ்சமாய்த் தெளிவாகத் தொடங்கின.

இரவு பெங்களூர் மெயில் புறப்பட இன்னும் முக்கால் மணி நேரம் இருந்தது.

முதல் வகுப்பில், ரிசர்வ் செய்யப்பட்டுள்ள இடத்தில் தன் பையையும் கைத்தடியையும் வைத்து விட்டு, குழந்தையுடன் வெளியே வந்தார் ராஜரத்தினம்.

சென்டிரல் ஸ்டேஷன் சாலையைக் கடந்து, ஜெனரல் ஆஸ்பத்திரியை அடைந்தார். ஓரமாக நடந்தார். இடது புறம் திரும்பினார். வழியில் கண்ட கோலாகலங் களை ரசித்து ரசித்துக் கைகளை ஆட்டிக் கொண்டிருந்தது குழந்தை. நடுவில் எதற்காகவோ விசித்தது. அவருக்குச் சமாதானப்படுத்தவும் தெரியவில்லை; என்ன வேண்டும் என்று கேட்கவும் முடியவில்லை. நல்ல வேளை, சற்று நேரத்தில் அழுகை நின்று விட்டது.

எதிரேயிருந்த சிறைச்சாலை, அடிவானத்தில் எழுதிய நிழல் படம் போல வெளிக்கோடு மட்டுமே தெரியும்படி இருளில் அமுங்கியிருந்தது. 'நீதியை அழுந்தத் திருத்தமாக நிலைநாட்டியிருக்கிறேன்' என்று கூறுவது போல, கம்பீரமான உறுதியுடன் உயர்ந்து நின்றிருந்தது கொடிக்கம்பம்.

குழந்தையின் பிஞ்சுக்கையைத் தூக்கி, சிறையின் கருஞ் சுவர்களைக் காட்டினார் ராஜரத்தினம். சிறிது நேரம் அப்படியே நகராமல் அசையாமல் நின்றிருந்தார். வெளியே அரற்ற முடியாத எண்ணற்ற ஊமைத் துயரங்கள், கரைந்து, கண்ணீராய் வழிந்து, அவர் கன்னத்தையும் அவர் மார்பில் சாய்ந்திருந்த குழந்தையின் கேசத்தையும் நனைத்தன.

''மூன்றாண்டுகள் அல்ல, மூர்த்தி! இன்னும் முப்பது ஆண்டுகளுக்கு நீ வெளியுலகத்தைக் காணாதவாறு செய்கிறேனா இல்லையா, பார்!'' என்று கறுவிக் கொண்டார் ராஜரத்தினம்.

சென்டிரல் ஸ்டேஷனிலிருந்து திடீரென வந்த ஊதல் சப்தம் கேட்டு, குழந்தை பயந்து அவர் கழுத்தைக் கட்டிக் கொண்டது.

# 6

மூர்த்தி என்றைக்கும் சிறையிலே வாடும்படி செய்வது என்று ராஜரத்தினம் உறுதி பூண்ட அதே சமயம்–

மூர்த்தியை எப்படியும் விடுதலை செய்ய முனைவது என்று பத்மனாபன் தீர்மானம் செய்து கொண்டான்.

காரணம்? பழுதான காரைச் சரிபடுத்திக் கொடுத்த அந்தப் பெண்!

காரின் கதவைப் பாதி திறந்து கொண்டு, வலது காலைத் தெருவில் ஊன்றிக் கொண்டபடி, அவளுடைய யௌவனத்தை ரசித்துக் கொண்டிருந்த பத்மனாபன் தன்னுணர்வு பெற்றான். சட்டென இறங்கி அவள் வழியை மறித்தாற்போல் நின்று, ''நியாயமில்லை நீங்கள் செய்வது!'' என்றான்.

''எது?'' அவள் விழிகள் திகைப்பைக் கொட்டின.

''திடீரென்று வந்தீர்கள். திடீரென்று காரைச் சரி படுத்திக் கொடுத்தீர்கள். திடீரென்று திரும்பிப் போகி றீர்கள். அதைத்தான் சொல்கிறேன், நியாயமில்லை என்று.''

அவள் முகத்தின்மீது பளபளத்த படபடப்பும் துடிப்பும் மறையவில்லை. ''நீங்கள் காருடன் கஷ்டப் பட்டீர்கள். எனக்கு அதைச் சரிபடுத்தத் தெரிந்தது. அவ்வளவுதானே? வருகிறேன்'' என்று சொல்லிவிட்டுத் திரும்பினாள்.

பத்மனாபன் காரிடம் திரும்பினான். பின் கதவைத் திறந்தான். வணங்கி ஒதுங்கி நின்று, "ஏறிக் கொள்ளுங்கள்," என்றான் அவளைப் பார்த்து.

அவள் கண்கள் ஒரு துள்ளல் துள்ளி நின்றன. "எங்கே போவதற்கு?"

"என்ன கேள்வி இது! நீங்கள் நடந்து போகிறீர்கள். என்னிடம் கார் இருக்கிறது. அவ்வளவுதான்," என்றான் பத்மனாபன்.

முதல் முறையாக அவள் புன்னகை செய்து, "நீங்கள் யாரென்றுகூடத் தெரியாதே எனக்கு," என்றாள்.

"ஓ! அந்தப் பயமா!" பத்மனாபன் சிரித்தான். "நான் செய்வது கண்ணியமான தொழில்தான். வக்கீல்."

"வக்....வக்கீல்! அட்வகேட்?" கிட்ட வந்தாள் அவள்.

"ஏன், நம்ப முடியவில்லையா? என்னுடன் கோர்ட்டுக்கு வேண்டுமானால் வாருங்கள். நான் வாதாடுவதை நேரில் பார்க்கலாம். டிக்கெட், கட்டணம் எதுவும் கிடையாது."

புடைத்து நின்றிருந்த நரம்பு தளர்ந்து, இறுகியிருந்த ரத்த ஓட்டம் இளகின மாதிரி, அவள் மெல்ல மெல்ல மென்மையான இயல்புக்கு மாறுவது பத்மனாபனுக்குக் கண்கூடாகத் தெரிந்தது. "நமது பேச்சினால் அவள் மன நிலையை மாற்றி விட்டோம்!" என்ற பெருமையும் தன்னம்பிக்கையும் ஏற்பட்டன அவனுக்கு.

பின் ஸீட்டில் ஏறத் தயாராக காலை உள்ளே வைத்தாள் அவள். திரும்பிப் பார்த்தாள். "எனக்குச் சேத்துப் பட்டு வரையில் அல்லவா போக வேண்டும்?"

"ரொம்ப நல்லது. ஷெனாய் நகரில் ஒரு வேலை யாகத்தான நான் போய்க்கொண்டிருக்கிறேன்." என்றான் பத்மனாபன்.

''பெண்கள் எத்தனையோ தொழில் செய்வதைப் பார்த்திருக்கிறேன்.''

மவுண்ட் ரோடு வட்டத்தைச் சுற்றிவிட்டுக் கார் திரும்பிக் கொண்டிருந்தது. ''பஸ் கண்டக்டர்களாக, பைலட்டாக, மந்திரியாக, மேஸ்திரியாக - எல்லாம் பார்த்துவிட்டேன். ஆனால் கார் மெக்கானிக்காக ஒரு பெண்ணைப் பார்ப்பது இதுதான் முதல் தடவை.''

''எங்கே?'' என்று அவள் காருக்கு வெளியே நோக்கினாள்.

''இங்கே உங்களைத்தான் சொல்கிறேன். ஒரே நிமிடத்தில் என் காரை ரிப்போர் பார்த்துத் தந்து விட்டீர்களே?''

''கார் மெக்கானிசத்தைப்பற்றி எனக்கு எதுவும் தெரியாது. இந்த ஒரு காருக்கு மட்டும் என்னென்ன கிறுக்குத்தனம் உண்டென்று எனக்குத் தெரியும். ஏனென்றால்.... ''

''ஏனென்றால்...''

அவள் குரல் தாழ்ந்தது. ''நேற்று வரை இதன் சொந்தக்காரியாக இருந்தவள் நான். என் பெயர் மாயா.''

கண்ணிமைக்கும் நேரம்! பாதையை விட்டுச் சரேலென விலகி, சட்டென நேராயிற்று கார். ஆனால் பத்மனாபனின் பிரமிப்பைக் கவனிக்காமல் அவள் மேலே தொடர்ந்தாள், அதே கனம் நிறைந்த குரலில்:

''வேறு யாருக்கும் விற்கவேண்டாமென்று - அவர் பெயர் என்ன? ஆமாம், அருண் - அருணிடம் குறிப்பாய்க் கேட்டுக் கொண்டிருந்தேன். அதனால்தான், நீங்கள் காருடன் நின்றிருப்பதைப் பார்த்ததும், முதலில் கோபம் வந்தது. பத்து மணி நேரம்கூட ஒரு மனிதரால் வாக்கைக் காப்பாற்ற முடியவில்லையே என்று...''

பத்மனாபனுக்கு அவள் பேச்சு காதில் விழுந்ததா? சொல்ல முடியாது. ''கிரிமினல் குடும்பம்,'' ''கிரிமினலின் தங்கை'' என்ற சொற்கள் - அவனே நண்பனிடம் சொன்ன சொற்கள் - அவன் செவியில் எதிரொலித்துக் கொண்டிருந்தன.

''ஆனால் அவர் - அருண் - அப்படி வாக்கு மீறக் கூடியவராகத் தோன்றவுமில்லை,'' என்று தனக்குத் தானே கூறிக்கொள்வது போலச் சொன்னது பத்மனாப னுக்குக் கேட்டது. ''அருண் வார்த்தை மீறாதவன் மட்டு மல்ல; அவன் உன் பொருட்டு, இந்தக் காரையே தாரை வார்க்கவிருந்தான் சற்று முன்பு!''என்று சொல்ல நினைத்தான். ஆனால் அந்த நல்ல அபிப்பிராயத்தை அவளிடம் ஏற்படுத்த ஏனோ மனம் வரவில்லை.

''நீங்கள் வக்கீல் என்றதும் எனக்கு அம்மாடி என்றிருந்தது...''

பின்னாலிருந்து வந்த மாயாவின் மென்மையான குரல், அவனைத் திரும்பிப் பார்க்க வைத்தது. முன் ஸீட்டில் முழங்கையை ஊன்றிக் கொண்டு அகன்ற விழிகளால் அவனை நோக்கிக் கொண்டிருந்தாள் மாயா. முன்னுச்சி கேசம் காற்றில் படபடத்தவாறிருந்தது.

'' எதனால் அம்மாடி என்றிருந்தது?''

''ஒரு வக்கீலைத்தான் நான் தேடிக் கொண்டிருந் தேன். நீங்கள் சமயத்துக்கு வந்தீர்கள்,'' என்றாள்.

''அப்படியா?'' என்றான் பத்மனாபன். வக்கீலை எதற்காகத் தேடுகிறாள்? கடன் கஷ்டம் என்றுதான் காரை விற்றிருக்கிறார்கள். இன்னும் ஏதாவது பலவித மான பாக்கிகள் இருக்குமோ? அதையெல்லாம் சரி படுத்தித் தரத்தான் ஒரு வக்கீல் தேடுகிறாளோ?

''நான் பிராசிக்யூட்டர். முக்கியமாக உன் அண்ணனையே ஜெயிலுக்கு அனுப்பியவன். விஷயம் தெரிந்தால் என்னிடம் நீ உதவிகேட்கமாட்டாய்,'' என்று சொல்லிவிட, சொற்கள் நாக்கு நுனி வரையில் வந்தன. உள்ளத்துள் முகிழ்த்துக் கொண்டிருந்த வேறொரு தாபம். அந்தச் சொற்களைத் திரும்பத் திரும்பத் தொண்டைக்குள் அழுத்தித் தள்ளிக் கொண்டிருந்தது.

''வீட்டிலேயே போய்ப் பேசலாம். என் அப்பாவும் இருப்பார்,'' என்றாள் மாயா. ''அதோ, அந்த போஸ்டுக்கு பக்கத்து வீடு... அது தான்..''

'அப்பா' என்று அவள் சொன்னதுமே தூக்கி வாரிப் போட்டது பத்மனாபனுக்கு.

வழக்கு நடைபெற்ற முப்பத்திரண்டு நாளில் ஒரு நாள்கூட மூர்த்தியின் அப்பா வரத் தவறியதில்லை. தலையில் கை வைத்துக்கொண்டு, பின் வரிசைப் பெஞ்சுகளில் அவர் வழக்கமாக உட்கார்ந்திருந்த காட்சி அவன் கண் முன்னே எழுந்தது. நடுநடுவே அவர் பரிதாபமாக மகனையும், அவனைக் கம்பி எண்ண வைக்க வேண்டுமென்று வாதாடும் தன்னையும் மாறி மாறிப் பார்ப்பது நினைவு வந்தது.

இப்போது நிச்சயம் அவர் நம்மை அடையாளம் கண்டு கொள்வார். ஆகவே வீட்டுக்குள்ளே செல்லக் கூடாது.

கார் நின்றது.

இப்போது மாயா முன்னதாக இறங்கி பத்மனாபனுக்குக் கதவைத் திறந்துவிட்டு, ''உள்ளே வாருங்கள்,'' என்று அழைத்தாள். ''நான் போய் அப்பாவைப் பார்க்கிறேன்.. அப்பா! அப்பா!''

தெருவில் தயங்கியவாறு நின்றுவிட்டான் பத்மனாபன்.

ராஜப்பாவுக்கு மாயாவிடம் ஒரே கோபம்.

''எதுவானாலும் சரி! அதென்ன, நான் வேண்டா மென்று தடுத்த காரியத்தை நீ செய்வது? பிள்ளையால் போன மானம் போதாதா? எஞ்சியிருப்பதை நீ எடுத்து விடுகிறேன் என்கிறாயா?''

''இரையாதீர்கள் அப்பா!'' என்று மாயா மன்றாடி னாள். ''வேற்று மனிதர்கள் வந்திருக்கிறார்கள். நம் காரியத்துக்காக மெனக்கெட்டு அழைத்து வந்திருக் கிறேன்...''

''ஐயையோ, மாயா! என்னைச் சும்மா விடேன்!'' என்று பல்லைக் கடித்துக் கொண்டு கூவினார் அவர். ''கவர்னரே வந்தாலும் நான் எழுந்து வந்து முகத்தைக் காட்டத் தயாராயில்லை. அந்தப் பாவியால் என் மானம் மட்டுமா போயிற்று! அண்ணன் அண்ணன் என்று உயிர் விடுகிறாயே, அவன் உன் எதிர்காலத்துக்கே வேட்டு வைத்து விட்டான்! கடுதாசி பார்த்தாயா?''

''என்ன கடிதம்?'' என்று மாயா கேட்டாள், தன் பரபரப்பை மறந்து.

மாயாவின் அம்மா பதிலளித்தாள் அவளுக்கு. ''குழந்தையை ஏன் வேதனைப் படுத்துகிறீர்கள்? ஒன்றும் இல்லையடி மாயா. அந்தச் சிதம்பரக்காரர்கள் இல்லை, அவர்களுக்கு உன்னைப் பிடிக்கவில்லையாம்! நம் வீட்டுச் சம்பந்தம் வேண்டாமாம்!''

''ஏன், பச்சையாய்த்தான் சொல்லேன்,'' என்றார் அப்பா. ''ஜெயிலுக்குப் போனவன் வீட்டில் பெண் எடுக்க மாட்டார்களாம்!''

''பாவிகள்! அவனை ஜெயிலுக்கு அனுப்பியான பிறகும் வயிற்றெரிச்சல் கொட்டிக் கொள்கிறார்களே!'' என்று கண்ணைத் துடைத்துக் கொண்டாள் அம்மா.

''அடப் பூ!'' என்று ஊதியெறிந்தாள் மாயா அத்தனை தகவலையும். ''என்னவோ ஏதோ என்று பார்த்தேன்! சிதம்பரக்காரர்கள் இல்லாவிட்டால் ஆயிரம் மாயவரம்காரர்கள்!''

ராஜப்பா உறுமினார்.

''ஆமாம்! வருவார்கள்! தாலிக்கு ஆர்டர் பண்ணு கிறேன் போ! இரண்டாம் தாரம் மூன்றாம் தாரத்துக்குத் தான் இனிமேல் நீ லாயக்கு என்று உன்கூடப் பிறந்த அண்ணனே பண்ணிவிட்டுப் போய்விட்டான்! ''

''அப்படி என் தலையில் எழுதியிருந்தால் அப்படியே நடக்கட்டும்! நல்ல பணக்காரராக எந்த மூன்றாம் தாரக் கிழவர் அகப்பட்டாலும் நான் சந்தோஷமாகப் பண்ணிக் கொள்கிறேன்!''

அம்மா உடனே, ''மாயா! போதுமே கண்ணராவி!'' என்று இரைந்தாள்.

''என்னம்மா தப்பாய்ச் சொல்லிவிட்டேன்!'' என்றாள் மாயா. ''அண்ணாவை விடுவிப்பதற்கு ஒருத்த ராவது ஒரு துரும்பையாவது எடுத்துப் போடுகிறீர்களா? காசில்லை, பணமில்லை என்று எல்லோரும் அழு கிறீர்கள். மூர்த்தி அண்ணாவுக்காக நானாவது உபயோகப் பட்டுப் போகிறேன்! இப்போதே தரகர்களிடம் சொல்லிப் பார்க்கச் சொல்லுங்கள்! எத்தனை வயதுக் கிழவ ரானாலும் சரி! பணக்காரராக, என் கையிலே பெட்டிச் சாவியைக் கொடுக்கிறவராக இருக்க வேண்டும்! அது ஒன்றே ஒன்றுதான் நிபந்தனை!''

''உனக்குப் பைத்தியம் தான் பிடித்துவிட்டது! வாடி இந்தண்டை!'' என்று மாயாவை அவள் அம்மா அதட்டி வேறுபுறம் வலுக்கட்டாயமாக அழைத்துச் செல்ல முயன்றாள்.

மாயா, தாயின் பிடியை உதறிவிட்டு வாசலுக்கு வந்து பார்த்தாள்.

எங்கே போய்விட்டார் அந்த வக்கீல்? காரைக்கூட காணோமே?

பத்மனாபனுக்கு வழி விடாமலே முன்னால் போய்க்கொண்டிருந்தது ஆட்டோ ரிக்ஷா ஒன்று. அதை 'ஓவர் டேக்' பண்ணலாம் என்று முயலும் போதெல்லாம் ஏதாவது ஒன்று குறுக்கிட்டு, அவன் வேகத்தைக் கட்டுப்படுத்தியது.

ஆத்திரத்துடன் பத்மனாபன் ஹாரனை இரண்டு முறை நீளமாக ஒலித்தான்.

ஆட்டோ ஒதுங்கிக் கொண்டது இந்தத் தடவை. அதே சமயம், அதனுள் அமர்ந்திருந்த இருவர், தலையை திருப்பி ஹாரன் அடித்த காரை வேடிக்கை பார்த்தார்கள்.

ஒருத்தர் கிழவர். இன்னொருத்தி இளவயது மங்கை. அப்பாவும் பெண்ணுமாக இருக்கலாம். ஏன், தாத்தா - பேத்தியாகக் கூட இருக்கலாம். அல்லது -

பத்மனாபனுக்குத் திக்கென்றிருந்தது.

ஆசை நரைக்காத வயோதிகனும், அவசியத்துக் காகக் கழுத்தைக் கொடுத்துவிட்ட மூன்றாம் தாரமாகவும் கூட இருக்கலாம்.

உடம்பை ஒரு தரம் உசுப்பி விட்டுக் கொண்டு பத்மனாபன் அந்த நினைவை விரட்டி அடித்தான்.

பிடிவாதக்காரப் பெண் அந்த மாயா! தான் மேற் கொண்டுள்ள நோக்கத்தை நிறைவேற்றுவதற்காகத் தன்னையே பலியிட்டுக் கொள்ளத் தயங்க மாட்டாள்.

உயிர்த்துடிப்பு நிறைந்த பச்சைப் பசுங்கிளி, சாக மாட்டாமல் கிடக்கிற ஒரு கிழட்டுப் பூனையினருகே ஒண்டி நிற்கும் காட்சி பத்மனாபனின் கண் முன் எழுந்தது.

ஸ்டியரிங் சக்கரத்தை அவன் விரலகள் பிசைந்தன. வியர்வையின் கசகசப்பில் பிடி வழுக்கியது. உள்ளங் கையில் எரிச்சலும் நமைச்சலும் ஏற்பட்டன.

'நான் என்ன செய்ய முடியும்? என்ன செய்ய முடியும்?' என்று திரும்பத் திரும்பத் தன்னையே கேட்டுக் கொண்டான் அவன்.

வீட்டு வாசலில் காரை நிறுத்தியதுமே, சத்தத்தைக் கேட்டு விரைந்து வந்தாள் கல்யாணி. இரு கையையும் மோவாயின் கீழே கோத்துக்கொண்டு, ''காரையே கொண்டு வந்து விட்டீர்களே! '' என்று அதிசயித்தாள்.

''பின்னே!'' காரின் மீது ஒரு பார்வையை வீசி விட்டு உள்ளே நுழைந்தான் பத்மனாபன். '' இந்த முட்டாள்தான் எள் இறைக்கத் தயாராயிருந்தான் என்றால், நான் போய், செம்பில் தண்ணீர் எடுத்து வருகிறேன் என்று நினைத்தாயா?''

''உஸ்! மெதுவாய்!'' என்று கல்யாணி எச்சரிக்கும் போதே காரியம் மிஞ்சிவிட்டது.

''தெரியும் நீ இப்படிச் செய்வாயென்று!''

–குரலையும் கேட்டு, கைக்குட்டையினால் முகத்தை துடைத்தபடி வரும் அருணயும் பார்த்தபோது பத்மனாபனுக்கு ஏற்பட்ட திகைப்பு!

''நீ காலேஜுக்குப் போகவில்லை, அருண்?''

''சாப்பாடு ஆனதும் ஒரு தூக்கம் போட்டுவிட்டு, நீங்கள் வருவதற்கு முன் ஓடிவிடுகிறேன் என்றார்! பாவம், அகப்பட்டுக் கொண்டு விட்டார்!'' என்றாள் கல்யாணி.

அருண், தெருவில் நிறுத்தப்பட்டுள்ள காரைப் பார்த்துப் பெருமூச்செறிந்தான்: "என்ன பரந்த உள்ளமப்பா உனக்கு! கொடுத்த தானத்தை வழிப்பறி பண்ணி எடுத்து வந்தாயே! அடாடாடா!"

"நீ ஒரு சுத்த...."

"மடையனாக, முட்டாளாக, கிறுக்கனாக இருந்து விட்டுப் போகிறேன்!" என்று சூடாகப் பதிலளித்தான் அருண். "அந்தப் பெண்ணின் கஷ்டத்தைப் பார்த்து, சகிக்க முடியாமல் ஒரு உதவி செய்தால், அதைப் போய்...."

"முழுக்கக் கேட்டுவிட்டுப் பேசு!" என்று அதட்டினான் பத்மனாபன். "அந்தச் சிந்தாதிரிப்பேட்டைக் காரன்..."

"என்ன இருந்தாலும், உன்னுடைய ஆயிரம் ரூபாய் அதில் இருக்கிறதல்லவா? அதை பந்தோபஸ்து செய்து கொள்ள வேண்டியது நியாயம்தான்."

"அருண்!" என்று சீறினான் பத்மனாபன். பிறகு, அருகிலிருந்த கல்யாணியை நோக்கினான்: "கழற்று உன் காது, மூக்கு, கை, கழுத்தில் இருப்பதையெல்லாம்!"

அவள் சங்கடத்துடன் சிரித்துக் கொண்டே, "போதும் உங்கள் வேடிக்கைச் சண்டை!" என்றாள்.

"கழற்றப் போகிறாயா, இல்லையா?"

அருணின் தோரணை மாறி விட்டது அடியோடு. "என்ன பத்மனாபா, என்ன இது?..."

"ஒன்றுமில்லை. ஆயிரத்துக்காக அலைகிறேன் என்றாயே? இல்லை என்று நிரூபிக்கிறேன். நீ கழற்று, கல்யாணி. இவைகளின் மதிப்பு பத்தாயிரம் இருக்கும், அருண்! நீயே கொண்டுபோய் வைத்துக்கொள் அத்தனை நகைகளையும். என்றைக்கு என்னைப்பற்றி நல்ல

அபிப்பிராயம் ஏற்படுகிறதோ அன்றைக்குக் கொண்டு வந்து கொடு.''

அருண், வேடிக்கைக்குப் பண்ணுவதுபோல் அசலாகவே கன்னத்தில் போட்டுக்கொண்டான். ''அப்பா பத்மனாபா! தப்பு! தப்பு!''

கல்யாணி, சிரித்தவாறு ''ஒரு சின்ன வேலை,'' என்று கூறி டெலிபோனை எடுத்தாள். ''ஹலோ சொர்க்கலோகமா? மிஸ்டர் கடவுள் இருக்கிறாரா? என்ன, கடவுள்தான் பேசுகிறீர்களா? வணக்கம் சார். இங்கே ஒரு ரகளையை நிறுத்தினீர்களே, ரொம்ப தாங்க்ஸ்!''

அருண் கடகடவென்று நகைத்தான்.

பத்மனாபன் எழுந்து கொண்டான். ''அருண், நீ நினைக்கிற மாதிரி ஐயாயிரம், ஆறாயிரம் என்று ரூபாய் நயா பைசாவில் ஒத்தாசை செய்து அந்தப் பெண்ணின் துயரத்தைத் தீர்க்க முடியாது. அவளுடைய அண்ணன் நிரபராதி என்று உலகம் தெரிந்து கொள்ள வேண்டும். அப்புறம்தான் அவளுக்கு நிம்மதி, சந்தோஷம் எல்லாம்! அவளை நேரில் சந்தித்து, அறிந்து கொண்டு விட்டேன்!''

''மாயாவைச் சந்தித்தாயா? எப்போது?''

''அதை அப்புறம் சொல்கிறேன். இப்போது என் திட்டத்தை மட்டும் கேள். மாயாவுக்கு எது ஆனந்தம் தருமோ அதை நான் செய்யப் போகிறேன். எவன் என்னால் சிறையில் அடைக்கப்பட்டானோ, அவன் என்னாலேயே விடுதலை அடையும்படி பண்ணப் போகிறேன்!''

அருண் நண்பனை வியப்புடனும் திகிலுடனும் நோக்கினான். நிதானக்காரனும், அழுத்தக்காரனுமான பத்மனாபனை இப்படி ஆவேசக்காரனாக மாற்றியது எந்தச் சக்தி? இதெல்லாம் நல்லதற்கா, விபரீதத்துக்கா? அவனுக்குத் திகில் ஏற்பட்டது.

# 7

எம் ஜி.ஆர். புகைப்படங்களை மட்டும்தான் முத்து சேகரிப்பது வழக்கம். அதிலேயும், கூட யாரேனும் இருந்தால் வெட்டி எறிந்து விடுவான்.

ஆகவே, ஒரு படமுமில்லாத ஒரு வெறும் செய்தித் துண்டை அன்று அவன் வெட்டிக் கொண்டிருந்தபோது அவனுடைய தகப்பனாருக்கு ஆச்சரியமாயிருந்தது. கமர்ஷியல் டாக்ஸ் அலுவலகத்தில் (டவுன் பிரிவு) கடைநிலைச் சிப்பந்தி அவர். ஆபீசர் ஐயா, பகல் டிபன் வேலையின் போது பத்துப் பைசா கொடுத்து, பேப்பர் வாங்கிவரச் சொல்லுவார். ஒரு வரி விடாமல் வாசிப்பார். அதை வீட்டுக்கு எடுத்துச் செல்வது அந்தஸ்துக்குக் குறைவான காரியமாதலால், பியூனிடமே தானம் பண்ணிவிட்டுப் போய்விடுவார். அது, இரவு முத்துவின் கைக்கு வந்து, கத்தரிக்கோலுக்கு ஆட்பட்டு, தடித்த நோட்டுப் புத்தகமொன்றில் அடைக்கலமாகிவிடும்.

பீடியைக் கடித்தபடி வியப்புடன் நோக்கும் தகப்பனுக்கு விளக்கினான் முத்து: ''எங்க சின்ன ஐயா பேரு வந்திருக்குதே, நீ பார்க்கலை?''

மகனைப்போலவே 'அஞ்சு கிளாஸ்' வரை பார்த்தவராதலால், தகப்பனார் அந்தத் துண்டை வாங்கி, சிமினி வெளிச்சத்தில் எழுத்துக் கூட்டிப் படித்தார். ''அட! ஆமாம்!.. சர்க்கார் தரப்பில் அட்வகேட் பத்மனாபன் ஆஜரானார்... உங்க சின்ன வக்கில் தானா?'' அவருடைய தொழில் மூளை சுறுசுறுப்படைந்தது. ''மடப் பய மவனே!'' என்று பிள்ளையைக் கண்டித்தார்.

''ஏம்ப்பா?''

''நோட்டிலே கொண்டு போய் ஒட்டுறியே? என்னண்டை கொடடா. ஆபீசண்டை படக்கடை

இருக்குது. கண்ணாடிச் சட்டம் போட்டுத் தர்றேன். தீபாவளி டயமாயிருக்குது. சமயம் பார்த்து நீட்டினியானால் எதினாச்சும் கறக்கலாமில்லே?'' என்றவர் இரண்டு நாளில் அப்படியே செய்து கொடுத்தார்.

**அ**ந்தச் சமயத்தைத்தான் எதிர்நோக்கிக் கொண்டிருந்தான் முத்து, ஹைகோர்ட்டில் வேறு எந்த வக்கீலின் அறையும் திறக்கப்படாத காலை வேளையில், பிராசிக்யூட்டரும் பத்மனாபனும் அவனுடைய இன்னொரு சகாவும் உபயோகிக்கும் அறை மட்டும் கூட்டித் துடைத்துச் சுத்தம் செய்யப்பட்டிருந்ததன் மர்மம் அதுதான்.

ஆனால் பத்மனாபன் குறுக்கும் நெடுக்குமாய் நடை பாவிக் கொண்டிருந்தான், முகத்திலே சிடுசிடுப்புடன்.

''டேய்! கீழே சிந்தாமல் எடுத்துக் கொண்டு போகத் தெரியாது?'' - பானையில் தண்ணீர் பிடிக்க எடுத்துச் சென்று கொண்டிருந்த பையன்மீது பத்மனாபனின் சினம் பாய்ந்தது.

சாதாரணமாக அவன் குரலுக்குப் பயந்து ஒளியும் முத்து, இன்று இளித்துக் கொண்டே அறைக்குள் போனான். சற்றைக்கெல்லாம் வெளியே வந்தான், முதுகின் பின்னால் எதையோ மறைத்து வைத்துக் கொண்டபடி.

''சார், கோபிக்க மாட்டீங்களே?'' பத்மனாபன் விழிகளை உருட்டினான்: ''விளையாடுகிறாயா?''

''இல்லை சார்... இதுதான்... நானே கண்ணாடி போட்டு எடுத்து வந்தேன், சார். உங்க மேஜைக் கெதிரிலே மாட்டி வைக்கட்டுமா சார்?''

பத்மனாபன் திகைப்புடன் பையன் நீட்டியதை வாங்கிப் பார்த்தான்.

**''ஜயஸ்ரீ கம்பெனி மோசடி வழக்கு - எதிரிக்கு மூன்றாண்டு கடுங்காவல்!''**

குப்பென்று ஒரு கணம் வியர்த்தது, மறுகணம் அடங்கியது பத்மனாபனுக்கு.

அவன் முகத்தையே நோக்கிக் கொண்டிருந்த முத்துவுக்கு, அதிலே புன்னகை மலராததைக் கண்டதும் திகில் பிறந்தது. ''நீங்க முதல் முதல்லே ஜெயிச்ச கேசுன்னு எல்லாரும் பேசிக்கிட்டாங்க சார்... பெரிய ஐயாவைக் கூட கேட்கலை...''

மௌனமாகத் திருப்பிக் கொடுத்தான் பத்மனாபன். ''மாட்ட வேண்டாம். கொண்டு போய் வை.''

''ஸ்டாண்டு போட்டு உங்க மேஜை மேலே வைக்கட்டுமா சார்?''

''வேண்டாம், வேறெங்காவது வை.''

முத்து ஏமாற்றத்துடன் நகர்ந்தான்.

பத்மனாபனின் மனத்தில் எரிச்சல் கனன்று கொண்டிருந்தது.

என்ன தொழில் இதெல்லாம்!

மிதாக்ஷராவை தூக்கி மூலையில் எறி. கேஸ் லாவைத் தூக்கி அலமாரியில் போடு. பழுப்பும் நீலமுமான நிறங்களில் அடுக்கடுக்காய்க் கிடக்கின்ற முத்திரைக் காகிதங்கள், வழக்குக் கட்டுக்கள், அவற்றைச் சேர்த்துப் பிடித்திருக்கும் சிவப்பு நூல்கள், இரட்டை நாடி சட்டப் புத்தகங்கள் - எல்லாவற்றையும் தூக்கிக் கண்காணாத இடுக்குகளில் அடைத்து வை. செக்குமாட்டின் பாட்டை மாதிரி பள்ளம் விழுந்த நடவடிக்கைகளை

யெல்லாம் தொலைத்து தலைமுழுகி விட்டு, கிடுகிடு வென்று, புரட்சிகரமாக, புதுமையாக, நாலு பேர் காரசாரமாகப் பேசும்படியான காரியங்களை ஏற்றுக் கொள். பானைக்குள் அடைத்த புளி போல் என்ன புழுக்கமான வாழ்க்கை வேண்டிக் கிடக்கிறது!

மைதீட்டிய கருமைக் கண்கள் துயரத்தினால் கலங்கிச் சிவந்து நிற்க, இரு கை நீட்டி உதவி வேண்டி நிற்கிறாள் ஓர் இளம் பெண். நினைத்தால் அவளுக்கு உதவலாம். யாரும் எடுத்துக் கொள்ளாத புதுமையான பணியை மேற்கொள்ளலாம். வாடித் துவளும் அந்த இதழ்களிலே புன்னகையூட்டி உயிர் கொடுக்கலாம்.

சட்டமாம், கட்டுப்பாடாம், சம்பிரதாயமாம்! சீ! சீ!

பத்மனாபன் குறுக்கும் நெடுக்கும் நடந்தான். விசாலமான அறை. ஹைகோர்ட்டின் கம்பீரத்துக்குக் கொஞ்சமும் குறையாமல், அவனுடைய சீனியரின் அலுவலக அறை அமைந்திருந்தது. குறுக்கே ஒரு பலகைத் தடுப்பு. அந்தண்டை பெரியவருக்கு; இந்தண்டைப் பாதி பத்மனாபனுக்கு; அவனுக்கும் ஜூனியரான இன்னொரு பி.எல். லுக்கு.

சீனியர், ஜூனியர் இரண்டு பேரும் இன்னும் வர வில்லை. ஆகவே அவர்களுடைய இடத்தையும் சேர்த்து நடைவிரிக்கச் சௌகரியமாயிருந்தது.

மாயாவின் அண்ணன் தரப்பை எடுத்துக் கொள்ளப் போகிறேன் என்றதுமே அருண் என்ன பதற்றம் பதறி விட்டான்! நாலு வருஷமாய் எப்.எல்.லில் உட்கார்ந் திருப்பவன் நியாயம் சொல்ல வந்துட்டான், அது தப்பு, இது நியாயமில்லை என்று. ''அவருக்குத் தெரியாதா எது சரி, எது தப்பு என்று?'' என்று கல்யாணி ஒரு போடு போட்டாளோ, வாயை மூடிக் கொண்டாளோ!...

தப்பாம் தப்பு! எது தப்பு? தெரியாமல் ஒரு விஷயத்துக்காக மன்றாடுகிறோம். தெரிந்த பிறகு அதை மாற்றிக் கொள்கிறோம். அதிலே தப்பு எங்கிருந்து வந்தது? ஒவ்வொருத்தரும் கண்மூடித்தனமாகப் பிடிவாதம் பிடித்தால், உலகமே நடக்காது. துணிச்சலாக எவன் தன் கருத்தை மாற்றிக் கொள்கிறானோ அவனால் தான் உலகமே முன்னேறுகிறது.

ஆபீஸ் பையன் வந்து கும்பிட்டான். ''கூட்டு சீக்கிரம்!'' என்று கட்டளையிட்டுவிட்டு, விளக்கு மாற்றுப் புழுதிப் புறப்படுமுன் பத்மனாபன் அறைக்கு வெளியே வந்து, வெராந்தாவில் உலாவத் தொடங் கினான்.

மாயாவிடம் சொல்லாமல் கொள்ளாமல் ஓடி வந்தது முட்டாள்தனமோ? அது மட்டுமல்ல, கோழைத் தனமும் கூட. அவள் அப்பா அடையாளம் கண்டிருப் பார். கண்டிருக்கட்டுமே? ''உமது பிள்ளையின் விடுதலைக்காக நான் பாடுபடுகிறேன் ஐயா!'' என்று மார்தட்டிச் சொல்லிக் கொள்வது?

பத்மனாபனுக்கே ஆச்சரியமாயிருந்தது - தனக்கு என்ன வந்துவிட்டது என்று தெரியாமல். ஒன்றும் வரவில்லை. கண் திறந்திருக்கிறது. மந்தமாக, ஒரே சுருதியில் முணுமுணுத்துக் கொண்டிருந்த மூளை, ஹிந்துஸ்தானி குரலை எடுத்துக் கொண்ட மாதிரி புரள்கிறது. அவ்வளவுதான். அவ்வளவுதானா? மாயா என்ற இரண்டெழுத்துக்கு அதிலே இடமே இல்லையா?

கோபமாக அந்த எண்ணத்தை விரட்டியடித்தான் பத்மனாபன்.

காலடியோசை கேட்டது.

திரும்பிப் பார்த்தான்.

பள்ளிக்கூட மணம் மாறாத பாலகனைப் போன்ற டைப்பிஸ்ட் ஜி.சி.தான். வந்துகொண்டிருந்தான்.

முத்து, அவராவது தன் கட்சிக்கு வரமாட்டாரா என்ற நப்பாசையுடன் நீட்டினான் சட்டத்தை: ''இதை நம்ம ரூமிலே மாட்டலாமின்னு நினைச்சேன் சார்.. ''

''மாட்டலாமென்று நினைத்தால் மாட்ட வேண்டியது தானே?'' என்றான், ஜி.சி. வாங்கிப் பார்த்துவிட்டு.

''உஸ்! நீ சும்மா இரப்பா. பெரியவருக்கு அதெல் லாம் பிடிக்காது,'' என்று அவனை அடக்கிய பத்மனாபன், ''யார் கண்ணிலும் படாமல் எங்கேயானும் வை,'' என்று பையனை அதட்டல் போட்டு அனுப்பினான்.

''வை, வை!'' என்று சொல்லிக் கொண்டே ஜி.சி. உள்ளே சென்று, டைப்ரைட்டர் யந்திரத்தின் மேல் மூடியின் மீது இரண்டு தட்டத் தட்டிவிட்டுக் கழற்றி வைத்தான்.

நாலு வரிகளை அடிக்க ஆரம்பித்த ஜி.சி. நிமிர்ந்து பார்த்துத் திகைத்தான். உர்ரென்று வாய் திறவாமல் வேலைகளைக் கவனிக்கும் பத்மனாபன், எதிரில் நாற்காலியைப் போட்டுக் கொண்டு அமர்ந்திருந்ததே காரணம்.

''என்ன சார், ஏதாவது அவசரமாய் டைப் பண்ணித் தரவேண்டுமா?'' என்று கேட்டான் உடனே.

''அதெல்லாம் இல்லை,'' என்ற பத்மனாபன், டைப்ரைட்டரைக் கையால் பிடித்துக் கொண்டான். உருளையின் நடமாட்டம் நின்று போயிற்று. ''பையன் சட்டம் போட்டு எடுத்து வந்தானே, அதைப் பார்த்ததி லிருந்து என்னவோ யோசனை. ஏன் ஜி.ஸி., அந்த ஜயஸ்ரீ கம்பெனி மோசடி வழக்கில் நான் - அதாவது பிராசிக்யூஷன் ஜெயித்ததே, அது சரிதானா? சட்டப்

படியும், லா பாயிண்ட் படியும் கேட்கவில்லை. பொது வாக ஒரு மூன்றாம் மனிதன் கண்ணோட்டத்தில் கேட்கிறேன்.''

''மூன்றாவது மனிதன் கண்ணோட்டத்தில் கேட்கிறேன் என்கிறீர்கள்?'' ஜி.சி.க்கு மகா பெருமை, ஆனானப்பட்ட பத்மனாபனே தன்னிடம் சந்தேக விளக்கம் கோருகிறாரே என்பதில். ''எந்தக் கண் ணோட்டத்தில் பார்த்தாலும், கரெக்ட் சார். அந்த மூர்த்தியோ – கீர்த்தியோ, அப்பீலானதாலே அவனை நீங்கள் பார்க்கவில்லை. நான் கீழ்க் கோர்ட்டிலேயே பார்த்தேன். இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமா என்கிற மாதிரி இருக்கும். ஆனால் அடேயப்பா, கொலைக்குக் கூடத் துணிந்து விடுவான் சார், சமயம் நேர்ந்தால்!''

''ஸப்போஸிங்,'' என்றான் பத்மனாபன். ''ஒரு வார்த்தைக்குக் கேட்கிறேன். அதே மூர்த்தியின் கேஸை நான் எடுத்துக் கொண்டு வேறே ஒரு அப்பீல் போடு கிறேன் என்று வைத்துக்கொள்–''

ஜி.சி.யின் பால முகம் வெள்ளை வெளேரென்று மாறியது; ''இரையாதீர்கள்! பெரியவர் காதில் விழுந்தால் எனக்கு வேலை போய்விடும்! வக்கீல்கள் இன்றைக்கு ஒரு தரப்பு, நாளைக்கு வேறு ஒரு தரப்பு என்று எப்படி எடுத்துக்கொள்ள முடியும்? தொழில் ஒழுக்கத்தைக் கெடுத்ததாகக் குற்றம் சாட்டி, கோர்ட்டுக்குள்ளேயே நுழைய முடியாதபடி பண்ணிவிடுவார்கள்! உங்களுக்குத் தெரியாததா?''

''ஆமாம்,'' என்ற பத்மனாபன், எழுந்து கொண்டான்.

வெளியே நீதிமன்றம் சுறுசுறுப்படையத் தொடங் கியது. ''ஐயா வந்துட்டாங்களா?'' என்று ஒரு கட்சிக் காரர் ஆபீஸ் பையனை விசாரித்துவிட்டு அகன்றார்.

அடுத்தடுத்த அறைகளில் நடமாட்டங்கள் அதிகரித்தன. இத்தனை நேரமும் எங்கேயோ ஒளிந்து கொண்டிருந்த மாதிரி, டவாலிகள் திடீரென டஜன் கணக்கில் தென் பட்டார்கள். சளசளவென்ற பேச்சுக்கள், ஒரு பெரிய லாயரோ, பிரமுகரோ, நீதிபதியோ தலை காட்டும் போது சரேலென அடங்குவதும், பிறகு குப்பென்று பொங்குவதுமாக இருந்தன.

''ஜி.சி.!'' என்று அழைத்தான் பத்மனாபன். ''பெரியவர் வந்தால் சொல். எனக்கு ஒரே தலைவலி.''

கழற்றி வைத்திருந்த கோட்டை மாட்டிக்கொண்டு பத்மனாபன் புறப்பட்டபோது ஜி.சி. வியப்பினால் பதில் கேள்வி கேட்கக் கூடத் தோன்றாமல் வாயடைத்து நின்றான். ஒரு நிமிடம் முன்னால் வரையில் கூட, தலைவலியின் நிழலே தெரியாமல் இருந்தவருக்கு திடீரென்று என்ன வந்தது?

பூந்தமல்லி நெடுஞ்சாலையில் கோலமாவை திட்டுத் திட்டாக வெள்ளை வெய்யில் புள்ளிகள் மரங்களையும் மீறிக்கொண்டு படிந்திருந்தன.

பத்மனாபன் நின்றான்.

மாயாவின் அப்பாவைச் சந்தித்தால் என்ன என்று சற்றுமுன் தோன்றிய துணிச்சல் இப்போது மீண்டும் விடை பெற்றுக் கொண்டிருந்தது. மகன் மீது அத்தனை ஆத்திரமாக அன்று கத்தியவர் அல்லவா அவர்?

பற்றுப் பாத்திரங்களுடன் ஒரு வேலைக்காரி வெளியே வந்தாள்.

''மாயா இருக்கிறதா உள்ளே?'' என்று வாசலில் நின்றவாரே கேட்டான் பத்மனாபன்.

''பாய்லரிலே தண்ணி சுட்டிடுச்சான்னு கேட்டுக் கிட்டிருந்தாங்க. குளிக்கப் போயிருக்கும்'' என்றாள் வேலைக்காரி.

''போகவில்லை யென்றால் கொஞ்சம் கூப்பிடேன்.''

வேலைக்காரி உள்ளே போனாள்.

புடவையின் தலைப்பை இழுத்துப் போர்த்துக் கொண்டு மாயா வந்த போது, பத்மனாபன் நிமிட நேரம் கண்ணைக் கொட்ட மறந்தான். வேலைக்காரி சொன்னது போல் குளிக்கச் சென்று கொண்டிருந்தவள் தான். மேலே சுற்றிய புடவை, அவசரப் பாதுகாப்பு, மதர்த்து நின்ற அங்கங்களின் பூரிப்பை அது கட்டுப் படுத்தக் காணோம்; மிகைப்படுத்திக் காட்டிற்று, அழுத்தி வாரப்படாத கூந்தலுக்கும் ஓர் அழகு உண்டு என்று அவள் சொல்லாமல் சொல்லிக் கொண்டிருந்தாள்.

பத்மனாபனைக் கண்டதும் அவள் கண்கள் மலர்ந்ததைக் காட்டிலும், மருட்சியால் மிரண்டதே அதிகம். சட்டெனத் திரும்பிப் பார்த்துக் கொண்டவள், வாசலுக்கும் வெளியிலேயே சென்று ''இப்படி வாருங்கள்!'' என்று அவசரமாய்க் கூப்பிட்டாள்.

''அன்று வேறு ஒரு முக்கிய வேலை ஞாபகம் வந்து போய்விட்டேன்,'' என்றான் அவளைப் பின் தொடர்ந்த பத்மனாபன். ''எனக்குத் தெரியும் எல்லாம். உங்கள் அண்ணன் மூர்த்தி விஷயம்தானே? உங்களுக்கு என்னால் முடிந்த உதவியைச் செய்வது என்றுதான் இப்போது வந்தேன்.''

நன்றியினாலும் உவகையினாலும் அவள் கண்கள் பனித்தன. ''நீங்கள் செய்யக்கூடிய முதல் உதவி, என்னை 'நீங்கள்' என்று சொல்லாமல், 'நீ' என்று கூப்பிடுவதுதான்.''

''மாயா என்று பெயர் சொல்லியே கூப்பிடுகிறேன்,'' என்னும்போதே பத்மனாபனுக்கு நா இனித்தது.

''அப்பா ஒரே பிடிவாதமாக, இனிமேல் அண்ணன் பேச்சையே எடுக்கக்கூடாது என்கிறார்.. நீங்கள் வந்திருப்பது தெரிந்தால் சத்தம் போடுவார்.''

பத்மனாபன் நகைத்தான்: ''மூர்த்தி விடுதலையாகி வந்தால்? எனக்குக் கிடைக்கிற வரவேற்பு வேறுவிதமா யிருக்கும்?''

அந்தக் கற்பனையே மாயாவின் இதயத்தை ஜில்வென்று பறக்க வைத்திருக்குமோ? அவள் குரல் தழுதழுத்தது. ''அப்போது மாலை போட்டு வரவேற்க மாட்டேனா!''

அந்த வாக்கியத்தின் மற்றொரு பொருள் காதில் தேனாகப் பாய்ந்தது. ''மாலை அப்புறம் வாங்கிக் கொள்கிறேன். இப்போது, வழக்கைப் பற்றிய பேப்பர் களை வாங்கிக் கொண்டு போகத்தான் வந்தேன். உங்கள் வக்கீலிடமிருந்து எல்லாம் திரும்பி வந்து விட்டதல்லவா?''

வீட்டுக்குள் ஒருமுறை எட்டிப் பார்த்துக் கொண்ட மாயா, ''வந்துவிட்டது. ஆனால் பீரோவிலே பூட்டி வைத்திருக்கிறார் அப்பா அவ்வளவையும். ராத்திரி கிராமத்துக்குப் புறப்படப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தார்..''

''ராத்திரி எத்தனை மணிக்கு வரட்டும்?'' என்று துடிப்புடன் கேட்டான் பத்மனாபன். அவளுடன் ஒரு ரகசியச் சதியில் ஈடுபடுவதே எத்தனை இன்பமா யிருக்கிறது!

''பத்து மணிக்கு... வேண்டாம், பதினொன்றுக்கு வாருங்கள்.....''

''ரைட்டோ!'' அவள் முகத்தைப் பார்த்தபோது இன்னும் இரண்டு வார்த்தையாவது பேச வேண்டும் போல் இருந்தது.

''எதற்கும் கவலைப்படாதீர்கள். நான் இருக்கிறேன்,'' என்றான்.

''தெய்வம் மாதிரி-'' என்று வாக்கியத்தைப் பூர்த்தி செய்தாள் மாயா.

''எது வரையில்?'' என்று படுக்கையை விரித்துப் போட்டுக் கொண்டிருந்த கல்யாணி வினவினாள்.

''சொல்லிவிட்டுத்தான் போகவேண்டுமென்றால் சொல்லிவிட்டுப் போகிறேன்,'' என்றான் பத்மனாபன்.

''சொல்லாமல் போவது வழக்கமில்லையே என்ப தால் கேட்டேன். மழை வரும்போல் இருக்கிறதே, குடை எடுத்துத் தரட்டுமா?''

''வேண்டாம்.'' பத்மனாபன் தெருவில் இறங்கி னான். ''எனக்காக விழித்திருக்காதே. வந்து கதவைத் தட்டுகிறேன்.''

''தயவு பண்ணி என் தூக்கத்தைக் கலைக்காதீர்கள். பின்பக்கம் சின்னச் சுவர் தானே? ஏறிக் குதித்துக் கொள்ளுங்கள். யாராவது போலீஸ்காரன் பார்த்துக் கேட்டால், என் புருஷன்தான் என்று நான் சாட்சி சொல்கிறேன்.''

பத்மனாபன் சிரிக்கவில்லை. கதவைச் சாத்திக் கொண்டு நடந்தான்.

அமைந்தகரை செல்லும் இருபத்தேழு, கடைசி பஸ் கிடைத்தது. பஸ்ஸுக்குள் ஒரே ஈரம். ஜன்னல் கித்தான்கள் சொதசொதவென்று கண்ணீர் வடித்தன. நகரத்தின் மறுமுனையில் நல்ல மழை போலும்.

ஆமாம். பூந்தமல்லி நெடுஞ்சாலையில் தரை ஈர மாய்த்தான் இருந்தது. பன்னீர்ச் செம்பிலிருந்து தெளிக்கப் பட்டாற்போல் சிதறும் மழைத் துளிகளிலிருந்து கையால் பாதுகாப்புக் கொடுத்துக் கொண்டு பத்மனாபன் விரைந்தான்.

கைக்குட்டையைத் தலைமீது விரித்துக் கொண்டு வாசல் கேட்டருகிலேயே நிற்கும் மாயாவின் உருவத்தை இருள் கவர்ச்சியூட்டிக் காட்டியது. லேசான ஈரத்தினால் உடம்பைக் கவ்விக் கொண்டிருந்தது ஆடை.

''அப்பா ஊருக்குப் போகவில்லை. நாளைக்கு ஒத்திப்போட்டு விட்டார்,'' என்று கிசுகிசுத்தாள் அவள்.

''அடடா!''

''பரவாயில்லை. நன்றாய் அயர்ந்து தூங்குகிறார். உங்களிடம் கொத்துச் சாவி ஏதாவது இருக்குமா?''

பத்மனாபன் சிறிது தயங்கினான். எதற்கும் துணிந்த பெண்ணாயிருக்கிறாளே?

பையைத் தொட்டுப் பார்த்துக்கொண்டு, ''இருக் கிறது '' என்றான்.

''என் பின்னால் வாருங்கள், ஓசைப்படுத்தாமல்.''

''அவர் விழித்துக்கொண்டு விட்டால்?''

''மாட்டார், வழக்கமாக அவர் ஒரு தூக்க மாத்திரை தான் சாப்பிடுவது, இரண்டாகக் கொடுத்திருக்கிறேன்.''

தனிமை; இருள்; அழகிய மங்கை.

பத்மனாபன் போதை நிறைந்த மயக்கத்துடன் மாயாவை ஒட்டினாற்போல் நடந்தான்.

# 8

அருண் எதிர்பார்க்கவில்லை.

காலை முதலே, அவன் குடியிருந்த வீட்டின் பின் கட்டில் பரபரப்பு கோலோச்சிக் கொண்டிருந்தது.

கொளுத்திய ஊதுவத்தியின் மணமும் கரைத்த சந்தனத்தின் வாசனையும் கலந்து மிதந்தன. காற்றில் தரைக்கும் நிலைப்படிகளுக்கும் அழகூட்டிற்று பளிச்சென்ற வெள்ளைக் கோலம். சமையலறையிலிருந்து வந்த புகை, ஏலக்காயும், நெய்யும் படாதபாடு படுகின்றன என்பதை அறிவித்தது.

குடுகுடுவென்று ஓடும் குழந்தைகளும், சரசரவென்று விரையும், புதுப்புடவைப் பெண்மணிகளும் வீட்டைக் கலகலக்கச் செய்து கொண்டிருந்தனர்.

செக்ரடேரியட்டில் யூ.டி.ஸி. யான சிதம்பரத்தின் நாலாவது பெண் குழந்தைக்கு ஆண்டு நிறைவு–காது குத்தல் வைபவம்.

''ஏண்டா சிதம்பரம்!'' என்று அவருடைய தாய் அழைத்தாள், வாழைத்தண்டை நறுக்கிய நாரை விரலில் சுற்றியபடி.

''என்னம்மா?''

''அந்த முன்கட்டுப் பிள்ளையைச் சாப்பிடக் கூப்பிட்டாயா? ரொம்ப ஒத்தாசை அந்தப் பிள்ளை. அன்றைக்குப் பார், ஒரு நொடியிலே கடைக்குப் போய் எனக்காக ஓம வாட்டர் வாங்கிக் கொண்டு வந்து தந்தான்...''

''அருண்தானே? காலையில் டிபனுக்கே கூப்பிடலாமென்று பார்த்தேன். ரூமில் இல்லை. இப்போது சொல்லி விட்டு வருகிறேன்.''

தன் மனைவி, குழந்தைக்காகச் செய்திருந்த ஜிமிக்கியை ஒரு பாட்டியம்மாளிடம் காட்டிக் கொண்டிருப்பதை, வாசல் பக்கத்துக்குப் புறப்பட்ட சிதம்பரம் கவனித்தார்.

வயிற்றில் புளியைக் கரைத்த மாதிரி ஆகிவிட்டது.

உற்சாகமெல்லாம் பறந்துபோக, திரும்பி உள்ளே வந்து காமரா அறைக்குள் புகுந்து, ஓர் ஒடிசல் முக்காலியில் உட்கார்ந்து கொண்டு விட்டார்.

''நன்றாய்ப் போச்சு! உங்களை எங்கெல்லாம் தேடுவது? பட்சணம் சாப்பிட இப்போதுதானா நேரம் பார்த்தீர்கள்!'' என்று அதட்டிக் கொண்டு அவர் மனைவி வந்துவிட்டாள் கொஞ்ச நேரத்துக்கெல்லாம்.

''ஆமாம்! பட்சணம் தின்கிறேன். நீயும் ஒரு பிடி எடுத்துக் கொள்!'' என்று சீறிய சிதம்பரம். மறு வினாடியே குழைந்தார். ''ஏன் கோமதி, இந்தத் தடவையும் குழந்தையை நான்தான் பிடித்துக் கொள்ள வேண்டுமா?''

''எதற்குப் பிடித்துக் கொள்வது?'' என்று திருமதி சிதம்பரம் திகைத்தாள்.

''புரியாத மாதிரி கேட்காதே குழந்தைக்குக் காது குத்துகிறபோது கேட்கிறேன்.''

''லட்சணம்தான் குழந்தையைத் தகப்பனார் வைத்துக் கொள்ளாமல் வேறு யார் வைத்துக் கொள்வது?''

''சுற்றி வளைத்துப் பேசாதே,'' என்று கண்டித்தார் சிதம்பரம். ''சாஸ்திரமா?''

''அதென்னவோ எனக்குத் தெரியாது. எதற்காக இந்த விசாரணை!''

''காதைக் குத்துகிறபோது குழந்தை வீல் வீலென்று கத்துவதைப் பார்த்தால் எனக்கு வயிற்றைப் பிசையும். நீ வைத்துக் கொள்ளேன்?''

''சிரிக்கப். போகிறார்கள்! சும்மா இருங்கள். இரண்டே நிமிஷம்தான்.''

சிதம்பரம் உற்சாகத்துடன் எழுந்தார். ''அருணைக் கேட்கிறேன். அவன் செய்வான்.''

''வந்து...'' என்று ஆரம்பித்த அவர் மனைவி, நாளும் கிழமையுமாய் இருக்கிறபோது எதையும் வேண்டாமென்று சொல்லக்கூடாது என்பதால் பேசா திருந்தாள்.

சிதம்பரம் முன்னறைக்குச் சென்று பார்த்தார். கதவு திறந்திருந்ததில் இரட்டிப்பு சந்தோஷம் ஏற்பட்டது.

''என்ன அருண், குழந்தைக்கு ஆண்டு நிறைவு. தெரியுமோ இல்லையோ?''

முககூஷவரம் செய்து கொண்டிருந்த அருண் வெளியே வந்து, ''யார், ராஜிக்கா? பலே, பலே! அதுதான் காலையிலிருந்து வீடு ஒரே கல்யாண மகோற்சவமாய் இருக்கிறதா?'' என்றான்.

''நீ கட்டாயம் சாப்பிட இருக்க வேண்டும்,'' என்றார் சிதம்பரம்.

''அடடா! பத்து நாளாய் மட்டம் போட்டு விட்டேன் காலேஜுக்கு. இன்றைக்காவது போகலாம் என்றிருக் கிறேன். அதனால் என்ன? ராத்திரி வந்து சாப்பிடு கிறேன். எடுத்து வைத்திருங்கள்,'' என்றான் அருண்.

''நோ, நோ!'' என்று சிதம்பரம் பதறினார். ''சாப்பாடு மட்டுமில்லை. உன்னிடம் வேறொரு உதவியும் கேட்கத்தான் வந்தேன்,'' என்றவர் தயங்கித் தயங்கி விஷயத்தை வெளியிட்டார்.

''எனக்கு அனுபவமே இல்லையே சார்!'' என்று அருண் மறுக்க முயன்றான்.

''இதிலே அனுபவம் என்ன பெரிய இது! மடியிலே பிடித்து உட்கார்த்தி வைத்துக் கொள்ள வேண்டியது தானே? எனக்கு அவள் அடங்கமாட்டாள். உன்கிட்டே என்றால் கொஞ்சம் பயப்பட்டு பேசாமல் இருப்பாள். அதற்காகத்தான் சொன்னேன்...''

''சரி, சார் ஜமாய்த்து விடுகிறேன்! கவலைப்படா தீர்கள்,'' என்று வாக்களித்தான் அருண்.

**வா**க்களிப்பதுதான் சுலபமாயிருந்தது.

ஒரு வயது நிறையாத பெண் குழந்தையின் உடம்பில் இத்துணை வலுவா இருக்கும்!

குத்தப்படுவது குழந்தையின் காதா, தன் காதா என்ற சந்தேகம் ஏற்பட்டுவிட்டது அருணுக்கு. அது, அவன் வயிற்றில் உதைத்து, மோவாயில் இடித்து, கன்னத்தில் கிள்ளி, சில்க் ஸ்லாக்கைக் கசக்கி, சரிகை வேட்டியை ஈரம் பண்ணி-

அருண் தனக்குள் சபதமே செய்து கொண்டான்: ''எனக்குப் பிறக்கிற குழந்தையை, காது துளைக்காமலே வளர்ப்பேன்!''

''குழந்தை தலையை ஒரேயடியாய் அசைக்குதே! கெட்டியாய்ப் பிடிச்சுக்குங்க!'' என்றார். கிடுக்கி சமேதரான ஆசாரி.

''ரொம்ப அழுத்தாதே அது வேறு இன்னும் கத்துவாள்,'' என்று எந்த மூலையிலிருந்தோ சிதம்பரம் குரல் கொடுத்தார்.

இளம் பெண்கள் சிலபேர் வளையல்களால் கிளுகிளுக்கிற மாதிரி சிரிப்பாலும் கலகலத்தார்கள்.

''ரொம்பப் பொல்லாதவள்!'' என்று அசட்டுச் சிரிப்புடன் அருண் நிமிர்ந்தான்.

சிரிப்பு மறைந்து, மரியாதையும் பயமும் குடியேறின அவன் முகத்தில்.

விருந்தாளிகளின் நடுவே, பத்மனாபனின் சீனியர்- பிராசிக்யூட்டர் சிவசங்கரன் - அமர்த்தலாக உட்கார்ந் திருப்பதைக் கண்டதுதான் காரணம். டையும் சூட்டுமான தொழிலுடையில் அவர் இல்லாவிட்டாலும், தீக்குச்சி போன்ற அவருடைய உருவம் அவனுக்குப் பழக்க மானதுதான். இரண்டொரு முறை அவரிடம் பேசியதும் உண்டு.

விசிறி மடிப்பு அங்கவஸ்திரத்தின் நுனிப்புறத்தைச் சற்றுப் பிரித்து, சட்டையின் உட்புறத்துக்குக் காற்றுப் பாய்ச்சிக் கொண்டிருந்தார் அவர். சிதம்பரத்துக்கு தூர உறவோ? 'இந்த இடத்துக்கெல்லாம் வர நேரிட்டதே' என்ற சலிப்பு அந்தச் சின்ன வாயைச் சுற்றி முத்திரை யிட்டிருந்தது.

அருண் அவர் பார்வையைச் சந்தித்துவிட்டான்.

அத்தனை அமளியையும் மீறிக் கேட்கிற மாதிரி, ''சௌக்கியமா சார்?'' என்று விசாரித்தான் உரக்க.

பிராசிக்யூட்டர் சரளமான சுபாவத்துக்குப் பெயர் பெற்றவரல்ல. இருந்தாலும் இப்போது, கண்ணை லேசாய் மூடி, தலையைச் சிறிது, ஆட்டிப் பதில் கொடுத்தது அருணின் முகத்திலடித்தாற்போல் இருந்தது.

சுற்றியிருந்தவர்களும் அந்த அவமதிப்பைக் கண்டு விட்டார்கள் என்பது அருணுக்குப் புரிந்தது. சங்கடத் துடன் தலையைக் குனிந்து கொண்டான்.

''ஆரத்தி கொட்டுங்கம்மா,'' என்ற ஆசாரி, குறட்டை இடுப்பில் செருகிக் கொண்டு எழுந்தார்.

''அப்பாடா,'' என்று குழந்தையைத் தாயிடம் ஒப்படைத்தான் அருண். காதில் பூசிய குங்குமம், சிவப்பு

நிற ஜிமிக்கி இரண்டுமாகச் சேர்ந்து, பயங்கரமான காட்சி தந்து கொண்டிருந்தன.

வாசல்புறம் சாய்வு வைத்த திண்ணைக்குச் சென்றார்கள், ஆண்பிள்ளைகள். பெண்கள், அடுப்பங் கரைக்குள் புகுந்து கொண்டார்கள்.

மறுபடியும் 'பெரிய'வரைச் சந்திக்க அருணுக்குத் தயக்கமாகவே இருந்தது. அதே சமயம், அவருடைய சினத்துக்குக் காரணம் அறியும் ஆவலும் ஏற்பட்டது.

திண்ணையில், 'ஹிந்து' பேப்பரை பிரித்து வைத்துக் கொண்டு தனியே உட்கார்ந்திருந்தார் பத்மனாபனின் சீனியர்.

குரலை எவ்வளவு முடியுமோ அவ்வளவு இனிமை யாக்கிக் கொண்டு, ''நமஸ்காரம் சார்,'' என்றான்.

கண்ணை மட்டும் உயர்த்தி, ''ஊம்,'' என்றார் சிவசங்கரன்.

''பார்க்க வேண்டுமென்று... வரவே முடிவதில்லை..'' என்றான் அருண். ''பத்மனாபனைக் கூடப் பார்த்துப் பத்து நாளாகப் போகிறது...''

''நானும்தான்,'' என்றார் சிவசங்கரன் வெடுக்கென்று.

அந்த இரண்டு வார்த்தையில் இருந்த உஷ்ணம் அருணைச் சுட்டது; நிலைமையின் கடுமையையும் விளக்கியது.

மெல்லத் திரும்பினான் அறைக்கு.

அரை மணி கழித்து, ''இலை போட்டாயிற்று. வாருங்கள்'' என்று சிதம்பரம் வந்து அழைத்தார்.

''அருண்! அருண் எங்கே?'' என்று அவர் கேட்ட போது யாருக்கும் சரியான தகவல் தரத் தெரியவில்லை.

அருணின் அறை பூட்டப்பட்டிருந்தது.

அடுத்த இரண்டு மணி நேரம் அருண் அலைந்து கொண்டே இருந்தான்.

ஹைகோர்ட்டில் பத்மனாபனின் சீனியருடைய அறையில் நிசப்தம் குடி கொண்டிருந்தது.

டைப்பிஸ்டு ஜி.சி. குனிந்த தலை நிமிரவில்லை. ஆபீஸ் பையன் முத்து, வெகு ரகசியமாக, ''பத்மனாபன் சார் நாலைந்து நாளாய் இங்கே வரவேயில்லை. அதற்கு முன்னாலே கூட, சும்மா தலையைக் காட்டிட்டு ஓடிட்டுத்தான் இருந்தார்,'' என்று தெரிவித்தான்.

வெயிட்டிங் போட்டிருந்த ஆட்டோவில் திரும்ப ஏறி, திருவல்லிக்கேணியை அடைந்தான் அருண்.

பத்மனாபனின் வீடு பூட்டப்பட்டிருந்ததைப் பார்த்த போது திக்கென்றிருந்தது. கல்யாணி கூட எங்கே போய் விட்டாள்?

''மார்க்கெட் பக்கம் போனாங்க அம்மா,'' என்று வேலைக்காரச் சிறுமியொருத்தி கூறினாள்.

பத்து நிமிடம் காத்திருந்தும் பயனில்லாமல் அருண் திரும்பினான்.

இனி சாயந்தரம் பார்த்துக் கொள்ளலாம். கல்லூரியில் அதுவரை நேரத்தை ஓட்ட வேண்டியதுதான்...

அருண் சட்டக் கல்லூரிக்குத் திரும்பினான்.

இரவு சுமார் எட்டு மணிக்கு மறுபடியும் பத்மனாபனின் வீட்டுக்குத் திரும்பியபோது ஏமாற்றம் ஏற்படவில்லை.

செருப்பைக் கழற்றிப் போட்டதுமே, ''பத்மனாபன் எங்கே?'' என்றுதான் அருண் வினவினான்.

கல்யாணி அவன் கேள்விக்கு விடை தராமல், ''நீங்கள் போன ஜன்மத்தில் கழுகாகத்தான் பிறந்திருக்க வேண்டும்.''

''ஏன்?''

''சித்திரான்னம் தயாரிக்கிறேன் என்று எப்படித் தெரிந்தது பின்னே?'' என்று கல்யாணி சொன்ன பிறகு தான், அவள் கையில் இருந்த எவர் சில்வர் கரண்டியில் தயிர் சாதமும் புளியஞ்சாதமும் ஒட்டிக் கொண்டிருப் பதைக் கண்டான் அருண்.

''ரொம்ப சந்தோஷம். பத்மனாபன் எங்கே?''

''உஸ்!'' என்று உதட்டில் விரல் வைத்து எச்சரித்து விட்டு, பத்மனாபனின் அறையைக் காட்டினாள் கல்யாணி.

கதவு சாத்தியிருந்தது. ஆனால் திரைச் சீலையைக் கிழித்துக் கொண்டு வெளிவரும் வாள்போல், கதவின் இடுக்கு வழியாக விளக்கு வெளிச்சம் வந்து கொண் டிருந்த்து.

''உங்களை அழைத்து வரும்படி சொல்லியிருந்தேன். பௌர்ணமி இல்லையா இன்றைக்கு? அவருக்கு, பாவம், ஏகப்பட்ட வேலை. பத்து நாளாய் மூச்சுவிடக் கூட ஒழிவில்லாமல் இருக்கிறார்.''

பத்மனாபன் கதவைத் திறந்து கொண்டு வெளிவந்து, ''எப்போது வந்தாய்?'' என்றான் அருணிடம்.

மார்பை அடைத்துக் கொண்டது அருணுக்கு, அவன் தோற்றத்தைக் கண்டதும்.

பத்து நாட்களுக்குள் பத்து வருடத்தையோ கடந் திருப்பான் ஒருவன்? முக க்ஷவரத்துக்குக் கூட நேர மில்லாத ஒரு வக்கீலா! தலையை வாரிக் கொள்ளக் கூடப் பிடிக்காமல் ஒரு பிரச்சினையா? கண்ணைச்

செக்கச் செவேலென்று மாற்றி விடும் அளவுக்கு ஒரு குழப்பம் ஏற்பட முடியுமா, யாருக்கேனும்?

''என்ன பத்மனாபா இந்தக் கோலம்?'' என்று கேட்டு, அதை விளையாட்டாகக் கேட்கிற மாதிரி, சிரிக்கவும் முயன்றான் அருண். ஆனால் தொண்டையில் ஏதோ ஒன்று பந்துபோல் அடைத்துக் கொண்டதே தவிர, புன்னகை மலர மறுத்தது.

''ஐயையோ! அவருடைய தவத்தைக் கலைத்து விட்டீர்களே! பிடியுங்கள் சாபம்!'' என்றாள் கல்யாணி.

பத்மனாபன், ''என்ன, சமையலெல்லாம் முடிந்து விட்டதா? மாடியில் கொண்டு போய் வை!'' என்றான்.

''நீங்கள்?''

''அருண்தான் வந்திருக்கிறானே, சாப்பிட ஆரம்பி. நான் பிற்பாடு வந்து சேர்ந்து கொள்கிறேன்.''

பேசிக்கொண்டே மெல்ல அறையின் கதவையும் சாத்த முயல்வது தெரிந்தது அருணுக்கு. தன்னை மீறிக் கொண்டு உள்ளே யாரும் பிரவேசித்து விடாதபடி வாசலின் குறுக்கே நின்று கொள்கிறானே, ஏன்?

''வேலையை முடித்து விட்டுத்தான் வாயேன்?'' என்று அருண் வற்புறுத்தினான்.

''பிடிவாதம் பிடிக்க இந்த வீட்டில் ஒருத்தி போதும். போ, சொல்கிறேன்.''

நிலா சிரித்தது. தாயைச் சுற்றி வந்து விளையாடும் குழந்தைகள் போல, நிலவைச் சுற்றித் தாரகைக் கூட்டம் சிரித்தது. தென்றல் சிரித்தது. சின்னச் சின்னப் பாத்திரங்களில் சித்திரான்னங்கள் சிரித்தன.

ஏன், கல்யாணி கூடச் சிரித்துக் கொண்டுதான் இருக்கிறாள். ''இன்றைய பட்ஜெட் செலவு என்ன

தெரியுமா? கணக்குப் போட்டேன். ஏழு ரூபாய் நாற்பத்தேழு பைசா. நீங்கள் வாயில் போட்டுக் கொள்ளும் ஒவ்வொரு கவளமும் பத்து பைசா மதிப்பாக்கும்!''

அருணின் இதயம் கனத்துக் கொண்டிருந்தது. ''பத்மனாபன் இன்னும் வரக் காணோமே?''

'பத்து நாள் முந்தி, எங்கோ வெளியே போய்விட்டு ராத்திரி இரண்டு மணிக்கு வீடு திரும்பினார். அதற்கப் புறம் அவர் அவராகவே இல்லை.''

''பத்து நாள், பத்து நாள், பத்து நாள்! அப்படி என்ன நடந்தது பத்து நாள் முந்தி... விக்! விக்!'' அருண் தலையில் குட்டிக் கொண்டான். புளியஞ்சாதம் புரையேறியதால்.

''விக்கலா? தண்ணீர் குடியுங்களேன்?'' என்றாள் கல்யாணி.

அருண் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, உதட்டைப் பிதுக்கினான். ''அது...விக்...அது ஒன்றைத்தான் மறந்து விட்டாய்!''

''நான் போய் எடுத்து வருகிறேன்,'' என்று சொல்லி, கீழே இறங்கிச் சென்றாள் கல்யாணி.

சமையலறையிலிருந்து செம்பில் தண்ணீர் எடுத்துக் கொண்டு திரும்பும் போது, கணவனின் அறையில் வெளிச்சம் தெரிந்தது.

ஆனால் பத்மனாபன் நிமிர்ந்து அமர்ந்திருக்கவில்லை. மேஜையில் தலையைச் சாய்த்துப் படுத்திருந்தான். மேஜை மீதிருந்த காகிதங்களின் குறுக்காக அவன் கை நீண்டு கிடந்தது. மேஜை விளக்கின் வளைவு, குனிந்து அவனைப் பரிதாபத்துடன் பார்ப்பது போலிருந்தது.

''தூங்கிவிட்டீர்களா என்ன?'' என்று வினவிய வண்ணம் அறைக்குள் சென்றாள் கல்யாணி.

பத்மனாபன் எழுந்திருக்கவில்லை. களைப்பு மிகுதியினால் அயர்ந்து தூங்குவது தெரிந்தது.

கையின் கீழே இருந்த காகிதங்களின் மீது கல்யாணியின் பார்வை சென்றது. வழக்கு சம்பந்தப் பட்ட பேப்பர்கள்.

மறைத்திருந்த பகுதிகள் போக, மற்ற இடங்களில்–

''ஜெயஸ்ரீ கம்பெனி... மூர்த்தி.'' என்ற சொற்கள் நிறையத் தென்பட்டன.

சரேலென ஒரு நடுக்கம் காலிலிருந்து தலைக்கோடி நின்றது. நெஞ்சின் படபடப்பு அவள் செவிக்குக் கேட்டது.

கல்யாணி சுதாரித்துக் கொண்டாள். மெல்ல கணவனின் கையை விலக்கி பரந்து கிடந்த காகிதங்களை ஒழுங்குபடுத்தி அடுக்கினாள். கண்ணாடிக் குண்டை எடுத்து பாரம் வைத்தாள். பேனாவை மூடி, பிளாஸ்டிக் ஸ்டாண்டில் செருகினாள். இரண்டு தலையணைகள் எடுத்து வந்து, பத்மனாபனின் முதுகுக்கு ஒன்றும், கையின் கீழ் ஒன்றுமாக இதமாக அணைப்புக் கொடுத்து விட்டு, மேஜை விளக்கை அமர்த்தினாள்.

ஓசைப்படுத்தாமல் கதவைச் சாத்தின் கொண்டு, வெளியே வந்தபோது, தொண்டையில் ஏதோ உப்புக் கரிக்கிற மாதிரி இருந்தது.

விழுங்கிய கண்ணீர்.

பத்து நாள் முன்பு, பத்து நாள் முன்பு....!

என்ன நடந்தது அந்தக் கொடிய இரவின் திரை மறைவில்?

# 9

பத்து நாளைக்கு முன் அப்படி என்ன நடந்தது?

வழக்கு சம்பந்தமான தஸ்தாவேஜுகளை எடுத்துத் தருவதாக, வீட்டுக்குள் மாயா அழைத்துச் சென்றபோது—

இருள் எச்சரிக்க, நிசப்தம் துணை வர, அவள் பின்னே நடந்தான் பத்மனாபன்.

மாயாவின் கூந்தலிலிருந்து வந்து கொண்டிருந்த ஒரு மென்மையான மணம், பத்மனாபனை மயக்கத்துக் குள்ளாக்கிக் கொண்டிருந்தது.

கல்யாணமானவனும், கௌரவமான உதவி பிராசிக்யூடருமான தான், பழக்கம் சிறிதுமில்லாத ஒரு பருவப் பெண்ணின் அந்தரங்கச் செயல்களில் பங்கு கொண்டு, வேளையில்லாத வேளையில், தன்னந்தனி யான அவளுக்குத் துணையாக நிற்பது, அவனாலேயே நம்ப முடியாததாக இருந்தது. இதெல்லாம் சரிதானா என்று மனச்சாட்சி ஒரு பக்கம் வினவினாலும், சரியில் லாததைச் செய்யும் கிளுகிளுப்பு அவன் உள்ளத்தைத் துள்ள வைத்தது.

மாடிக்குச் செல்லாமல் கீழேயே இரண்டு அறை களைத் தாண்டி, சற்று விசாலமான மூன்றாவது அறையை அடைந்தாள் மாயா. நள்ளிரவு நேரத்தின் ஆதிக்கம் சூழ்ந்திருந்தது வீடெங்கும்.

மாயாவின் அப்பாவைத் தூக்க மாத்திரை எவ்வளவு தூரம் வசப்படுத்தியிருக்குமோ என்ற சந்தேகம் அவனுள் ஏற்பட்டிருந்தது. வீட்டில் அவர் ஒருத்தர் தானா?

''உன் அம்மா எங்கே?'' என்று கிசுகிசுத்தான் பத்மனாபன்.

''அம்மா ஊரிலேயே இல்லை,'' என்று பதிலளித்த மாயா, எஃகு பீரோவை அடைந்ததும் நின்றாள். பக்க வாட்டில் எதற்காகத் துழாவினாளோ? அவள் கையின் வளையல்கள் பட்டபோது பத்மனாபனுக்கு போதை ஏறியது. ''என்ன தேடுகிறாய்?''

பதில், டார்ச் விளக்கின் வெளிச்சமாக வந்தது.

''கொத்துச்சாவி வைத்திருக்கிறேன் என்றீர்களே?''

''இதோ,'' என்று பத்மனாபன் எடுத்து நீட்டினாலும், அதில் எதுவும் அந்தப் பீரோவுக்குப் பயன்படாது என்பதை அறிந்து கொண்டு விட்டான்.

மாயா ஒவ்வொன்றாகப் பொருத்திப் பார்த்தாள். ஏழெட்டுச் சாவிகளில் ஒவ்வொன்றாக ரத்து ஆக ஆக, அவளுடைய வதனத்தில் ஏமாற்றம் படர்ந்து கொண்டே வந்தது.

இன்னும் இரண்டொரு சாவிகள் மிச்சமிருந்தன.

''அதோ அந்தச் சாவியைப் போட்டுப் பார்,'' என்றான்.

''எதை?''

''இது.'' சாவியைக் காட்டும் சாக்கில், தாமரை மொட்டெனச் சிவந்து குவிந்த அந்த உள்ளங்கையைத் தொட்டபோது, தன் தேகத்தில் ரத்தத்துக்குப் பதில் மது ஓடுகிறதோ என்ற கிறக்கம் ஏற்பட்டது பத்மனாபனுக்கு.

மாயா கடைசி சாவியைப் பொருத்தவிருந்தபோது—

தோட்டப்புறத்தில் மாடியிலிருந்து விளக்கொளி விழுந்தது. மாடியறை ஜன்னலைக் கிழித்துக் கொண்டு அது வந்திருக்கிறது என்பதைக் கம்பியின் நிழல்கள் புலப்படுத்தின.

''அப்பா அறையில் விளக்கு எரிகிறதே!'' என்று வியப்புடன் சொன்னாள் மாயா, கையிலிருந்த டார்ச்சை உடனே அணைத்துவிட்டு.

''அவர் தூங்கவில்லை?''

மாடியிலிருந்து எதுவோ வீசிக் கொட்டப்பட்டது.

''பாலைக் கொட்டிவிட்டாரே! தூக்க மாத்திரையை அதில்தான் கலந்திருந்தேன். வாருங்கள் இப்படி''– பரபரப்புடன் பத்மனாபனை அழைத்துச் சென்றாள் மாயா.

அடுத்த அறையில், ஒரு கட்டிலும் மேஜையும் மட்டுமே இருந்தன. கட்டில் மீது மெத்தைகளும், பாய்களும் விரிப்புகளும் சுருட்டி வைக்கப்பட்டிருந்தன.

''கொஞ்ச நேரம் இங்கே இருப்போம்,'' என்றாள் மாயா.

அவன் கதவைச் சாத்திக்கொண்டான். சாவித் துவாரத்தின் வழியாக நூல் போல வந்த ஒரு சிறு வெளிச்சத்தைத் தவிர, மையிருட்டு அவர்களைச் சூழ்ந்து கொண்டது.

''சத்தம் போடாதே,'' என்று அவள் செவியருகே எச்சரித்தான் பத்மனாபன்.

''என்ன சொன்னீர்கள்?'' என்று மாயா திரும்பி வினவியபோது, மாடிப்படியில் யாரோ இறங்கிவரும் காலடியோசை கேட்டது.

அதற்குமேல், வாய்விட்டுப் பேசுவது அபாயம் என்று பத்மனாபன் உணர்ந்தான். அவள் தலையைப் பிடித்துத் திருப்பி, சாவித் துவாரத்தின் வழியே பார்க்கு மாறு காட்டிவிட்டு, அவள் உதட்டின் குறுக்கே தன் விரலை வைத்து, எச்சரிக்கையும் செய்தான்.

ஒருவர் நெஞ்சின் ஓசை மற்றவருக்குக் கேட்டது.

திடீரென மாயாவிடம் பரபரப்பு ஏற்படுவதை அவன் கண்டான்.

அவள் தந்தை ராஜப்பாதான் நுழைந்து கொண் டிருந்தார், சில வினாடிகளுக்கு முன்னால் அவர்கள் இருந்த அறைக்குள்.

மின்சார விளக்கைப் போடாமல் எதற்காக ஒரு சிம்னி விளக்குடன் வருகிறார்?

மேஜை மீது அதை வைத்தார்.

பத்மனாபன் கூர்ந்து கவனித்தான். தூக்க வியாதியோ என்று சந்தேகிப்பதற்கு எள்ளளவும் இடம் இருக்க வில்லை. பக்கத்து அறையைத் திறந்து எட்டிப் பார்த்தார். திருப்தியுடன் திரும்பி, இந்த அறையையும் அணுகினார். நல்ல வேளை திறந்து பார்க்காமல் திரும்பி விட்டார்.

விளக்கை வைத்த ராஜப்பா, இடுப்பில் செருகி யிருந்த கொத்துச் சாவியைக் கொண்டு பீரோவைத் திறந்தார்.

ஒரு காகிதக் கட்டு அவர் கைக்கு வந்தது.

மாயாவின் கை சரேலெனப் பத்மனாபனின் கரத்தை இறுகப் பற்றிக் கொண்டது.

மூர்த்தி சம்பந்தமான வழக்குப் பேப்பர்கள்தான் அவை என்பதை பத்மனாபனும் உடனே ஊகித்துக் கொண்டான்.

ராஜப்பா மீண்டும் மேஜையை அணுகினார்.

ரகசியமாகச் சிம்னி விளக்கு வெளிச்சத்தில் படிக்கப்போகிறாரா?

இல்லை. விளக்கின் கண்ணாடியைக் கழற்றித் தனியே வைத்தார். காகிதக் கட்டைப் பிரித்தார்.

அவருடைய நிதானம் திகிலூட்டுவதாயிருந்தது.

அடுத்த வினாடி -

விருட்டென்று கதவைத் திறந்து கொண்டு, "அப்பா!" என்று கூவியபடி வெளியே பாய்ந்து விட்டாள் மாயா, பத்மனாபன் தடுத்துப் பிடிக்கு முன்பாக.

பத்மனாபன் வசமிழந்துவிடவில்லை. அவளைப் போலத் தன்னையும் காட்டிக் கொண்டு விடக்கூடாது என்று தலையை உள்ளுக்கு இழுத்துக் கொண்டு, கதவையும் சப்தமின்றிச் சாத்திக் கொண்டான்.

''அப்பா! கொடுங்கள் அந்தப் பேப்பர்களை இப்படி!'' என்று சினத்துடன் கத்தினாள் மாயா.

அவர் தடுமாறிப் போனார். குழப்பமும் திகைப்பும் அவரை உலுக்கி எடுத்தன. ''மாயா... நீ... நீ தூங்க வில்லை? போ, போ!''

''போகமாட்டேன்! இதையெல்லாம் கொளுத்தப் பார்க்கிறீர்கள்! நான் அதற்கு இடம் தரப்போவதில்லை!''

''கொளுத்தத்தான் கொளுத்துவேன், என்னைத் தடுக்காதே!''

''எங்கே கொளுத்துங்கள், பார்க்கலாம்!''

அவர் கையை நீட்ட, சரேலென காகிதங்களைத் தட்டிவிட்டாள் மாயா.

சிம்னி விளக்குக் கவிழ்ந்தது, குப்பென்ற நெடியுடன் மண்ணெண்ணெய் கொட்டிப் பரவியது. நெருப்பு அந்தக் காகிதங்களை ஆசையுடன் விழுங்கியதால் வெறிபிடித்த மாதிரி சுவரில் நிழல்கள் ஆடின.

எண்ணெயில் பாதியும் தீயில் பாதியுமாக சிக்கி விட்ட காகிதங்களை முரட்டுத்தனமாக அள்ளிப் பறித்து, புடவையின் தலைப்பில் கட்டிக் கொண்ட மாயா, ''ஒரு வினாடி நான் வந்து தடுத்திருக்காவிட்டால் என்ன நேர்ந்திருக்கும்!''

குற்றம் செய்த குழந்தையைப் போல தலையைக் குனிந்து கொண்டு ராஜப்பா திரும்பியபோது, அவர் தோற்றம் பத்மனாபனைத் திடுக்கிட வைத்தது.

சற்றுமுன் ஆத்திரமும் பதற்றமும் கொண்டு இருந்தவரா இப்படி நடைபிணமாக மாறிவிட்டார்?

''மாயா! நான் சொல்வதைக் கேள் தயவு பண்ணிக் கேள்!'' என்று மகளின் இடையைப் பிடித்துக் கொண்டு பேசினார் ராஜப்பா. ''மூர்த்தி என்று ஒரு பிள்ளை இருந்தான் என்பதையே நான் இனிமேல் மறந்து விடப் போகிறேன்.''

''மாயா என்றொரு பெண் இருந்தாள் என்பதையும் அத்தோடு மறந்து விடுங்களேன்!''

''மாயா!''

''ஆமாம், அப்பா. அம்மாவுக்கு என்னவோ உடம்பு சரியில்லை என்று கிராமத்துக்கு அனுப்பி வைத்து விட்டீர்கள். ஆனால் உங்களுக்குத்தான் நிஜத்தில் உடம்பு சரியில்லை. நான் சொல்கிறபடி எனக்குக் கட்டுப்பட்டு இருந்தீர்களோ, நான் இந்த வீட்டில் இருக்கிறேன். இல்லாவிட்டால்.. இல்லாவிட்டால்... ''

ராஜப்பா கையில் முகத்தைப் புதைத்துக் கொண்டார். அவர் உடம்பு குலுங்குவது வெளிப்படையாகத் தெரிந்தது.

எரிந்த மண்ணெண்ணெயின் நெடி முழுதும் அடங்கவில்லை.

சங்கடத்துடன் அறைக்குள்ளேயே அடங்கிக் கிடந்தான் பத்மனாபன்.

ராஜப்பா எழுந்து கொண்டார். ''மூர்த்தியின் வழக்கை மறுபடி யாரும் கிளறவும் வேண்டாம், உனக்கும் உலகத்துக்கும் தெரியாமல் இருக்கிற பல விஷயங்கள் வெளிப்படவும் வேண்டாமென்று பார்த்தேன்.''

''எது வேண்டுமானாலும் வெளிபடட்டும். தலை குனிகிற மாதிரி எதுவும் செய்திருக்க மாட்டான் அண்ணா, எனக்குத் தெரியும்!'' என்று ரோஷமாகப் பதில் கொடுத்தாள் மாயா.

''அப்படியே நம்பிக் கொண்டிரு! அப்படியே நம்பிக் கொண்டிரு!'' என்று முனகியபடி வாசலை நோக்கித் தள்ளாடி நடந்தார் ராஜப்பா.

''இருங்கள், நான் பிடித்துக் கொள்கிறேன்,'' என்று பரிவுடன் விரைந்த மாயா, கைத்தாங்கலாகத் தந்தையை மெல்ல அழைத்துச் சென்றாள்.

அவர்களது நடையின் ஓசை, மாடிப்படிகளில் ஏறி மறைந்தது.

பத்மனாபன் தன் அறையிலிருந்து வெளிப்பட்டான். சில நிமிடங்களில் மாயாவும் திரும்பினாள்.

புடவைத் தலைப்பில் சுருண்டிருந்த காகிதங்களை எடுத்துப் பிரித்து மேஜைமீது வைத்தாள் அவள். மூலையில் கருகியிருந்த ஒரு சில காகிதங்களை நோக்குகையில் அவள் கண்களில் நீர் தளும்பியது.

''அப்பா எவ்வளவோ மாறிவிட்டார்!'' என்றாள் குரல் கரகரக்க. ''திடீர் திடீரென்று அவர் சுபாவம் மாறு கிறது. ஒரு சமயம் அவரை நினைத்தாலே பயமாயிருக் கிறது. இன்னொரு சமயம், பச்சைக் குழந்தை மாதிரி அவரிடம் பரிவு காட்டத் தோன்றுகிறது... மூர்த்தி அண்ணா விடுதலையாகி வந்தால்தான் அவர் பழையபடி ஆவார். அதுவரை அவரை நம்பவே நடுக்கமாயிருக் கிறது - எந்தச் சமயத்தில் என்ன பண்ணுவாரோ என்று..''

பத்மனாபனுக்கு எப்படி ஆறுதல் சொல்வதென்றே தெரியவில்லை. ''இப்போது - மறுபடி அவர் வந்தால்?... நான் போய் விடுகிறேன்....''

''இருங்கள், பயமில்லை. இதோ!'' விரிந்த கையில் சாவியைக் காட்டினாள் மாயா. ''அவருடைய அறையைப் பூட்டிக் கொண்டு வந்துவிட்டேன்!''

''மாயா! என்ன இது?'' என்று அவள் மணிக் கட்டைச் சட்டெனப் பற்றினான் பத்மனாபன்.

''ஸ்! ஆ!'' என்று வேதனையுடன் கூவினாள் மாயா.

தீயினால் வெந்திருந்தது மணிக்கட்டின் அருகில்!

''மாயா! இது... இதைக் கவனித்தாயா?''

'' பரவாயில்லை....''

''பரவாயில்லையா!'' பத்மனாபன் உரிமையுடன் கடிந்து கொண்டான். ''முதலில் உள்ளே போய், பஞ்சு, டிஞ்சர் ஏதாவது இருந்தால் எடுத்து வா, சொல்கிறேன்..''

''அதெல்லாம் எதுவும் இருக்காது!''

பத்மனாபன் பொறுமையிழந்தவனாக எழுந்து, அறையை நோட்டம் வட்டான்.

ஒரு சிறிய ஷெல்ப்பில், கண்ணாடி, சீப்பு முதலியன இருந்தன. பக்கத்தில் ஒரு குப்பி.

ஆவலுடன் மூடியைத் திறந்து முகர்ந்து பார்த்தான்.

''தேங்காய் எண்ணெய்தான். கொண்டா இப்படி கையை!''

மாயா நாணத்துடன் தன் பூங்கரத்தை நீட்டினாள்.

இடது உள்ளங்கையில் கொஞ்சம் எண்ணெய் ஊற்றிக் கொண்டு, விரல் நனைத்து ஒவ்வொரு பொட்டாக மாயாவின் மணிக்கட்டில் வைத்தான்.

மாயாவின் கையிலிருந்த சிவப்பு அவள் கன்னத்துக்கும் ஏறிவிட்டது.

''வக்கீலினுடைய நாக்கு இருக்கிறதோ இல்லையோ எனக்குத் தெரியாது, ஒரு டாக்டரின் ஸ்பரிசம் இருக்கிறது உங்களிடம்!'' என்றாள் அவள்.

''மாயா! உன்னைப்போல நோயாளி கிடைப்பது நிச்சயமானால், நான் இப்போதே எம்.பி.பி.எஸ். படிக்கத் தயார்!'' என்றான் பத்மனாபன்.

''இந்த நோயாளி மகா பிடிவாதக்காரி ஆயிற்றே? பரவாயில்லையா? சதா அண்ணனை நினைத்துக் கொண்டு, தன்னிடத்தில் அன்பு கொண்ட இன்னும் எத்தனையோ பேரை அடியோடு மறந்துவிடுகிற சுயநலக்காரப் பெண்ணாயிற்றே?''

பத்மனாபனின் குரல் நெகிழ்ந்தது. ''என்னை உன்னிடம் இழுத்து வந்ததே அந்தப் பிடிவாதம்தான், மாயா!''

''எப்படி?''

சாய்ந்து நிற்கும் தந்த முகத்தை இரு கையிலும் ஏந்திக்கொள்ளப் பத்மனாபனின் ஹ்ருதயம் படபடத்தது.

''உன் அண்ணாவை விடுவிப்பதற்கு உதவி கிடைக்கு மென்றால் எந்த மூன்றாம் தாரக் கிழவனுக்குக்கூட வாழ்க்கைப் படுகிறேனென்று சொன்னாய் அல்லவா அப்பாவிடம்?''

''ஆமாம்....''

''அந்த ஆபத்திலிருந்து உன்னைக் கை கொடுத்துக் காப்பாற்றத்தான் நான் புகுந்தேன்.''

மாயா தலை தாழ்ந்தாள். அவள் கண் முனைகள் பளபளத்தன, மென்மையும் தண்மையும் நிறைந்த எண்ணங்களினால்.

வெளியே விர்ரென்று காற்றின் ஓலம் அதிகரித்தது. படவென்று ஆரம்பித்த மழை, சாட்டையெனச் சுவர் களைச் சாடிற்று.

உணர்ச்சி மிகுதியினால் குரல் நடுங்க மாயா சொன்னாள்: ''அண்ணாவை உயிரோடு பறிகொடுத்து, அவனுக்காகவும் எனக்காகவும் இரக்கம் காட்ட யாருமே இல்லாத வேளையில், நீங்கள் வந்தீர்கள். உங்களைப் பற்றி எனக்குத் தெரியாது. உங்களுக்கு எப்படியோ, எனக்கு. இந்த நிமிடத்தில், இந்த வினாடியில், இந்த உலகத்தில் நீங்கள் ஒருத்தர்தான் இருக் கிறீர்கள்.''

மேஜைமீது கவிழ்ந்ததால் சரிந்த மேலாடையை எடுத்து மாயாவின் முதுகின் மீது தவழவிட்டபோது பத்மனாபனின் விரல்கள் நடுங்கின.

''மாயா... எனக்கும் அப்படித்தான் மாயா!... எனக்கும் நீ ஒருத்திதான் மாயா! ''

சில நிமிடங்கள் கழித்து –

தஸ்தாவேஜுகள் நனைந்து விடாமல் கோட்டின் உள்புறத்தில் அடைத்துக்கொண்டு, கொட்டும் மழையில், நடுநிசி நேரத்தில் தன் வீட்டுக்குத் திரும்பிய பத்மனாபன், பழைய பத்மனாபன் அல்ல; கல்யாணியின் பத்மனாபன் அல்ல.

புதுப் பத்மனாபன்: மாயாவின் பத்மனாபன்.

# 10

**பெ**ங்களூர் சூரியன் பொதுவாகவே நல்லவன் தான். அதிலும் இன்று மல்லேசுவரத்தின்மீது அவன் பார்வை விழுந்தபோது, கண்ணில் அலாதியான குளிர்ச்சி ஏற்பட்டிருந்தது.

கல்யாண வீட்டுக்கு வந்த விருந்தாளிகளை உப சரிப்பதுபோல, மல்லேசுவரம்வாசிகளை மெல்லிய தூறலால் பன்னீர் தெளித்து உற்சாகமூட்டிக் கொண் டிருந்தான்.

அந்த உற்சாகம் கேவலம் மனிதர்களை மட்டு மல்லாமல் குதிரைகளுக்குள்ளேகூடப் புகுந்து கொண் டிருந்ததோ?

இல்லாவிட்டால் ராம்கிஷணின் காருக்குப் பத்து கெஜம் முன்னால் ஓரமாகச் சென்று கொண்டிருந்த ஜட்காக் குதிரை அப்படிச் சடக்கென்று வலது பக்கம் திரும்ப நினைத்திருக்காது.

ராம்கிஷணின் கால்கள் பிரேக்கை அழுத்தின.

தலையை வெளியே நீட்டி, ''பாஜோ! பாஜோ!'' என்றார் சிரித்தவாறு.

ஜட்கா ஓட்டியும் இளித்துக் கொண்டு குதிரையை ஒழுங்குபடுத்தினான். சாலையிலும் இரண்டு மூன்று பேர் அவருடைய தமாஷான இயல்பை ரசித்துச் சிரித்தார்கள்.

''பாஜோ, பாஜோ, '' என்று இன்னொரு முறை குரல் கொடுத்துவிட்டு, பிரேக்கிலிருந்து காலை எடுத்தார் ராம்கிஷண்.

கார் முன்னே தவ்விற்று.

கிட்டத்தட்ட இருபது வருடங்களுக்கு முன்பு, பெங்களூரில் புது மனைவி விசாலாட்சியுடன் குடி யேறிய போது அவர் கற்றுக் கொண்ட முதல கன்னடச் சொல் இந்த 'பாஜோ, பாஜோ.' அதற்குப் பின், எந்தக் கன்னடக்காரரும் நாணித் தலைகுனிகிற அளவுக்கு அவர்களது மொழியைக் கற்று விட்டாராயினும், உல்லாசமோ ஆனந்தமோ மிகுந்த வேளையில் அந்த முதல் மழலைதான் அவர் வாயிலிருந்து புறப்படும்.

ஸீட்டில் தன் பக்கத்தில் வைத்திருந்த பார்சலை இடது கையால் கிட்டத் தள்ளி அணைத்துக் கொண்டார் ராம்கிஷண். அதற்குள்ளிருந்த மைசூர் கிரேப் ஸில்க் புடவை காகிதத்தையும் மீறி அவர் கையில் வழு வழுத்தது.

மெயின் சாலையின் மடியிலிருந்து எழுந்தோடும் குழந்தைச் சாலையில் அவர் கார் நுழைந்தது. காம் பவுண்டுடன் கூடிய சிறு பங்களாக்கள் பலவற்றைத் தாண்டி, கடைசி வீட்டுக்குள் சென்றதும் அதற்கும் குஷி பிறக்கவே, உற்சாகமாய் குழலிசைத்தது.

மாதர் சங்கங்களின் கௌரவ உறுப்பினர் பட்டிய லிலும், சமூக சேவை ஸ்தாபனங்களின் நன்கொடை யாளர் ஜாபிதாவிலும், முதல் சில பெயர்களில் திருமதி விசாலாட்சி ராம்கிஷண் அவர்களின் பெயரும் இருப்பதைக் கண்டு யாரும் ஏமாற வேண்டாம். அப்படியொன்றும் துணிச்சலோ முன்னடைவோ சுறுசுறுப்போ உள்ளவர் அல்ல அந்த அம்மையார். சாட்சி: முதலில் கதவுக்குப் பின்னாலிலிருந்து தலையை மட்டும் நீட்டிப் பார்த்துவிட்டு, கணவருடன் அன்னியர் யாரும் வரவில்லை என்று நிச்சயப்படுத்திக் கொண்ட பின்னரே, அவர் முழு உடம்புடன் வெளியே வந்தது.

உதட்டில் சீட்டியும், கையில் ஸில்க்குமாக இறங்கும் கணவரைக் கண்டதும், நிம்மதியடைந்து, ''விளக்கு வைக்கிற நேரமாகிறது. இன்னும் வரவில்லையே என்று பயந்து கொண்டேயிருந்தேன்,'' என்றாள்.

''உன் கழுத்தில் தாலியைக் கட்டிவிட்டு, என் கையில் விலங்கு மாட்டிக் கொண்டேனே, அந்தத் தினம் இன்று! கடைக்குப் போய்வந்தேன்! இந்தா!'' என்ற ராம்கிஷண், புடவைப் பொட்டலத்தை மனைவியின் கையில் திணித்தார். ''உன் காக்கை நிறத்துக்காகவே ஸ்பெஷலாய் 'டார்க் ப்ளூ' தேர்ந்தெடுத்தேனாக்கும்!''

விசாலாட்சி சற்று அதிகப்படியான சிவப்பு.

''எனக்கு இதெல்லாம் ஒன்றும் வேண்டாம். இருட்டில் என்னைத் தவிக்க விடாமல் நேரத்தோடு வந்தாலே போதும்,'' என்று சிணுங்கினாள் விசாலாட்சி.

''பயம், பயம், பயம், சட்! பாஜோ, பாஜோ!'' என்று அதட்டிக் கொண்டே உடைகளைக் களையலானார் ராம்கிஷண்.

''டிபன் ஏதாவது சாப்பிடுகிறீர்களா, இல்லை, பூஜை கீஜை முடித்துக் கொண்டு சாப்பாட்டுக்கே உட்காருகிறீர்களா?'' என்று வினவினாள் பத்தினி.

''எல்லாம் அப்புறம்!'' அவர் சோபாவில் உட்கார்ந் தார். கிறீச்சென்று அது லேசாக முனகி, எஜமானர் எடையைக் குறைத்துக் கொண்டால் நன்றியுடன் இருப் பேன் என்று வேண்டிக்கொண்டது. ''உட்கார் இப்படி. அழாமல் இருந்தால் சொல்கிறேன்.''

''ஐயையோ! எனக்குப் பயமாக இருக்கிறது! என்ன சொல்லப் போகிறீர்கள்?'' என்று விசாரிக்கும் போதே விசாலாட்சியின் குரலில் திகிலும் கண்ணில் நீரும் உற்பத்தியாகிவிட்டன.

''டெல்லி போகிறேன், நாளை சாயந்தரம். ஒரு வாரமாகும் திரும்ப.''

விசாலாட்சி இடிந்து போனாள்.

''மாட்சிமை தங்கிய மத்திய சர்க்காரின் கட்டளை. டெலிபோன் தொழிற்சாலையின் பெரிய அதிகாரிகள் ஒரு டஜன் பேரில் அடியேனும் ஒருவன். ஆகவே இப்படிப்பட்ட தாக்கீது வந்தால் கட்டுப்பட்டே ஆகவேண்டும். தயவு பண்ணி எதிர் ஆர்டர் எதுவும் போடாதே.''

விசாலாட்சியின் குரல் நடுங்கியது: ''நினைக்கவே நடுக்கமாய் இருக்கிறது... தனியாய் இருக்கச் சொல்கிறீர் களே ஏழு நாளைக்கு? நியாயமா? நீங்களே சொல்லுங்கள்.''

''தூ! நல்ல பயம்! வயசாயிற்று, மூன்று டஜனுக்கு மேலே மூன்றோ நாலோ? பயமாய் இருக்கிறதாம் பயமாய்! 'சமையல்காரன் வேண்டாம், தோட்டக்காரன்

வேண்டாம், டிரைவர் வேண்டாம், கூட்டுகிறவள் வேண்டாம், எல்லாம் நானே பார்த்துக் கொள்வேன், என்று ஜம்பமடித்துக் கொண்டாயே, இப்போது தெரிகிறதா?''

''ஆமாம். அவர்களை எப்படி நம்பி வீட்டிலே சேர்ப்பதாம்? சம்சாரிகளானாலும் ஆளும் படையும் வேண்டும், நமக்கேன்?'' என்றபோது விசாலாட்சிக்கு, தனது பாக்கியம் செய்யாத வயிற்றின் நினைவு வந்தது. ''நடக்க வேண்டியதைச் சொல்லுங்கள் இப்போது,'' என்றாள் கம்மிய குரலில்.

''உன் அம்மாவிடம் போய் இரு.''

''அவள் வியாதிக்காரி, ஒரு இருமல் இருமினால் எனக்குக் குலை நடுங்கும்!''

''வேண்டாம், வீட்டைப் பூட்டிக்கொண்டு என்னோடு புறப்படு!''

''முன்பின் தெரியாத ஊரில் என்னைத் தனியாய் விட்டுவிட்டு எங்கேயாவது போய்விடுவீர்கள்!''

''இங்கே என்ன பயம் என்கிறாய்? வேலைக்குப் போகிற பெண்கள், தென்னிந்தியாவிலேயே பெங்க ளூரில்தான் ஜாஸ்தி என்று புள்ளி விவரம் சொல்லு கிறது.''

''என்ன விவரம் வேண்டுமானாலும் சொல்லட்டும். அந்தண்டைப் பக்கம் வீடே கிடையாது. வெறும் பொட்டல். இந்தண்டைப் பக்கம், அந்த ஊமை மனுஷனை நினைத்தாலே பயமாயிருக்கிறது.''

''ஆனால் அந்தக் குழந்தை? எவ்வளவு அழகாய் இருக்கிறது? எவ்வளவு அருமையாய் ஓடியாடுகிறது!''

''ஆமாம். கூப்பிட்டால்கூட வரமாட்டேன் என்கிறது. நான் ஆசையாய்ப் போட்டிருந்த கீரைப் பாத்தி தினம் நாசமாவதுதான் மிச்சம்.''

''ஒன்றரை வயதானாலும், பெண்ணாயிற்றே? இரண்டு பெண்கள் சிநேகிதமாயிருந்தார்கள் என்பது உலகத்திலேயே இல்லாத அதிசயம்! நல்லதாக வேலி போட்டுவிடுகிறேன் என்றாலும், வேண்டாம், வருகிற குழந்தையைத் தடுக்கக் கூடாது என்கிறாய்!''

''என்ன, எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. அவனைப் பார்த்தும் ஆறு மாதத்திற்கு மேல் ஆகப் போகிறது,'' என்றாள் விசாலாட்சி திடீர் உற்சாகத்துடன்.

''எவனை?''

''அருணைத்தான் சொல்கிறேன். ஒரு வாரத்துக்கு எனக்குத் துணையாக வந்து இருக்கட்டுமே?''

ராம்கிஷண் மோவாயைத் தடவிக் கொண்டார்: ''அவனுக்கு இது ஏதோ பரீட்சை சமயம் இல்லையோ?''

''தம்பியிடம் நம்பிக்கை வைக்க வேண்டியதுதான். ஆனால் இப்படி மூட நம்பிக்கை கூடாது!'' என்று விசாலாட்சி பதிலளித்தாள். ''அருணும் நானும் படித்து, சட்டப் பரீட்சை பாஸ் செய்வதற்குள் வேறு கவர்மெண்ட்கள் வந்து, வேறு சட்டம், வேறு கோர்ட்டு எல்லாம் ஏற்பட்டுவிடும். வரவழையுங்கள். ஒரே வாரம்தானே?''

ராம்கிஷண் டெலிபோனை நெருங்கினார்: ''போனோகிராமில் தந்தி சொல்லி விடுகிறேன். நாளை நான் பிளேன் ஏறுவதற்கு முன்னால் வந்துவிடுவான்.''

''அண்ணி உன்னை உடனே வரச் சொல்கிறாள் என்று சுருக்கமாய்க் கொடுங்கள்.''

**வி**மான நிலையத்துக்கு ராம்கிஷண் புறப்படுகிற நிமிடம் வரை அருணைக் காணோம்.

"வந்தானானால் உன்னையும் அழைத்துக் கொண்டு காரில் ஏரோடிரோமுக்குப் போய்விடலாம் என்று நினைத்தேன். என்ன ஆபீசர் சம்சாரம் நீ, காரோட்டத் தெரியாமல்!'' என்று அவர் சலித்துக் கொண்டார். "சொல்லியிருந்தால் என் பி.ஏ. யாவது வந்திருப்பான்.''

''உங்கள் கவலைதான் உங்களுக்கு!'' என்று குறை கூறினாள் விசாலாட்சி. ''கடைசியில் நான் தனியாய் மாட்டிக் கொண்டு விட்டேனே என்று துளியாவது அனுதாபம் - அதோ யார் பாருங்கள்! அருண்தானே!'' என்று கூவினாள் ஜன்னல் வழியே தெருவைப் பார்த்து.

''ஆமாம்!'' என்று வாசலுக்கு விரைந்த ராம்கிஷண், ''ஏண்டா மடையா, இன்னும் கொஞ்சம் முன்னதாக டிரெயின், எக்ஸ்பிரஸ் பஸ் எதுவும் கிடைக்க வில்லையோ?'' என்று கடிந்துகொண்டே வரவேற்றார் தம்பியை.

''உன் தந்தியை லேட்டாகத்தான் பார்த்தேன் அண்ணா!'' என்று சமாதானம் சொன்னவன், ''அண்ணி அம்மிக்கல்லாட்டம் இருக்கிறாளே! நான் என்னவோ, சொத்தெல்லாம் என் பேருக்கு எழுதிவைத்துவிட்டு, குட்டை போடுவதற்குத்தான் கூப்பிடுகிறாளாக்கும் என்று ஓட்டமாய் ஓடிவந்தேன்! பூ! உடம்பு கிடம்பு எதுவும் இல்லையா!' என்றான் விசாலாட்சியிடம்.

''ஹூக்கும், நீ வராவிட்டால் குட்டை போட்டிருக்க வேண்டியதுதான் நான்! அப்புறம் பேசலாம். அவருடைய ஹோல்டாலையும் ஸூட்கேஸையும் எடுத்துக் காரில் வை. பேசிக் கொண்டே போகலாம்,'' என்றாள் விசாலாட்சி. ''ஏதாவது சாப்பிடுகிறாயா, அருண்? பாவம் ராத்திரி பட்டினியாய் வந்திருப்பாயே?''

இடம் தரவில்லை தமையனார். ''அதெல்லாம் ஏரோடிரோம் போய்ப் பார்த்துக் கொள்ளலாம். புறப்படு!''

அருணுக்கு ஒன்றுமே புரியவில்லை. அண்ணா டெல்லிக்குப் போவதும், ஒரு வாரத்துக்குத் தான் காவல் இருக்க வேண்டியதும், விமான தளத்தை நோக்கிக் கார் பறக்கையில்தான் தெரியவந்தன.

''நோ, நோ! நான் பலமாய் ஆட்சேபிக்கிறேன்! ஒரு சட்டக் கல்லூரி மாணவன், அல்சேஷன் வேலை பார்ப்பதா? நிறுத்தண்ணா காரை!'' என்று விளை யாட்டாகக் கோபித்துக் கொண்டான்.

உண்மையில், ஐந்து அண்ணா-அண்ணிகளுள் ராம்கிஷண்-விசாலாட்சி தம்பதிகள்தான் அவனுக்கு மிகவும் பிடித்தவர்கள். மற்றவர்களுக்கெல்லாம் வதவத வென்று குழந்தைகள் உண்டு. அவர்கள் அருணிடம் அன்பு காட்டுவார்களே தவிர, குழந்தை மாதிரி கொஞ்ச மாட்டார்கள்.

மல்லேசுவரத்துச் சூரியன் தனது இதமான புன்னகையுடன் காலை வணக்கம் சொல்லிக் கொண்டு உள்ளே நுழைந்திருந்தான்.

பலகாரம் அருந்திக் கொண்டிருந்த அருண், ''அண்ணி! நீ என்னைத் துணைக்கு இருப்பதற்காக வரவழைத்தாய். ஆனால் நான் எதற்காக இங்கே வந்தேன் தெரியுமோ?''

''எதற்காக?''

''இந்தத் தோசைக்காக!''

விசாலாட்சியின் முகம் குழந்தைத்தனமாக மலர்ந்தது.

''ஓட்டலில் சாப்பிட்டுச் சாப்பிட்டு நாக்கு செத்துவிட்டது உனக்கு! அதுதான் இதையெல்லாம் புகழ்கிறாய்! ஏன் அருண், பேசாமல் உன் சிநேகிதன் பத்மனாபனோடேயே தங்கி, சாப்பாடு வைத்துக் கொள்ளேன்! அந்தப் பெண் கல்யாணிகூடத் தங்கமான பெண்ணாயிற்றே?''

அருணின் முகம் சட்டெனக் கூம்பியது. ''அதெல்லாம் சரிப்படாது, அண்ணி.''

அவன் குரலில் தொனித்த வருத்தத்தை விசாலாட்சி கவனித்து விட்டாள். ''ஏன் அருண், அவர்களோடு ஏதாவது சண்டையா? என்னமோ போல் பேசுகிறாயே!''

''அதெல்லாம் இல்லை. அவர்கள் குடும்பம் முன்மாதிரி இல்லை.''

''அடப்பாவமே! நிஜமாகவா? என்ன விஷயம்?''

''என்னவோ ஒன்று.''

''என்னதான், சொல்லேன்.''

''ஒன்றுமில்லை. போனவாரம் இதே கிழமை. அவர்கள் வீட்டில் சித்திரான்னம் பண்ணியிருந்தார்கள். மாடியில் நிலாச் சாப்பாடு. போயிருந்தேன். கீழே என்னவோ வேலையாய் இருந்தான் பத்மனாபன். போய் அழைத்து வருகிறேன் என்று போனாள் கல்யாணி. திரும்பி வந்த பிறகு, ஆளே மாறிவிட்டாள். என்னை உபசாரம் செய்யவுமில்லை, சாப்பிட்டாயா என்று கேட்கவுமில்லை. சட்டுப் புட்டென்று பாத்திரங்களை மூடி எடுத்துக் கொண்டு இறங்கிப் போய்விட்டாள்.''

''புருஷன் எதற்காவது கோபித்துக் கொண்டானோ என்னவோ?''

''இல்லையே! நான் இறங்கிப் போய்ப் பார்த்த போது பத்மனாபன் நன்றாய்த் தூங்கிக் கொண்டிருந்தான்.

அதற்கப்புறம் இரண்டு மூன்று முறை அவர்கள் வீட்டுக்குப் போனேன். என்னவோ உயிரில்லாத களையில்லாத வீடாக மாறிவிட்டது!''

"வேறென்ன? கண்தான். இந்தப் பக்கத்து ஜனங்கள் எவ்வளவு சாதுக்களாய், சூதுவாது தெரியாமல் இருக்கிறார்கள்! பட்டணத்தில் அத்தனையும் கொள்ளிக் கண்! அடுத்தவன் நன்றாய் வாழ்ந்தால் பொறுக்க மாட்டார்கள்!''

''சரிதான், நீ மொத்த மதறாசையும் சேர்த்து வசை பாடாதே!'' என்று பேச்சை மாற்றினான் அருண். "தோசைக்குத் தொட்டுக்கொள்ள ஸ்பெஷல் எமலோகத் துவையல் ஒன்று பண்ணுவாயே, கொத்துமல்லியில்? அது கிடையாதா இன்று?''

"இதோ, அரை நொடியில் அரைத்துப் போடுகிறேன், இரு,'' என்று புறப்பட்டாள் விசாலாட்சி. "கொல்லையில் கொத்துமல்லி பறித்து வருகிறேன்!''

பல நிமிடங்கள் ஓடின. விசாலாட்சி திரும்பி வரக் காணோம்.

திகைப்புடன் அருண் எழுந்து போய்ப் பார்த்தபோது, கீரைப் பாத்தியருகே இடுப்பில் கை வைத்துக் கொண்டு பிரமை பிடித்த மாதிரி அண்ணி நின்றிருந்தாள்.

அருண் பார்த்தான். கீரைகள் நசுங்கிச் சிதைந்து கிடந்தன.

''அடப் பாவமே! மாடா?''

"ஆமாம், மாடு!'' என்று தேம்பி விட்டுக் கண்ணைத் துடைத்துக் கொண்டாள் விசாலாட்சி. ''பக்கத்துப் பங்களாவில் ஒரு எமன் வந்திருக்கிறது! அதன் வேலை!''

''அது யார் அப்படிப்பட்ட எமன், அண்ணி?''

வேண்டாமென்று விசாலாட்சி கத்தக் கத்த காதில் வாங்கிக் கொள்ளாமல் தோட்டத்து வழியாகப் பக்கத்து வீட்டுக்குள் நுழைந்துவிட்டான் அருண்.

''எமனைக் குண்டுக்கட்டாய்ப் பிடித்து வந்து விட்டேன் அண்ணி! இந்தா! நீயும் பிடி!''

''அட! யாரிடமும் அது ஒட்டாதே! உன்னிடம் எப்படி வந்தாள்! வாடி லல்லி, என்கிட்டே வா! செல்லமோ இல்லையோ?''

அருண் கபகபவென்று சிரித்தான், அண்ணிக் கூப்பிடக் கூப்பிடத் தன் கழுத்தை இன்னும் இறுக்க மாகக் கட்டிக் கொள்ளும் குழந்தையைக் கண்டு.

''லல்லி! 'நமஸ்தே பாட்டி!' என்று சொல் பார்க்கலாம்!''

குழந்தை களங்கம் இல்லாமல் ''நமஸ்தே பாட்டி!'' என்று கூறிக் கை குவித்தது.

''அடி போக்கிரி! என்னைப் பார்த்தால் பாட்டி மாதிரியா இருக்கிறது! அருண், கொஞ்சம் கொடேன்'' என்று கெஞ்சிய விசாலாட்சி, அவளை வலுக்கட்டாய மாகப் பறித்துக் கொண்டாள்.

லல்லி கூச்சப்பட்டாளே தவிர முரண்டு பிடிக்கவில்லை.

''அந்த ஊமை ரொம்ப நல்ல மனிதர் அண்ணி,'' என்றான் அருண். ''எழுதித்தான் காட்டினார், பாவம். 'குழந்தை அடங்க மாட்டேனென்று ஓடி வந்து, உங்கள் தோட்டத்தைப் பாழடித்து விடுகிறாள், மன்னிக்கச் சொல்லுங்கள்' என்றார்.''

''சே! சே! குழந்தை என்றால் அப்படித்தான் இருக்கும். இவள் இந்த வீட்டையே துவம்சம் பண்ணட்டும். நான் கேட்க மாட்டேன்!''

''இத்தனை நாளாக இருக்கிறாயே பக்கத்து வீட்டில், அவர் பெயர் என்ன தெரியுமா?''

''நாங்கள் இங்கே வந்து ஆறு மாதம் தானே ஆகிறது? அவர் ரொம்ப நாளாக இருக்கிறாராம். அவர் வீட்டு ஆயாதான் எப்போதாவது பேசுவாள் என்னோடு. காசியிலே அவர் சம்சாரம் காலமான பிறகு ஒண்டியாகவே இருந்தாராம். கொஞ்ச நாள் முந்தி, பட்டணம் போனவர், இந்தக் குழந்தையோடு திரும்பி வந்தாராம். கேட்கிறவர்களிடம் தன் பேத்தி என்கிறாராம்.''

''என்னிடமும் அப்படித்தான் சொன்னார்'' என்றான் அருண். ''ராஜரத்தினம் பட்டணத்திலேயே நிரந்தரமாகக் குடி வந்துவிடப் போகிறாராம். அங்கேயே இருக்க வேண்டிய ஒரு வேலை இருக்கிறதாம். சௌகரியமாய் ஒரு பங்களாக் கூடப் பார்த்து வைத்திருக்கிறாராம்.''

விசாலாட்சியின் முகம் கறுத்தது.

''என்ன அண்ணி?''

''குழந்தையிடம் நீ பிரியமாய் இருப்பதெல்லாம் சரிதான். ஆனால் அந்த ஊமை...''

''ஏன், அவருக்கென்ன அண்ணி?''

''இன்னதென்று எதுவுமில்லை. ஊமை என்றாலே அவர்கள் எண்ணம், காரியம், பழக்க வழக்கம் இதெல்லாம் எப்படியோ என்று பயம்தான். மனசுக்குள் நூறு விஷயம் இருக்கும்... நீ ஒதுங்கியே இரு'' என்றாள் விசாலாட்சி.

# 11

**கோ**டு இழுத்த மாதிரி நேராகப் பாய்ந்த புகை, டெலிபோன் மீது மோதிச் சிதறி மடிந்தது.

ராஜரத்தினம் இந்தண்டை அந்தண்டை அசைய வில்லை. டெலிபோன் எப்போது வாய்திறக்கப் போகிறது என்று ஆவலே உருவமாகக் காத்திருந்தார்.

தொலைவில் வாசல் வெராந்தாவில் காலை நீட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்த வேலைக்காரி, பேபியை மடியில் இருத்திக் கொண்டு, காரம் போட்ட வேர்க் கடலையைக் கொறித்துக் கொண்டிருக்கும் காட்சி தெரிந்தது. அதற்கும் அப்பால் தெருவில், மாலை நேரத்தின் பரபரப்பு கொஞ்சம் கொஞ்சமாக அதிகரிப் பதும் புலப்பட்டது.

டெலிபோனுக்கு அருகிலேயே, குண்டூசி போன்ற ஒரு சின்ன மனிதரும் அமர்ந்திருந்தார். அவர் பெயர் மேடப்பா. ராஜரத்தினத்தின் பெங்களூர் பிஸினஸ்களைப் பொதுவாக அவர்தான் கவனிக்கிறவர் என்றாலும், குமாஸ்தா என்றோ அந்தரங்கக் காரியதரிசி என்றோ கணக்குப் பிள்ளை என்றோ அழைக்க முடியாது. ராஜரத்தினத்தின் பொருளாதார ஆலோசகர் என்று வேண்டு மானால் சொல்லலாம். அதனால்தான் அவருக்குச் சமமாக ஆசனம் கொள்ளவும் முடிந்தது.

''ரொக்கம் மொத்தத்தையும் மதறாஸ் கிளைக்கு மாற்றிவிடும்படி பாங்கிக்குச் சொல்லியாகிவிட்டது,'' என்றார் மேடப்பா.

ராஜரத்தினம் திருப்தியுடன் தலையசைத்தார்.

''உங்கள் கைச்செலவுக்கு ஏதாவது வேண்டுமானால் கூட மதறாஸ் பிராஞ்சுக்குத்தான் எழுதிக் கேட்க வேண்டும்.''

ராஜரத்தினம் தனது கறுத்த கோட்டின் உட்புறத்தி லிருந்து கனத்த பர்ஸை எடுத்துக் காட்டிப் புன்னகை செய்தார்.

''எனக்கென்னவோ தாங்கள் பெங்களூருக்கு இப்படி ஒரேயடியாய்க் கும்பிடு போடுவது பிடிக்க வில்லை.''

சூள் கொட்டிவிட்டு மேலே கையைக் காட்டினார் ராஜரத்தினம். 'எல்லாம் அவன் செயல்.'

''மதறாஸில் அப்படி என்ன காரியம் என்றும் சொல்ல மாட்டேன் என்கிறீர்கள். உங்கள் மிஸஸ் போனதிலிருந்து ரொம்பத்தான் மாறிவிட்டீர்கள்.''

அந்தத் திசையில் பேச்சைத் தொடர விரும்பாத ராஜரத்தினம், தடியால் தரையைத் தட்டி, சுழற்றினாற் போலவும் ஒரு முறை காட்டி, ''என்ன ஆயிற்று?'' என்று வினவினார்.

''வீட்டுக்காரரிடம் சொல்லி விட்டேன். ஒரு மாத நோட்டீஸ் கொடுத்திருக்க வேண்டும் என்றான். அதற்கும் இருநூற்றைம்பது ரூபாய் வாடகை தந்து விட்டேன். ரசீதைப் ஃபைலில் வைத்திருக்கிறேன்.''

ராஜரத்தினம் ஃபைலைப் புரட்டிக் கொண்டிருந்த போது டெலிபோன் மணி அடித்தது.

சட்டெனப் பிரம்பினால் ஒரு தட்டுத் தட்டி, ''சீக்கிரம் கேளுங்கள்,'' என்று ஊக்கினார் மேடப்பாவை.

மேடப்பாவும் அதற்காகத்தான் காத்திருந்தாராகை யால் உடனே டெலிபோனை எடுத்து, ''ராஜரத்தினத்தின் வீட்டிலிருந்து பேசுகிறோம். சொல்லுங்கள்,'' என்றார்.

ராஜரத்தினம் அவர் முகபாவத்தையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார். அதில் மலர்ச்சி ஏற்படு வதைக் கண்டபோது அவருக்கும் முகம் மலர்ந்தது.

டெலிபோனில் பேச்சு வேறு திசைக்குத் திரும்பி விட்டது போலும். மேடப்பா திகைப்புடன், ''என்னது!...

எனக்குத் தெரியாதே?... ஓகோ, சரி. செர்ல்லி விடு கிறேன்,'' என்று பேச்சை முடித்துக் கொண்டார்.

பிறகு டெலிபோனை வைத்துவிட்டு, ''உங்கள் மதறாஸ் தரகர்தான் டிரங்க் போட்டுப் பேசினார். நீங்கள் பார்த்து வைத்திருந்த நுங்கம்பாக்கம் பங்களா பேரம் படிந்துவிட்டதாம். இரண்டே கால் லட்சம்'' என்றார்.

''ஹூம்'' என்ற சந்தோஷக் கனைப்புடன் ராஜ ரத்தினம் நிமிர்ந்து அமர்ந்தார்.

''இன்னொரு சமாசாரமும் தெரிவிக்கச் சொன்னார். எனக்கு அது புரியவில்லை.''

ராஜரத்தினத்தின் புருவங்கள் உயர்ந்தன.

''யாரோ மூர்த்தியாமே, ஜெயிலில் இருக்கிறானாமே, அவரைப் பற்றி விசாரித்து வைக்கச் சொல்லியிருந்தீர் களா?''

ராஜரத்தினத்தின் கைப்பிடியின் இறுக்கத்தில் அந்தத் தடி நொறுங்கிவிடும்போல் ஆயிற்று.

மேடப்பா அதைக் கவனிக்காமல், ''அவனுக்காக அப்பீல் செய்ய முயற்சி பண்ணிக் கொண்டிருக்கிறார் களாம். அனேகமாக விடுதலை ஆவதற்குச் சான்ஸ் இருப்பதாகத் தெரிகிறதாம்'' என்றார்.

ஓர் ஊமையின் உறுமல் எத்தனை பயங்கரமாக இருக்கக்கூடும் என்பதை மேடப்பா அப்போதுதான் உணர்ந்தான். சாம்பல் கிண்ணத்தில் சிகரெட்டை வைத்துத் தேய்த்து அழுத்திய வேகத்திலேயே ராஜ ரத்தினத்தின் ஆத்திரம் வெளிப்பட்டது.

மேடப்பாவுக்கு இப்போதுதான் திகில் ஏற்பட்டது. சற்று நேரம் மௌனமாய் இருந்தவர், அந்த நிசப்தத்தைத்

தாங்கமாட்டாதவராக எழுந்து கொண்டார். ''அப்புறம் வருகிறேன். ஊருக்குப் போவதற்கு முன்னால் எப்படியும் பார்க்க வேண்டியிருக்கும் இல்லையா?'' என்று கூறி விடைபெற்றுக் கொண்டார்.

ராஜரத்தினம் அவருக்கு விடை தரவில்லை. வாசல் வரை வந்து வழியனுப்பும் சிரமத்தையும் ஏற்க வில்லை. கைத்தடியைத் தரையில் டொக்டொக்கென்று தட்டிக் கொண்டு, அந்தப் பரந்த ஹாலின் குறுக்கும் நெடுக்குமாக உலாவனார்.

விசிற விசிறப் பறக்கும் நெருப்புப் போல, நடக்க நடக்க அவரது சினம் அதிகரித்ததுபோலும். பேசக் கூடிய சக்தி இருந்திருக்குமானால் வாய்விட்டுத் திட்டி, இரைந்து, கோபத்தைத் தணித்துக் கொண்டிருப்பாரோ என்னவோ? வெறும் பொருளற்ற முனகலாகத் தொண்டையிலிருந்து வந்த ஓசைகளைக் கேட்டு அவருக்கே அருவருப்பு ஏற்பட்டது.

சுவரில் மாட்டியிருந்த புகைப்படத்தினருகே சிறிது நின்றார். உற்றுப் பார்த்தார்.

கான்வென்ட் பள்ளியில் பயிலும் காலத்தில், யூனிபாரத்துடன் அவரது அருமை மகள் காட்சியளித்தாள் அந்தப் படத்தில். தோளில் தொங்கும் புத்தகப் பையையும், கர்னாடகமான தாயார் பின்னலிட்டிருந்த கோணல் மாணலான இரட்டைப் பின்னலையும் பார்த்த போது ராஜரத்தினத்தின் கண்ணில் நீர் கொப்பளித்துக் கொண்டு வந்தது.

ராஜரத்தினம் வெளியே வந்தார்.

வேலைக்காரி எழுந்து கொண்டாள் மரியாதையாக. பேத்தி வந்து அவர் காலைக் கட்டிக் கொண்டாள். முரட்டுத்தனமாக அதை விலக்கி, வேலைக்காரியிடம்

ஒப்படைத்து விட்டுத் தெருவில் இறங்கினார் ராஜ ரத்தினம்.

விடுதலையாகி விடுவானாம் விடுதலையாகி!

கையை எரிச்சலேற்படும் வரை பிசைந்து கொண்டே நடந்தார் அவர்.

தான் செய்த குற்றமே தன்னைச் சுடுவது தெளிவாகப் புலப்பட்டது அவருக்கு.

ஒரு காலத்தில் மகளிடம் கடுமையாக நடந்து கொண்டுவிட்டார். திருமண விஷயத்தில் தன்னை மீறினாள் என்பதற்காக அளவற்ற துவேஷம் பாராட்டி னார். காசியில், மரணப் படுக்கையில் கிடந்த மனைவி எடுத்துக் காட்டிய போதுதான் தன் கொடுமையின் அளவு அவருக்குப் புரிந்தது. அதற்காக, மகளிடம் மன்னிப்புக் கேட்கலாம் என்று ஓடோடி வந்தார்.

அதற்கு இடம் கொடுக்காமலே போய்விட்டாள் அவள். போக வைத்து விட்டான் இந்த மூர்த்தி.

அந்த ஆத்திரம்தான் அணையாமல் புகைந்து கொண் டிருந்தது ராஜரத்தினத்தின் உள்ளத்தில்.

ஹை கிரவுண்ட்ஸைக் கடந்து நடந்தார் ராஜரத்தினம். பளிச்சென்று தெருவிளக்குகள் எரியத் தொடங்கி யிருந்தன. கால்ஃப் மைதானத்தில் விளையாடுவோர் விலக, இருள் தன் போர்வையை உதறிக் கொண்டிருந்தது சயனித்துக் கொள்ள வேண்டி.. மேலே நடந்தார். ரெஸி டென்ஸியின் பிரம்மாண்டமான கேட்கள் அவருக்கு வழி கூறின. ஆகாஷ்வாணி நிலையத்துக்குள்ளிருந்து ஒரு பெரிய கார் வெளிப்பட்டு அவரைத் தாண்டிச் சென்றது. ஸவுத் பரேட் வழக்கம்போலப் பரபரப்புக் காகவேதான் பிறந்திருப்பதைக் காட்டிக் கொண் டிருந்தது. ஒரே ஓர் ஆள், குதிரை மீதேறிச் சவாரி

சென்று கொண்டிருந்தான் டக் டக் டக் டக் என்ற தாள ஓசை கூட வர.

ராஜரத்தினத்தின் கால்கள் தள்ளாடின. எங்கே போகிறோம் என்ற நினைவில்லாமலே நடந்தார்.

பிரிகேட் ரோடு வந்தது.

திடீரெனப் பளீரென்ற விளக்குகளின் ஒளி அவரை நிற்க வைத்தன. டும்டும் என்ற பாண்ட் இசை மெல்ல அவர் செவியில் நுழைந்தது. விஷ்விஷ் என்று பறக்கும் கார்களும், டப் என்ற ஓசையுடன் சாத்திக் கொள்ளும் கதவுகளும் அவர் கவனத்தை ஈர்த்தன.

தான் எந்தப் பகுதியில் வந்து நிற்கிறோம் என்பதை அவர் கண்டுகொண்டார்.

எதிரிலிருந்த கட்டிடம் பெரிய மனிதர்களுக்காகவே ஏற்பட்டது. காம்பவுண்டைத் தாண்டி, கார் நிறுத்தும் இடத்தில், கையில் மிடுக்குடன் பிடித்திருந்த பான வகைகள் தட்டுடன் வெள்ளை யூனிபாரம் அணிந்த பட்லர்கள் உலவினார்கள். காருக்குள்ளேயே அமர்ந் திருந்த சீமான்களுக்கும் சீமாட்டிகளுக்கும் வினியோகம் நடைபெற்றது. அந்தண்டை இருந்த பெரிய கட்டிடத்துக் குள்ளிருந்து தள்ளாடித் தள்ளாடி வெளியே வரும் நபர்கள், காரின் கதவுப் பிடியைத் தடவித் தடுமாறிக் கண்டுபிடித்து, திறந்து ஏறிக் கொண்டு புறப்பட்டார்கள்.

ராஜரத்தினம் சற்று நின்றார்.

பலபல வருடங்களுக்கு முன்பு, பால்ய காலத்தில் அங்கே நுழைந்ததும் உலகத்தை மறந்து உல்லாசத்தில் மிதந்ததும் அவரது நினைவுக்கு வந்தன.

இப்போதிருந்த குழப்பமும் ஆத்திரமுமான நிலைமையில் இது ஒன்றுதான் அருமருந்தாக அவருக்குத் தோன்றியதோ?

உள்ளே நுழைந்தார் சிறிதும் தயங்காமல்.

கெரஸின் ஸ்டவ்வை அக்கக்காகக் கழற்றிச் சுத்தம் செய்து கொண்டிருந்தான் அருண்.

இரவு பத்து மணி சுமார் இருக்கும்.

சமையல் செய்துவிட்ட விசாலாட்சி, சற்றுத் தள்ளி, குந்தினாற்போல் உட்கார்ந்து கவனித்துக் கொண்டிருந்தாள்.

"அண்ணி, நீ ஒரு வடிகட்டின பத்தாம்பசலி!" என்று முகத்தைச் சுளித்தான் அருண். "சமையலெல்லாம் மண்ணெண்ணெய் நாற்றம்! என்ன ஸ்டவ் இதெல்லாம்! ஆபீசர் சம்சாரமாய் லட்சணமாய், ஜம்மென்று ஒரு கியாஸ் ஸ்டவ்வோ, எலெக்டரிக் குக்கரோ வைத்துக் கொள்ளக் கூடாது?"

"ஐயையோ! எனக்கு அதெல்லாம் வேண்டாமப்பா! இந்த ஸ்டவ் புஸ்ஸென்று சத்தம் போட்டாலே எனக்கு உடம்பு நடுங்குகிறது.." பேச்சைப் பாதியில் நிறுத்திய விசாலாட்சி, வாசல் பக்கம் பார்த்து, "யார் தடதட வென்று ஓடிவருவது?" என்று திகிலுடன் எழுந்தாள்.

அலையக் குலைய ஓடிவந்தவள், அடுத்த பங்களா வேலைக்காரிதான்.

"பன்றி ஸ்வாமி, பன்றி ஸ்வாமி! வாங்க! பேகனே பன்றி!" என்று கூவிக்கொண்டே வந்தாள் அவள்.

"நில், நில்! எங்கே வரணும்?" என்று விசாலாட்சி பதற, அருண் ஸ்டவ்வை நகர்த்திவிட்டு அவசரமாக எழுந்து வந்தான்.

வேலைக்காரியின் உடம்பு நடுங்கிக் கொண்டிருந்தது. "ஸ்வாமி! தொட்ட எஜமானரு பாகலு ஹாக்கோண்டி தாரே! பயமாயிருக்குது! எஷ்டு ஹேளிதரேணு தகியோ தில்லா!"

விசாலாட்சியின் பீதி, அதிகரித்து, அதைக் கேட்டதும், "இவர் பரோதில்லா! ஹோகி, ஹோகி!" என்றவள்

"என்ன அண்ணி? என்ன சொல்கிறாள் இவள்?" என்று அருண் வினவியதற்கு, "ஒன்றுமில்லை, இவள் இப்படித் தான் ஏதாவது... நீ உள்ளே போ அருண்" என்றாள்.

"அவள் ஏதோ அவசரமாய்க் கூப்பிடுகிறாள் போலிருக்கிறதே அண்ணி?" என்றான் அருண்.

வேலைக்காரியும் விடவில்லை. "ஆகே ஹேளிபேடி. தாயே! நனகே பாள திகிலு ஆகிதே! தயவு பண்ணு தாயே!" என்று காலைப் பிடித்துக் கொண்டு விட்டாள்.

விசாலாட்சிக்குக் கட்டுக்கடங்காத கோபம் வந்து விட்டது. "நோடோ, ஹேளிதிரே கேளுபேகு! அவர் பரோதில்லா! கண்டிதா பரோதில்லா! ஹோகு ஆசே! "என்றவள், "நீ போகாதே. அந்த ஊமை மனுஷன் என்னவோ கதவைத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு திறக்க மாட்டேன் என்கிறானாம். அவன் பாடு! நீ போகாதே!" என்று மைத்துனனை வழி மறித்தாள்.

அவள் கையை விலக்கினான் அருண். "என்ன அண்ணி நீ! ஒரு பெண் பிள்ளை இப்படிக் கெஞ்சுகிறாள். அந்த மனிதருக்கு என்னவோ ஏதோ..."

"ஈசுவரா!" என்று தலையில் கை வைத்துக் கொண்டு விசாலாட்சி பொத்தென்று உட்கார்ந்தாள்.

மூடியிருந்த கதவைச் சுட்டிக் காட்டிவிட்டு, வேலைக்காரி பயத்துடன் ஒதுங்கி நின்று கொண்டாள்.

வெளியே நின்றிருந்த பேபி கையையும் காலையும் உதைத்துக் கொண்டு ஓவென்று அழுதபடி கதவைத் தட்டிக் கொண்டிருந்தது.

சரேலெனப் பேபியைத் தூக்கி வைத்துக் கொண்டான் அருண். பிறகு குனிந்து சாவித் துவாரத்தின் வழியே உள்ளே நோக்கினான்.

அவன் தேகம் உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரையில் ஒரு முறை சிலிர்த்து அடங்கியது.

கண்ணியத்துக்கும் கம்பீரத்துக்கும் பிறந்தவர் போல் தோற்றம் அளிப்பவரான ராஜரத்தினம், கேவலத்திலும் கேவலமான அலங்கோலத்துடன், மேஜைமீது சாய்ந்து கிடந்தார்.

பாதி செருகிய கண்கள் செக்கச் செவேலென ரத்தக் குழம்பாயிருந்தன. ஒரு கை, மேஜையின் குறுக்காக நீண்டு கிடந்தது. கவிழ்ந்து கிடந்த ஒரு கிளாஸைப் பற்ற முயன்று விரல்கள் மடங்கி மடங்கிப் பிரிந்தன. இடது கை, மதுப் புட்டியொன்றைக் கெட்டியாய்ப் பிடித்திருந்தன. அடியில் மிகக் கொஞ்ச சரக்கே பாக்கி யிருப்பது தெரிந்தது. அவருடைய வாய் விகாரமாய்க் கோணியிருப்பதை, பிரகாசமாக எரிந்து கொண்டிருந்த விளக்கு இன்னும் கோரமாகக் காட்டியது. காலடியில் ஒரு நாற்காலி தலைகீழாய்ச் சரிந்து கிடந்தது.

''ராஜரத்தினம்! கதவைத் திறவுங்கள்! திறவுங்கள் சொல்கிறேன்!'' என்று அருண் இடித்தான் கதவை.

பின்னர் மறுபடி குனிந்து சாவித் துவாரத்தின் மூலமாகப் பார்த்தபோது ஏமாற்றமே ஏற்பட்டது.

ராஜரத்தினத்திடம் எவ்விதச் சலனமும் ஏற்பட் டிருக்கவில்லை.

''ராஜரத்தினம்! சார்!'' என்று அவன் மறுபடி கூவிய போது குழந்தை பேபியின் அழுகையும் அதிகரிக்க, அதுவும் சேர்ந்து தட்டியது கதவை.

சட்டென ஒரு யோசனை உதித்தது அருணுக்கு.

''ராஜரத்தினம்! உங்கள் பேத்தி பேபியின் மீது ஆணை! எழுந்து வந்து கதவைத் திறக்கப் போகிறீர்களா, இல்லை, குழந்தையுடன் நான் போய்விடட்டுமா? அப்புறம்

நீங்கள் தலைகீழாக நின்றாலும் குழந்தை திரும்பி வராது! என்ன சொல்கிறீர்கள்?'' திரும்பத் திரும்ப இதையே கத்தினான் அருண்.

அப்பா! ராஜரத்தினத்தின் தேகத்தில் அசைவு கண்டது. மேஜையையும் நாற்காலியையும் சுவரையும் பிடித்துக் கொண்டு தள்ளாடி நடந்து வந்தார் அவர். வெகுநேரம் தடுமாறியபின் கதவைத் திறந்து விட்டு, அதிலேயே பெரிதும் களைத்துவிட்டவர் போல, தடாலென்று நிலைப்படியின் குறுக்காக விழுந்தார்.

''ஸ்வாமி! ஐயோ ஸ்வாமி!'' என்று கூப்பாடு போடத் தொடங்கிய வேலைக்காரியை, ''சீ! வாயை மூடு!'' என்று அதட்டினான் அருண்.

அவள் சேலைத் தலைப்பால் வாயைப் பொத்திக் கொண்டு நின்றாள்.

''தாத்தா! தாத்தா!'' என்று விசித்த பேபியை மடியில் வைத்துக் கொண்டு, ராஜரத்தினத்தின் தலை மாட்டில் உட்கார்ந்து கொண்டான் அருண். வேலைக்காரியிடம், ''என் வீட்டுக்குப் போய், அம்மாளிடம் சொல்லு. 'ஒன்றும் பயமில்லை. கொஞ்சம் பொறுத்து வருகிறா ராம்' என்று தெரிவித்துவிட்டு, அவளுக்குத் துணையாக அங்கேயே இரு. நான் இவரைக் கவனித்துக் கொள் கிறேன். போ, போ!'' என்றான்.

குழந்தைக்காக கை நீட்டினாள் அவள்.

''வேண்டாம். இது என்னுடனேயே இருக்கட்டும்.''

வேலைக்காரி போய்விட்டாள். மற்ற வேலைக் காரர்களுக்கு ராஜரத்தினம் முதல் நாளே கணக்குத் தீர்த்து அனுப்பிவிட்டதால், பங்களா கும்மென்ற நிசப்தத்தில் மூழ்கலாயிற்று. விசித்து விசித்து அழுது கொண்டிருந்த பேபியும், அவன் மடியிலேயே துயின்று

விட்டது. நடுநடுவே ஒரு கேவல் வெளிப்படும்போது, அதன் தளிர் உடல் எழும்பி அடங்கும்.

கடியாரம் சலிப்பில்லாமல் சளசளத்தது.

அருண் பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருந்தான்.

சலனமற்றுக் கிடந்த ராஜரத்தினம், புரண்டு படுத்தார். திடுப்பென்று அவரிடமிருந்து ஒரு விம்மல் புறப்பட்டது. அதுவே நீண்டு, மெல்லிய, விகாரமான அழுகையாக மாறிற்று.

அந்த நட்ட நடுநிசியில், யாருமில்லா பிரம்மாண்டமான மாளிகையில், அவ்வளவு வயதும் கம்பீரமும் நிறைந்த பெரிய மனிதர் பச்சைக் குழந்தை மாதிரி துயரம் தாங்கமாட்டாமல் அழுத போது, அருணின் இருதயத்தை யாரோ பிடித்துக் கசக்குவது போலிருந்தது.

ஊமையின் கனவு என்று சொல்லி அவன் கேள்விப்பட்டதுண்டு. ஊமையின் துயரம் அதைவிடக் கொடியது போலும். யாரிடமும் அரற்றிக் கொள்ள முடியாமல் இவரிடம் என்ன துன்பம் ஒளிந்திருக்கிறது?

''சார்! ராஜரத்தினம் சார்!'' என்று மெல்ல அவர் தோளில் தட்டினான் அருண்.

ராஜரத்தினம் அரை நினைவுடன், மயக்கம் முற்றும் தீராமலே, கண்ணை விழித்தார்.

அருணின் மடியிலிருந்த பேத்திமீதுதான் அவர் பார்வை முதலில் விழுந்தது. ஒரு கையால் அதன் சுருள் சுருளான கேசத்தை அளைந்து கொண்டே மறுகையால் அருணின் உள்ளங்கையை இறுக்கிப் பிடித்துக் கொண்டார்.

பெரிய பெரிய விம்மல்களினால் அவருடைய சரீரம் குலுங்கிக் குலுங்கி அடங்கிற்று.

''என்ன நீங்கள் குழந்தை மாதிரி! அப்படி ஒரு கஷ்டம் என்ன வந்தது உங்களுக்கு? சொல்லுங்கள். நான் ஒத்தாசை செய்யமாட்டேனா?'' என்று அருண் தேற்றினான்.

''நிச்சயம் செய்வாயா?'' என்று கேட்கும் பாவனையில் கண்ணை உயர்த்தி அவனைப் பார்த்தார் ராஜரத்தினம்.

''கட்டாயம்,'' என்றான் அருண்.

அவர் பலவீனமாகிவிட்ட கையை அசைத்து, தன் கோட்டுப் பையைக் காட்டினார்.

அருண் குறிப்பறிந்து அங்கிருந்து அவருடைய சிறு நோட்டுப் புத்தகத்தையும் பென்ஸிலையும் எடுத்துத் தந்தான்.

கோணல் மாணலான, தடுமாற்றமான எழுத்தில் ராஜரத்தினம் எழுதிக் காட்டினார்.

''நீ என்னுடனேயே பட்டணத்தில் தங்கவேண்டும். எனக்கு உன் துணை கட்டாயம் வேண்டும்.''

அருண் அவர் கையைப் பிடித்துக் கொண்டு, ஆறுதலாகப் புன்னகை செய்தான்.

''அவ்வளவுதானே? இது ஒரு பிரமாதமா? நான் எப்படியும் மதறாஸில் இருப்பவன்தான். நிச்சயமாய் உங்களுடன் வந்துவிடுகிறேன். நீங்கள், நீங்கள் இன்னொரு தரம் அந்த வழிக்குப் போகக் கூடாது!'' மேஜை மீது கிடந்த மதுப் புட்டியைக் காட்டினான் அருண்.

''மாட்டேன், மாட்டேன்,'' என்று பலமாகத் தலையாட்டினார் ராஜரத்தினம்.

# 12

“பாஜோ, பாஜோ!” என்று கையை ஆட்டி விடை கொடுத்தார் ராம்கிஷண்.

கன்டோன்மென்ட் ஸ்டேஷனின் கண்ணைப் பறிக்கும் வெளிச்சத்திலிருந்து வண்டியின் மங்கலான வெளிச்சத்துக்குத் தலையை இழுத்துக் கொண்டார்கள் ராஜரத்தினமும் அருணும்.

"இருட்டி இத்தனை நேரம் ஆகிவிட்டது. விசாலத்துக்கு உதறல் எடுத்திருக்கும்,” என்று ராம்கிஷண் விரைவாக நடந்தார். அந்த வேகத்தினிடையேயும், அருணுக்கும் ராஜரத்தினத்துக்கும் ஏற்பட்டிருந்த நட்பு ஒரு புதிராகவே அவர் உள்ளத்தில் குறுகுறுத்துக் கொண்டிருந்தது. ‘ஒரு வாரம் டெல்லி போய் வருவதற்குள் என்னவெல்லாம் நடந்து விடுகிறது!’ என்று அதிசயித்தவாறு காரில் திரும்பினார் மல்லேசுவரத்துக்கு.

முதல் வகுப்பின் கடினமான மெத்தையில், ஓரமாகச் சுருண்டு முடங்கித் துயிலில் ஆழ்ந்திருந்த லல்லியை மெல்ல நகர்த்திவிட்டு அமர்ந்து கொண்ட அருணுக்கும் இந்தத் திடீர் அனுபவங்கள் வேடிக்கையாய்த்தான் இருந்தன. நினைத்துப் பார்த்திருப்பானா ஒரு வாரம் முந்தி- இப்படி முன்பின் தெரியாத ஓர் ஊமை லட்சாதிபதியுடன் சென்னைக்குத் திரும்புவோம் என்று? ஓர் அடுத்த வீட்டுக் குழந்தைமீது தன் சொந்தத் தங்கை போன்ற பாசம் பிறக்கும் என்று?

மின்சார விசிறி அணைத்து விடக் கூடாதென்று மறுபுறம் திரும்பிக் கொண்டு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டார் ராஜரத்தினம். விளக்கொளியில் டாலடிக்கும் சிகரெட் கேஸை உற்றுப் பார்த்தபடி சிறிது நேரம் மௌனமாய் இருந்தவர், நிமிர்ந்து அருணைக் கூர்ந்து நோக்கினார்.

சற்றுப் பருமனான ஒரு மார்வாரிப் பெண்மணி மட்டும் அவர்களுடைய சக பிரயாணி. அவளும்கூட எப்படியோ தன் சரீரத்தைக் தூக்கிக் கொண்டு ஒரு மேல் பெர்த்தில் ஏறிப் படுத்துக் கொண்டாள். ஹிந்தி பத்திரிகையொன்றைப் பிரித்தவள், பிரித்த சற்று நேரத்துக்கெல்லாம் அதை தனது விஸ்தாரமான மார்பின் மீது போட்டுக் கொண்டு தூங்கியும் விட்டாள்.

"நீங்கள் படுத்துக் கொள்ளுங்கள்?" என்றான் அருண்.

"எனக்குத் தூக்கம் வராது," என்று ஜாடை காட்டினார் ராஜரத்தினம். பிறகு அருணைத் தன் இடத்துக்கு வரச் சொல்லி, தான் அவன் இடத்துக்குச் சென்று அமர்ந்து கொண்டார். லல்லியை மெதுவாய்த் தலையைப் பிடித்துத் தூக்கித் தன் மடிமீது வைத்துக் கொண்டார். குழந்தையின் சுருள் கேசங்களைப் பரிவோடு நீவிக் கொடுத்தபோது, கனவு காண்பதுபோல் அவர் கண்கள் செருகிக் கொண்டன.

அருண் கவனித்துக் கொண்டேயிருந்தான். அவர் ஏதோ சொல்ல நினைக்கிறார் என்பது பார்வையிலேயே தெரிந்தது.

வாழைப் பட்டையை இரண்டாய்க் கிழிக்கும் விரல் போல இருளைப் பிளந்து கொண்டு ரயில் முன்னேறியது. சிலீரென்ற குளிர் காற்று திருடனைத் துரத்தி வந்த போலீஸ்காரன் மாதிரி வேகமாக உள்ளே புகுந்தது.

அருண் ஜன்னல் கதவுகளை ஏற்றிவிட்டு, மௌனமாக ராஜரத்தினத்தை நோக்கினான். பேத்தியை வருடிக் கொடுக்கக் கொடுக்க, அவரது கண்களில் சாந்தம் தேய்ந்து, கடினம் குடியேறுவதைக் காண முடிந்தது. அன்று குடி வெறியில் கிடந்தபோது இந்தக் கண்களில் சோகத்தின் வெறி தெரிந்தது. இப்போது தென்படுவது கோபத்தின் வெறி.

இந்த ஊமை மனிதருக்குள்ளே யார்தான் ஒளிந் திருப்பது?

பரபரப்பாகத் தன் பாக்கெட் நோட்டை எடுத்தார் ராஜரத்தினம். விடுவிடுவென்று அதில் கிறுக்கி, அருணிடம் காட்டினார்.

''லல்லியின் தகப்பன் ஜெயிலில் இருக்கிறான். அவன் அங்கேயே கிடந்து மடிய வேண்டும். அப்போது தான் எனக்கு நெஞ்சு வேகும்.''

தூக்கிவாரிப் போட்டது அருணுக்கு. ஆயினும், அவருடைய கசப்பைத் தன் புன்னகையினால் குறைக்க முயன்றான். நாலைந்து நாள் பழக்கத்தில், தன் சொந்த வாழ்க்கை பற்றி அவர் எதுவும் சொல்லவில்லை. இப்போது மடைதிறந்தாற்போல் வரப் போகிறது விஷயம் என்று மட்டும் அவனால் ஊகிக்க முடிந்தது.

''ஜெயிலிலா! அடப் பாவமே! என்ன செய்தார் அப்படி?'' என்று கேட்டான்.

''ஒரு லட்சம்,'' என்று எழுதிக் காட்டினார் ராஜ ரத்தினம். பிறகு கையால் சுண்டிக் காட்டிவிட்டு, விழுங்குகிற மாதிரி சாடை செய்தார்.

இனம் தெரியாத சங்கடமொன்று அருணின் வயிற்றில் நெருடியது. ஏதோ அந்தரங்கமான இடத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறோம் என்று அவன் உள்ளுணர்வு கூறிற்று.

''அவன்... அவர் பெயர்?''

ராஜரத்தினம் தயங்கவில்லை. எழுதினார்: ''நாய்.''

மீண்டும் ஒரு புன்சிரிப்பால் அந்தச் சினத்தைத் தணித்து, ''சொல்லுங்கள்,'' என்று ஊக்கினான்.

''மூர்த்தி.''

அந்தத் 'தி' எழுத்து முடியுமுன்பே அருணுக்கு ஒரு முறை வியர்த்து அடங்கிவிட்டது.

பல நிமிடங்களும், பல காகிதங்களும் செலவான பின்னர் அவனுக்குப் புரிந்துவிட்டது – ராஜரத்தினத்தின் மருமகனான மூர்த்தியும் மாயாவின் அண்ணனான மூர்த்தியும் ஒருவனே என்பது.

கதை முடிந்தபோது ராஜரத்தினம் ஆத்திரத்துடன் மௌனமானார். அருண் அதிசயத்துடன் மௌனமானான்.

ஸ்டேஷன்கள் வந்து வந்து சென்றன. ஒளியும் இருளும் மாறி மாறி அவர்கள் பெட்டிக்குள் நுழைந்து வேடிக்கை பார்த்துவிட்டு அகன்றன. உடம்பினால் பாதிக்கப்படாத ஆன்மாவைப் போல, பிரயாணிகளின் எண்ணங்களினாலும் சுக துக்கங்களினாலும் பாதிக்கப் படாமல் தன் பாட்டுக்குப் பிரயாணத்தைத் தொடர்ந்தது மதறாஸ் மெயில்.

அருண், மூர்த்தியைப் பற்றி நினைத்துக் கொண் டிருக்கவில்லை. ஒரு பாவமும் அறியாத உத்தமன் என்று அவனைப்பற்றி எண்ணிக் கொண்டிருக்கிறாளே அந்தப் பேதைப் பெண், அவளை நினைக்கும் போது தான் பரிதாபம் ஏற்பட்டது. மாயாவுக்கு எப்படிப்பட்ட அதிர்ச்சியாக இருக்கும், இந்த உண்மைகளை அறியும் போது! அவள் நம்புவாளா? நம்பினாலும் தாங்குவாளா?

மாட்டாள், மாட்டாள். மென்மையான அந்த இதயம் பாறையின் கீழ் அகப்பட்ட பூப்போல நசுங்கிக் கூழ் ஆகும்.

''என்ன யோசிக்கிறாய்?'' என்று கேட்பதுபோலத் தொண்டையைக் கனைத்தார் ராஜரத்தினம்.

''உங்களுக்குத் தெய்வபக்தி இல்லை.''

''ஊம்?''

அருண் எழுந்து சென்று அவர் அருகில் அமர்ந்து கொண்டான்: ''ஆமாம். தெய்வம் என்று ஒன்று இருக் கிறது. அக்கிரமக்காரனுக்குத் தண்டனை தரத் தெய்வ நீதி ஒன்று இருக்கிறது என்பதில் நம்பிக்கையில்லாத தால், நீங்களே மூர்த்தியைத் தண்டிக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள். ஆனால் இப்போது அவன் ஜெயிலில் இருப்பதே தெய்வத் தண்டனைதானே?''

ராஜரத்தினம் பதில் பேசவில்லை. வெறுப்புடன் முகத்தைத் திருப்பிக் கொண்டார்.

அவருடைய முரட்டுக் கையைப் பிடித்துக் கொண்டு நிதானமாகச் சொன்னான் அருண்: ''நீங்கள் அவனைப் பார்த்து வெகு காலமாகிறது. இப்போது அவன் எப்படி யெல்லாம் மாறியிருக்கிறானோ, யார் கண்டது? குறைந்த பட்சம், ஜெயிலிலிருந்த காலத்திலாவது அவன் நல்லவ னாகத் திருந்தியிருக்கலாம்...''

''மாட்டான், மாட்டான்! '' என்பது போல ராஜ ரத்தினம் பலமாகத் தலையசைத்தார்.

''அதை நிச்சயமாகத் தெரிந்து கொண்டு விடுவோமே? பிறகு அவனை என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள்,'' என்ற அருண், குழந்தை லல்லியைத் தடவியபடி சொன் னான்: ''இந்தக் குழந்தையின் எதிர்காலத்துக்காகச் சொல்கிறேன். நடந்தது நடந்துவிட்டது; மறவுங்கள். உங்கள் மாப்பிள்ளை தவறை நினைத்து வருந்துகிறவனாக இருந்தால், அவனை விடுவிப்பதற்கு வழியுண்டா என்று பாருங்கள். விடுதலையாகி வரட்டும். அவனுடன் சந்தோஷமாகக் குடும்பம் நடத்தலாம். என்னைப் போன்ற வழியோடு போகிறவனை நம்புகிறேன் என்கிற போது உங்கள் சொந்த மருமகனை நம்பக் கூடாதா?''

சரி என்று வெளிப்படையாக ஒப்புக் கொள்ள வில்லை ராஜரத்தினம். ஆனால் அவர் எதிர்த்து வாதாடாததிலிருந்தே, தன் பேச்சு அவர் உள்ளத்தை ஓரளவு அசைத்திருக்கிறது என்று அருண் ஊகித்துக் கொண்டான்.

மாயாவைப் பற்றித் தெரிவிக்கலாமா என்று ஒரு கணம் அவனுக்குத் தோன்றியது. அவர் மனம் இன்னும் கொஞ்சம் பக்குவப்பட்ட பிறகு அதை வெளியிடலாம் என்று முடிவு செய்து கொண்டான்.

சிகரெட்டொன்றைப் பற்ற வைத்துக் கொண்டு நீண்ட நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தார் ராஜ ரத்தினம். பின்னர் அருணின் தோளில் கைவைத்து மெல்ல அழுத்திக் கொண்டார்.

தன் யோசனைக்கு அவர் இணங்கி விட்டாரென்று அருண் புரிந்து கொண்டான்.

''கைதிகளைப் பேட்டி காணுவதற்கு மனுப் போட வேண்டும். சென்னை போனதும் ஏற்பாடு செய்கிறேன். லல்லியையும் எடுத்துக் கொண்டு போய்ப் பார்க்கலாம்,'' என்றான் உற்சாகமாக.

தான் நினைத்தபடியெல்லாம் நடந்து, மூர்த்தியும் விடுதலையாகி விட்டால்–

அந்தப் பதினேழு வயதுக்காரியின் முகத்தில் எப்படி குதூகலம் துள்ளும்! அந்த மகிழ்ச்சிக்குக் காரணம் இந்த அருண்தான் என்று அறிகிறபோது அவள் நெஞ்சில் நன்றி மட்டுமா சுரக்கும்?

விளையாட்டுப் பொருள் கிடைத்த குழந்தை 'பப் போலத் தன்னுள் தானே ஆனந்தப் பட்டுக் கொண்டான் அருண்.

சென்னையை மிதித்த நிமிடம் முதல் அவன் ஓய்வென்பதை மறந்தான். மாமூல்படி விண்ணப்பம் செய்து, கைதியைப் பார்ப்பதென்றால் நாளாகும் என்று தெரிந்தது. டெல்லி அண்ணாவுக்கு நண்பரான ஒருவர் இங்கே சிறை அதிகாரியாக இருப்பது தெரியும். அவரைப் பேட்டி கண்டு, விரைவாகவே காரியம் நடக்க ஏற்பாடு செய்து கொண்டான். அங்கிருந்தே ராஜரத்தினத்துக்குப் போன் செய்து, மறுநாள் காலை தயாராயிருக்கும்படி தெரிவித்தான்.

அடுத்த நாள், ராஜரத்தினம் வாங்கியிருந்த நுங்கம்பாக்கம் பங்களாவை முதன் முறையாகப் பார்த்தபோது அருணுக்கு ஏற்பட்ட பிரமிப்பு கொஞ்ச நஞ்சமல்ல. மனிதர் சொத்துப் பத்துள்ளவர் என்று ஊகித்திருந்தானே தவிர, எவ்வளவு வசதி படைத்தவர் என்று அவனுக்கு இப்போதுதான் புலப்பட்டது.

மைதீட்டிய புருவத்தின் வளைவைப் போல அழகுற அமைந்திருந்த தோட்டத்தின் முகப்பில், பளிச்சென நின்றிருந்தது படகு போன்ற பெரிய கார். வெள்ளை யூனிபாரம் அணிந்திருந்த டிரைவர், குழந்தை லல்லியைத் தூக்கி பானெட்டின் மீது உட்கார்த்தி வைத்து விளை யாட்டுக் காட்டிக் கொண்டிருந்தான். முன் வெராந்தாவின் மொஸேக் தரையில், வரிசையாகப் போடப்பட்டிருந்த இரும்பு நாற்காலிகள் ஒன்றில் அமர்ந்து தினசரியைப் புரட்டிக் கொண்டிருந்த ராஜரத்தினம், தோட்டத்தில் அருண் வரும்போதே எழுந்து கொண்டு புறப்படத் தயாராகச் செருப்பை மாட்டிக் கொண்டார். வெள்ளச் சங்கிலி கோத்த பாக்கெட் கடியாரத்தை எடுத்துப் பார்த்துக் கொண்ட பின்னர், ஓரமாகக் கை கட்டி நின்று கொண்டிருந்த வேலைக்காரனுக்குத் தலையசைத்துச் சாடை காட்டிவிட்டு, படியிறங்கி வந்தார்.

லல்லியை இறக்கிவிட்ட டிரைவர் சட்டெனக் காரின் கதவைத் திறந்து விட, ''நீ ஏறிக்கொள்,'' என்று வழிகாட்டினார் அருணுக்கு. பிறகு லல்லியையும் தூக்கி டிரைவருக்குப் பக்கத்தில் உட்கார்த்தி வைத்துவிட்டு, அந்தப் பக்கத்துக் கதவைப் பூட்டிவிட்டார் பந்தோபஸ்துக்காக. அருணுக்கு அருகில் அமர்ந்து கொண்டு அவன் தொடையைப் பிரியமாகத் தட்டினார், "சௌக்கியம் தானே?'' என்று விசாரிக்கும் பாவனையில்.

மூர்த்தி!

பல உள்ளங்களைப் பல்வேறு விதங்களில் ஆட்டி அலைக்கழித்துக் கொண்டிருக்கும் யுவன்!

உள்ளேயிருந்து அவன் வந்து கொண்டிருக்கும் போதே அருண் எடைபோட முயன்றான்; தோற்றான்.

மோசடிக்கும் பாதகங்களுக்கும் துணிந்த, வயிரக் கட்டையான முகத்தை அவன் காணவில்லை. ஒரு பிறவியிலிருந்து இன்னொரு பிறவிக்குப் போகுமுன் நடுவிலே இப்படியும் கொஞ்சம் விளையாடிவிட்டுப் போகலாம் என்று உல்லாசமாகப் பொழுதை ஓட்டு கிறார்களே, அந்த ஒரு சிலரில் ஒருவனாக அவன் காணப்பட்டான். சிவந்த மேனி. அகன்ற நெற்றி. பரந்த மார்பு. 'சிறைக் கூடத்திலேயே இவ்வளவு பொலிவுடன் இருக்கும் சரீரம், வெளியே இருந்தபோது எத்தனை பெண்களைக் காலடியில் விழ வைத்திருக்காது!' என்று எண்ணிக் கொண்டான் அருண். ஆமாம். ராஜரத்தினத்தின் பெண்ணாண சுபத்ரா தலைகுப்புறக் காதலிலே விழுந்தாள் என்றால், அவள் குருடியல்ல.

ராஜரத்தினத்தின் உடம்பு விறைத்துக் கொள்வது அவனுக்குத் தெரிந்தது. குழந்தை லல்லி விளையாட்டை நிறுத்திக் கொண்டு அதிசயமாக நோக்குவதையும் கவனித்தான்.

ஆனால் மூர்த்தி?

மெல்லிய புன்சிரிப்புடனும், யார் தன்னைப் பேட்டி காண வந்திருப்பது என்ற ஆவலுடனும் வந்தவன்–

அவர்களையும் பார்த்துவிட்டு அவர்களுக்கு அப்பாலும் பார்த்தான், தன்னைத் தேடி வந்திருப்பவர் களைத் தேடுவது போல.

ராஜரத்தினத்தின் கண்களில் மானிடத் தன்மையற்ற பளபளப்பு ஏறுவது அருணுக்குத் தெரிந்தது.

சில வினாடிகள் இங்குமங்குமாய்ப் பார்த்த மூர்த்தி, அருணிடமே கேட்டான்: ''யாரோ என்னைப் பார்க்க வந்திருப்பதாய்ச் சொன்னார்களே, யார்?''

அருணால் அதற்குமேல் தாளமுடியவில்லை. ''இவர்களைத் தெரியவில்லை? இவர் உன் மாமனார் ராஜரத்தினம்! இது உன் குழந்தை லல்லி! இவர்களைத் தெரியவில்லை?'' என்று இரைந்தான்.

இனிமை என்றால் அப்போது மூர்த்தி பதிலளித்த விதத்தைத்தான் சொல்ல வேண்டும். அவன் உதட்டில் லேசாய்ப் படர்ந்திருந்த புன்னகை விரிந்து பரவியது. ''என் மாமனாரா! குழந்தையா! மன்னிக்க வேண்டும். நீங்கள் யாரைச் சொல்கிறீர்கள் என்றே புரியவில்லையே?''

ஒரே தள்ளலில் அருணை நகர்த்தி விட்டு முன்னே வந்தார் ராஜரத்தினம். லல்லியை அசுரப் பிடியாக ஒரே கையில் பற்றித் தூக்கி அவன் முகத்தெதிரே நிறுத்தி, ''ஊம்?'' என்று ஊமைக் கர்ஜனையை வெளிப்படுத்தினார்.

மூர்த்தியின் இமையும் அசையவில்லை. லல்லியின் கன்னத்தில் செல்லமாகத் தட்டி, ''சமர்த்துப் பாப்பா! நீ யாருடைய குழந்தை என்று தெரியாமல் தவிக்கிறார்கள் பாவம்!'' என்றான்.

தொப்பென்று லல்லியைக் கீழே இறக்கிய ராஜ ரத்தினம், அவனுடைய சட்டையை முரட்டுப் பிடியாகப் பிடித்து ஓர் உலுக்கு உலுக்கி, மதயானையின் பிளிறலைப் போல் விகாரமான ஓசைகளை வெளிப்படுத்தினார்.

அருண் இருவரையும் விலக்குமுன்பு அக்கம் பக்கத்தில் வந்திருந்த இதர ஜனங்கள் சூழ்ந்து கொள்ள, ஒரு போலீஸ்காரர் குறுக்கே புகுந்து, ''என்ன இது அமளி? ஜெயில் என்பது மறந்து விட்டதா? நகருங்கள்!'' என்று அதட்டல் போட்டார்.

''மூர்த்தி! நடந்ததை மறந்து நிதானமாக யோசனை பண்ணி, நிதானமாகப் பேசு!'' என்று அருண் மன்றாடி யதை அவன் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை.

''கான்ஸ்டபிள்! இவர்கள் வேறு யாரையோ தேடி வந்திருக்கிறார்கள். சரியான ஆளை விசாரித்து, பார்ப்ப தற்கு ஏற்பாடு பண்ணுங்கள்!'' என்று கூறிவிட்டு, தன் கசங்கிய சட்டையை உதறிவிட்டுக் கொண்டு திரும் பினான்.

இரண்டு நிமிடத்தில் அவன் உருவம் மறைந்து விட்டது.

''யாரை ஸார் பார்க்க வந்தீர்கள்? சரியாய் விவரம் சொல்லவில்லையா?'' என்று போலீஸ்காரர் கேட்டார்.

மரமாக நின்று விட்டாலும் ராஜரத்தினத்தின் உடம்பு படபடத்து ஆடியது. இரண்டாம் முறையாக ஊமை யானவர் போல அவர் தொண்டை வறண்டது.

''வாருங்கள் போகலாம்,'' என்ற அருண் அவர் கைகளைப் பிடித்துக் கொண்டான். ''லல்லி! லல்லி எங்கே?''

அப்போதுதான் உணர்வு வந்தவராக ராஜரத்தினம் திரும்பினார். சுற்றி நின்ற கூட்டத்தைப் பரபரவென்று விலக்கி, குழந்தையைத் தேடலானார்.

''அந்தப் பாப்பாவா? அது பாவம், அழுதுகிட்டே வாசல் பக்கம் போச்சுதே?'' என்று ஒரு கிழவி தெரிவித்தாள்.

''லல்லி! லல்லி!'' என்று கூப்பிட்டவாறு வாசலுக்கு விரைந்தான் அருண். ராஜரத்தினமும் அவன் பின்னால் ஓடினார்.

''குழந்தையா? ஒரு பொண்ணு தூக்கி வைச்சிட்டிருக்குது பாருங்க, அந்தா, மோட்டாருக்குப் பக்கமாய்,'' என்றான் வெளியே வேர்க்கடலை விற்றுக் கொண்டிருந்த ஒரு கிழவன்.

அவர்களுடைய காருக்கருகில்தான் நின்று கொண்டிருந்தாள் லல்லி. ஆனால் அவளுடன் கொஞ்சிக் கொண்டிருந்தவள்–

''மாயா!'' என்று வியப்பும் மகிழ்ச்சியும் கலந்த குரலில் கூப்பிட்டுக் கொண்டே நடையை எட்டிப் போட்டான் அருண்.

''அட! நீங்களா! நான் எதிர்பார்க்கவேயில்லை!'' என்றாள் மாயா. பூப்போட்ட வெள்ளை வாயில் புடவைதான் அணிந்திருந்தாள் என்றாலும், சலவை மடிப்புக்கள் அவள் உடம்பின் வாளிப்பை எடுத்துக் காட்டின. சட்டெனத் திரும்பியதால், பின்னல் முன்னால் வந்து அவளது மார்பின் குறுக்காக மிதந்தது.

''இவள் உங்கள் குழந்தையா?'' என்றவாறு லல்லியைத் தூக்கி அவனிடம் நீட்டினாள் மாயா.

லல்லியை வாங்கிக் கொண்ட அருண், ''இவள்–'' என்று சொல்ல வாயெடுத்தான். பின்னால் வந்து நின்ற ராஜரத்தினத்தின் வலிய கரம் தன் தோளை அழுத்தி எச்சரிப்பது தெரிந்தது. பேச்சை மாற்றிச் சிரிப்புடன், ''சரிதான்! நீங்கள் கூடத்தான் எடுத்து வைத்துக் கொண்டிருந்தீர்கள். அதற்காக உங்கள் குழந்தை

என்று சொல்லி விடலாமா! தெரிந்தவர்கள் குழந்தை.. இங்கே ஒருவரைப் பார்க்க வந்தோம்,'' என்றான்.

''நான் மூர்த்தி அண்ணாவைப் பார்க்க வந்தேன். நேரமாகிவிட்டதென்று சொல்லிவிட்டார்கள்,'' என்றாள் மாயா.

'மூர்த்தி' என்ற சொல் காதில் விழுந்ததுமே ராஜ ரத்தினத்தின் கரம் சடக்கென்று ஒரு முறை துடித்து அடங்குவதை அருண் உணர்ந்தான். மாயாமீது அவர் ஆத்திரமான பார்வையை வீசுவதையும் அறிந்தான்.

மாயா எதையும் கவனிக்கவில்லை. உற்சாகம் ததும்பும் குரலில்– ''உங்கள் சினேகிதர் பத்மனாபன்தான் மூர்த்தி அண்ணாவுக்காக ரொம்பச் சிரமம் எடுத்துக் கொண்டிருக்கிறார். சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்ய அனுமதி கேட்டிருக்கிறார். அது சம்பந்தமாகப் பெரிய லாயர்களைக் கன்ஸல்ட் செய்யப் போகிறாராம்.. ''

நிமிடத்துக்கு நிமிடம் ராஜரத்தினத்தின் ஆங்காரம் பொங்கி வெடிப்பதைக் கவனித்தான் அருண். இன்னும் ஒரு நிமிடம் தாமதித்தாலும் அங்கே ஒரு கொலை விழக்கூடும் என்று பீதி ஏற்பட்டுவிட்டது.

''ரொம்ப சந்தோஷம். இன்னொரு நாள் சாவகாச மாய் வந்து பேசுகிறேன்,'' என்று அவசர அவசரமாக சொல்லிவிட்டு, ராஜரத்தினத்தையும் லல்லியையும் பிடித்துத் தள்ளாத குறையாகக் காருக்குள் ஏற்றி, ''ஓட்டு!'' என்று கட்டளையிட்டான் டிரைவருக்கு.

விரைகின்ற காருக்குள் சில்லென்று பிரவேசித்த குளிர்ந்த காற்று, அந்த இரண்டு உள்ளங்களைச் சாந்தப் படுத்தவில்லை.

''பத்மனாபனின் மாறுதலும், கல்யாணியின் சோகமும் இப்போதல்லவா புரிகிறது!'' என்று எண்ணிக் கொண்டான் அருண். ராஜரத்தினம் தனது பாக்கெட் நோட்டை எடுப்பதைக் கண்டான்.

காரினால் ஏற்பட்ட அசைவோ, பதற்றமோ—மண்டை மண்டையான எழுத்தில் ராஜரத்தினம் எழுதினார்:

''அவனைத் தெய்வம் கேட்காது. நான்தான் கேட்க வேண்டும்.''

கடைசி எழுத்தை எழுதிய போது படக்கென்று பென்ஸிலின் கூர் ஒடிந்தது. தாளைக் கிழித்தபோது அடுத்த பக்கத்தில் எழுத்துக்கள் ஆழப் பள்ளம் பறித்திருந்தன. அத்தனை ஆத்திரமா!

# 13

அருண் அவசரமாய்ப் புறப்பட்டுக் கொண்டிருந்தான்.

சட்! அவசர சமயத்தில் காணாமற்போகும் ஒரு பொருள் உண்டென்றால் அது சீப்புதான்!

டக் டக் என்று கதவு தட்டப்பட்டது.

சுட்டு விரல் முட்டியினால் அப்படி எப்போதும் தட்டுவது சிதம்பரம்தான். இன்னும் தட்டட்டும் என்று பேசாதிருந்தான் அருண். தூங்குகிறான் என்று நினைத்துக் கொண்டு திரும்பிப் போய்விட்டாலும் சரிதான்.

அந்தி வானம்போல் கணத்துக்குக் கணம் மாறும் ராஜரத்தினத்தின் சுபாவத்தைக் கண்டபிறகு, எப்போதும் அவருடனேயே இருப்பதுதான் அவருக்கும் பந்தோபஸ்து, குழந்தைக்கும் பாதுகாப்பு என்று அவன் தீர்மானித்து விட்டான். ஆனால் பல வருடங்களாக இருந்துவரும் இந்தத் தண்டையார்பேட்டை ஜாகையை எப்படிக் கலைப்பது? எல்லோரும் அவனுக்குத் தெரிந்தவர்கள். சண்டை சண்டையாய்ப் பிடிப்பார்கள்.

அதனால்தான் அருண் சிதம்பரத்தைச் சந்திக்க விரும்பவில்லை.

டொக் டொக் என்று சிதம்பரம் தட்டியதோடு, ''அருண்! அருண்! தூங்குகிறாயா?'' என்று குரலும் கொடுத்தார்.

தாளை விலக்குமுன் முகத்தில் ஒரு போலி இனிமையை வரவழைத்துக் கொண்டான்.

''என்ன அருண், அவ்வளவு தூரம் சொல்லியிருந்தும் அன்றைக்குச் சாப்பாட்டுக்கு இருக்காமல்தானே போய் விட்டாய்? எங்கே மடக்கப் போகிறேனோ என்று பங்களூர் எங்கே, ஊட்டி எங்கே என்று ஓடி ஒளிகிறாயா?'' பேசிக் கொண்டே சிதம்பரம் உள்ளே நுழைந்து கட்டிலில் சப்பணமிட்டு உட்கார்ந்து கொண்டார்.

''ஒரு அவசர வேலை நினைவு வந்துவிட்டது. உடனே போய்விட்டேன்... வேறு தப்பாக நினைக்கா தீர்கள்,'' என்றான் அருண். ஆனால் அதைக் கேட்பதற் காக மெனக்கெட்டுக் கதவைத் தட்டிக் கொண்டு வந்திருப்பார் என்று அவன் நம்பத் தயாராயில்லை.

''போகட்டும், இன்னும் ஒரு விசேஷம் வரவிருக் கிறது. அதற்காவது சாப்பிட வந்துவிடு,'' என்றார் சிதம்பரம்.

''அடடே! என்ன சார்?''

''எல்லாம் உன் தயவு இருந்தால்தான் நடக்கும். அதற்காகத்தான் வந்தேன்,'' என்று மர்மமாக புன்னகை செய்தார் சிதம்பரம். ''கல்கத்தாவில் இருக்கிறாளே என் தங்கை சரோஜி. தலைச்சன் பிரசவத்துக்கு இங்கே வருகிறாள். ஆஸ்பத்திரி, நர்ஸிங் ஹோம் எதிலேயும் சேர்க்க எனக்கு உத்தேசமில்லை. இங்கே வீட்டிலேயே வைத்துக் கொள்ளலாமென்று எண்ணம்...''

''ஓ! நல்ல ஐடியா...''

''சும்மா சொன்னால் போதாது. உன் ஒத்தாசையும் வேண்டும்.''

''என் ஒத்தாசையா?''

''ஆமாம். என் போர்ஷன்தான் உனக்குத் தெரியுமே. ஸ்பேர் ரூம் எதுவும் கிடையாது. இருப்பதும் தரை ஈரம்; மழை பெய்தால் ஒழுகல். அதனாலே ஒரு மாசத்துக்கு இந்த அறையைக் காலி பண்ணிக் கொடுத்தாயானால்... வேறே எங்கேயும் போகச் சொல்லவில்லை. உள்ளே எங்களுடனேயே வந்து இரு...''

அருண் உள்ளுக்குள் சிரித்துக்கொண்டான். என்ன வேடிக்கையான சந்தர்ப்பங்கள் எல்லாம் நிகழ்கின்றன!

''என்ன யோசிக்கிறாய்? கட்டாயம் செய். நம் வீட்டில் நீ படிக்க, எழுத என்ன வசதி முடியுமோ அவ்வளவும் செய்து தருகிறேன்,'' என்றார் சிதம்பரம், அவன் மௌனத்தை வேறு விதமாகப் புரிந்து கொண்டு.

''நோ, நோ! உங்களுக்கேன் சிரமம்? என் சினேகிதர் ஒருத்தர் என்னை ரொம்ப வற்புறுத்திக் கூப்பிட்டுக் கொண்டேயிருக்கிறார், தன்னோடு வந்து இருக்க வேண்டுமென்று. உங்களுக்குத் தேவையான வரையில் தாராளமாய் இந்த அறையை வைத்துக் கொள்ளுங்கள்,'' என்றான் அருண்.

''அருண் தங்கமான பிள்ளை, கட்டாயம் ஒப்புக் கொள்வான் என்று அம்மா நேற்றே சொன்னாள்...'' என்று சிதம்பரம் முகஸ்துதியை வாரியிறைத்துக் கொண்டிருக்கையில் அருண் கிளம்பி விட்டான். ராஜரத்தினத்தோடு தங்கும் பிரசினை இவ்வளவு எளிதாகத் தீருமென்று அவன் நினைக்கவேயில்லை!

திருவல்லிக்கேணி பஸ்ஸில் சென்று கொண்டிருந்த போது அவன் உள்ளத்தில் ஒரே ஒரு கேள்விதான் சுழலில் அகப்பட்ட துரும்புப் போலத் திரும்பத் திரும்ப வட்டமிட்டது.

''கல்யாணியிடம் எப்படிப் பத்மனாபனின் விஷயத்தை உடைத்துக் கேட்பது?''

மாயாவின் பழக்கத்தினால் நிச்சயமாகப் பத்மனாபன் ஏதோ மாறித்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால், அவளது அண்ணனின் வழக்கை எடுத்துக் கொள்ளப் போவ தில்லை என்று அவன் மறுப்பானேன், மறைப்பானேன்?

பத்மனாபனைப் பற்றி அவனால் எந்த முடிவுக்கும் வரமுடியவில்லை.

கல்யாணியைப்போல அழகும் அன்பும் அறிவும் உள்ள மனைவியை மறந்து, நேற்று முளைத்த ஒரு சிறுமியிடம் மனத்தைப் பறிகொடுத்திருப்பானா என்ன? இருக்காது, இருக்காது... ஆனால்..

கல்யாணியின் சோகத்துக்குக் காரணம்?

தலையை இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு பஸ்ஸின் ஜன்னலில் குனிந்து சாய்ந்து கொண்டான் அருண்.

காதலில் தனக்குப் போட்டியாகத் தன் உயிர்த் தோழன் முளைத்திருப்பானோ என்ற அச்சம் கூட அவனை அதிகம் உறுத்தவில்லை. இனிய நீரில் மிதந்து செல்லும் மலர்ப் படகான கல்யாணியின் குடும்பம் எந்தச் சூறாவளியினாலும் கவிழ்ந்து விடக் கூடாதே என்றுதான் கவலைப்பட்டான் அவன்.

''என்ன சார், இறங்கவில்லையா?'' என்ற கண்டக்டரின் குரல் அவனை எழுப்பிவிட்டது. தலை நிமிர்ந்து நோக்கினான்.

பஸ் காலியாகிவிட்டது.டெர்மினஸ்.

வீட்டை விட்டுப் புறப்பட்டபோது இருந்த அவசரம் இப்போது விடை பெற்றுக் கொண்டிருந்தது. பள்ளிக்குச் செல்லும் குழந்தை போல, பத்மனாபனின் வீட்டை நெருங்க

நெருங்கத் தயக்கம் மேலிட்டது. அந்த இடம் இன்னும் தள்ளி இருக்கக்கூடாதா என்று உள்ளம் ஏங்கியது.

கல்யாணியின் வீடும் அவன் வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருக்கவில்லை.

அடைத்திருந்தன கதவுகள்; வாசலில் குப்பை தேங்கிக் கிடந்தது. வெளிச்சத்தைக் காட்டிலும் இருளின் ஆதிக்கமே நிறையத் தென்பட்டது.

''கல்யாணி!'' என்று கூப்பிட்டபடி நடையைக் கடந் தான் அருண்.

யாருமில்லையா என்ன?

''கல்யாணி.''

''ஊம்.. நீங்களா? வாருங்கள். இங்கே படுத்திருக் கிறேன்.''

''கல்யாணி! என்ன இது?'' சமையலறைக்குப் பக்கத்தி லிருந்த இருட்டறையை அடைந்ததுமே தன்னை மறந்து உரக்கக் கூவி விட்டான் அருண்.

வெறும் தரையில், ஒரு தலையணை மட்டும் தலைக்கு வைத்துக் கொண்டு படுத்திருந்தாள் அவள். மாதக் கணக்கில் சீக்காகக் கிடக்கும் நோயாளியைப் போல எலும்பும் தோலுமாக இல்லாவிட்டாலும், கண் களில் சோர்வும் கன்னங்களில் மெலிவும் காணப்பட்டன. குரல், வழக்கமான உற்சாகத்தையும் இனிமையையும் இழந்திருந்தது.

''கல்யாணி! என்ன உனக்கு? எத்தனை நாளாய்ப் படுத்திருக்கிறாய்? அவன் எங்கே, பத்மனாபன்? ''

''உஸ்! உஸ்!'' என்று சிரித்தவாறு அதட்டிக் கொண்டே அவள் எழுந்து உட்கார்ந்து கொண்டது அருணுக்கு ஆறுதலளித்தது. நல்ல வேளை, கல்யாணி! எதை இழந்தாலும் உன் ஆன்மாவை இழக்கவில்லை

நீ! லட்சம் துயரங்களை ஒரு சிரிப்பினால் போக்கிக் கொள்ள முடியும் என்று இன்னமும் நம்புகிறாய். அது போதும்.

''வக்கீலுக்குப் படித்திருப்பவர் என் கணவர், நானில்லை! தயவு பண்ணி ஒவ்வொரு கேள்வியாகக் கேளுங்கள்,'' என்றாள் கல்யாணி. ''என்ன உடம்பு என்கிறீர்களா? வயிற்றில் என்னவோ வலி, இரண்டு மூன்று நாளாய். ஆரோக்கியமாயிருந்த காலத்தில் அளவில்லாமல் உள்ளே தள்ளியதற்குக் கைமேல் – இல்லை, வயிற்று மேல் – பலன்! அப்புறம்? இரண்டாவது கேள்வி?''

அருணுக்குத் தொண்டை கம்மியது. ''காலையி லிருந்து பட்டினி கிடக்கிறாயா?''

''ஆமாம்! நாலு வீட்டுக்குப் போய் யாசகம் கேட்க லாமா என்று நினைத்திருந்தேன். நல்ல பாத்திரமாய்க் கிடைக்காததால் பேசாமல் இருக்கிறேன்!'' என்று சோகைச் சிரிப்பு சிரித்தாள் கல்யாணி. ''கவலையே படாதீர்கள்! அவர் கோர்ட்டுக்குப் போகுமுன்னால் பிளாஸ்க் நிறையக் காபி போட்டு வைத்துவிட்டுத்தான் போனார்.''

''இன்னும் இருக்கிறதா?''

''ஸாரி! தீர்ந்துவிட்டது. சில்லறை வேண்டுமானால் தருகிறேன். ஓட்டலில் வாங்கிச் சாப்பிட்டுவிட்டு எனக்கு ஒரு தாங்க்ஸ் அனுப்பிவிடுங்கள்.''

''விளையாட்டை விடு. நான் காபி போடுகிறேன்,'' என்று எழுந்து சமையலறையில் புகுந்தான் அருண்.

''வேண்டாம், வேண்டாம்,'' என்று கல்யாணி தடுத்த போதிலும், ஏதோ ஒரு பலவீனம் அவளை எழுந்திருக்க வொட்டாமல் அமுக்கியது போலும்.

சமையலறை நிலைப்படியின் மீது சாய்ந்தாற்போல் உட்கார்ந்துகொண்டு விட்டாள்.

முன்னொரு நாள், ஆனால் ஆனந்தமான சூழ் நிலையில், தான் அட்டகாசம் செய்ததெல்லாம் அருணின் நினைவில் எழுந்து, இதயத்தைப் பிசைந்தெடுத்தது. பாழும் கடவுளே! உல்லாசத்தைத் தவிர வேறு ஒன்றும் கண்டிராத இந்தச் சுவர்களுக்கு நடுவே ஏன் இருளையும் உளைச்சலையும் அடைத்துத் திணிக்கிறாய்?

''எது காபிப் பொடி?''

ஒவ்வொரு டப்பாவாகப் படக்படக்கென்று திறந்து மூட மூட, அருணின் திகைப்பு அதிகரித்துக் கொண்டே போயிற்று.

''கல்யாணி! இது என்ன, ஒரு அஸிஸ்டென்ட் பிராசிக்யூட்டரின் வீடா? இல்லை, குசேலரின் கிருகமா?''

''ஏன்?''

''சமையலறையைச் சுத்தமாய்த் துடைத்து வைத் திருக்கிறாயே? ஒரு நாள்கூட இப்படி நான் பார்த்ததே கிடையாது.''

''தபால்தலை, கையெழுத்து இதெல்லாம் சேர்க்கிற மாதிரி நான் காலி டப்பா சேர்க்க ஆரம்பித்திருக்கிறேன்!'

''கல்யாணி!''

''கோபிக்காதீர்கள். விளையாட்டுக்குச் சொன்னேன். மாதாந்தரமாக வாங்கிப் போடுகிற சாமான்களை இன்னும் வாங்கவில்லை.''

''பதினெட்டாம் தேதி வரையிலுமா?''

''என்ன பண்ண? அவருக்கும் வழியில்லை, எனக்கும் உடம்பு நேராயில்லை.''

கடைசியாக எடுத்த டப்பாவை ஆத்திரத்துடன் டொக்கென்று வைத்துவிட்டு, கல்யாணியின் முன்னால்

வந்து மண்டியிட்டாற் போல் உட்கார்ந்து கொண்டான் அருண். அவள் முகத்தைப் பிடித்து உலுக்கு உலுக்கென்று உலுக்கி, சுரணை வரும்படி செய்தால் தேவலை என்று அவன் கைகள் படபடத்தன.

''கல்யாணி! உனக்கு ஒன்றும் தெரியவில்லை.''

கல்யாணியின் முகத்தில் கொஞ்சம் கூடச் சலனம் ஏற்படவில்லை. அமைதியாக, வார்த்தைகளை அளந்து உபயோகித்துப் பதில் சொன்னாள்:

''எனக்கு எல்லாம் தெரியும். உங்களுக்குத் தெரிந் திருப்பதைக் காட்டிலும் அதிகமாகவே தெரியும்.''

வெளிப்படையாக வார்த்தைகளைக் கொட்டிக் கொள்ள வேண்டிய அவசியம் அங்கே ஏற்படவில்லை. ஒருவர் மனத்திலிருப்பது மற்றவர் மனத்துக்குத் தன்னாலேயே புரிந்தது.

''எல்லாம் தெரிந்துகொண்டுதான் பேசாமல் இருக்கிறேன் என்கிறாயா?'' அருண் ஆத்திரத்துடன் சீறினான்.

''வேறென்ன செய்யச் சொல்கிறீர்கள்?''

''பெண்ணாக இரு என்கிறேன். வேறொன்றும் சொல்லவில்லை. படித்த பட்டணத்துப் பெண்ணா நீ? பட்டிக்காட்டுக் கட்டுப்பெட்டிபோல ஏன் உள்ளுக்குள் புழுங்கிப் பொருமுகிறாய்?''

''படித்த பட்டணத்துப் பெண்ணாக இருப்பதால் தான் நாகரிகத்தின் வரம்பை மீறாமல் இருக்கிறேன். பட்டிக்காட்டுப்பெட்டி போல அழுது புலம்பாமல், கத்தி ரகளை செய்யாமல் இருக்கிறேன்.''

''அப்புறம் அவன் திருந்த வழி?''

''அவர் படித்தவர். தானாகச் சிந்தனை செய்து முடிவு செய்யக்கூடியவர். சரியென்று தோன்றுகிற

காரியத்தை அவர் செய்யட்டும். தப்பென்று தோன்றுகிற போது திருத்திக்கொள்ளட்டும்.''

''கல்யாணி! நீ பிடிவாதக்காரி.''

''பகுத்தறிவு உள்ளவள் என்பதைத்தானே அப்படி மாற்றிச் சொல்கிறீர்கள்?''

விருட்டென்று எழுந்து கொண்டான் அருண். பரிதாபத்தைக் காட்டிலும் கோபமும், கோபத்தைக் காட்டிலும் ரோஷமும், ரோஷத்தைக் காட்டிலும் குழப்பமுமாக மாறி மாறி அதிகரித்து அவன் மனத்தை ஆட்டுவித்தன.

''கல்யாணி! இனிமேல் உன்னை ஆண்டவன்தான் காப்பாற்ற வேண்டும், போ!''

படீரென்று வாசற் கதவைச் சாத்திக் கொண்டு தெருவில் இறங்கினான் அருண். தலை கிறுகிறுவென்று சுழல, கண்கள் செருகிக்கொண்டன. அப்பட்டமாகத் தப்பு என்று தெரிந்த ஒன்றைத் திருத்த முடியாத, திருத்தத் தெரியாத, இக்கட்டான நிலைமை அவன் தேகத்தைப் பதறச் செய்தது. அன்புக்குரிய கல்யாணி - அவளுடைய அழகிய குடும்பம் - கண்முன்னே நொறுங்கிச் சிதறுகிறது. வெற்று வெளி என்றெண்ணித் திரும்பத் திரும்பக் கண்ணாடிச் சுவர் மீது மோதிக் கொண்டு விழும் ஈயைப் போல, வழியில்லாத இருட்டுச் சந்தில் அவன் துழாவித் தடுமாறினான்.

எந்தப் பக்கம் திரும்புகிறோம், எந்தத் திசையில் செல்கிறோம் என்ற நினைவேயில்லாமல் அவன் நடந்து கொண்டிருந்தான்.

''எங்கே, உங்கள் சினேகிதரின் ஆபீசைக்கூடத் தாண்டிக் கொண்டு போகிறீர்களே?''

பிசிறில்லாத கச்சிதக் குரல்! அது அந்த ஒருத்திக்குத் தான்–

நிமிர்ந்து பார்த்தான்.

மாயா. பி.எல். படித்தவர்களுடைய கண்ணைக் கூடத் திரையிட்டு மறைக்கும் விதியென்னும் மாயை. பதினேழு வயது மாயை.

ஆனால் எத்தனை கோபம் உதித்த போதிலும் அந்த மாயைக்கு அருணும் கட்டுப்பட்டுத்தான் ஆக வேண்டியிருந்தது. நின்றான்.

''என் சினேகிதரின் ஆபீசா? யாரை...''

பூம் என்ற அலறலுடன் பாய்ந்து வந்த காரொன்று அவனை ஒதுங்க வைத்தபோது, தான் நிற்குமிடம் மவுண்ட்ரோடின் கடைசி என்பதைக் கண்டுகொண்டான் அருண்.

மாயா கழுத்தைச் சாய்த்து அவனைக் கூர்ந்து நோக்கினாள்: ''உங்கள் சினேகிதர் அட்வகேட் பத்மனாப்னின் ஆபீசைத்தான் சொல்கிறேன்! இதோ, போர்டு பாருங்கள். சந்தேகமாயிருந்தால்!''

மாடிப்படியொன்று அவனது வலதுகைப் பக்கம் தென்பட்டது. அதன் முகப்பில் ''பத்மனாபன் பி.ஏ., பி.எல்.'' என்ற புத்தம் புதுப் பலகை கண்ணில் பட்டது.

தீப்பொறி பறந்தது அருணின் விழிகளில்.

ஆக, இது ஒரு புது மோசடி! இத்தனை நாள் வரையில் இந்த இடம் பத்மனாபன் வைத்திருந்தது கிடையாது. புதிதாய்ப் பிடித்திருக்கிறான். எதற்காக? மாயாவுக்காக. அவள் தன் வீடு தேடி வந்து, தன்னைப் பற்றிய குட்டெல்லாம் தெரிந்துகொண்டு விடாமல் தடுப்பதற்காக!

''மாயா!''என்று உரக்கப் பேசினான் அருண், இடத்தையும் நேரத்தையும் மறந்து. ''பத்மனாபன் என் நண்பன்தான். ஆனால் உனக்கு நண்பனாக இருக்க முடியாது. ஏன் தெரியுமா?''

மாயாவின் விழிகளில் மிரட்சி படர்ந்தது. ''ஏன்... என்ன சொல்கிறீர்கள்?''

''அவன் பப்ளிக் பிராசிக்யூட்டருக்கு உதவியாளனாக இருந்தவன்! உன் அண்ணன் மூர்த்தியின் வழக்கை, அரசாங்கச் சார்பில் ஏற்று நடத்தியவன்! மூன்று வருடம் சிறையிலே உழலச் சென்றிருக்கிறானே உன் அண்ணன், அங்கே அவனை அனுப்பியவன் இதே பத்மனாபன்தான்! போதுமா?''

''பொய்! பொய்! நம்பமாட்டேன்!'' என்று காதுகளை இரு கையாலும் பொத்திக் கொண்டாள் மாயா. அவள் விழிகள் நீரைப் பெருக்கின.

''இல்லை மாயா! நிஜம்தான். அருண் சொல்வது அத்தனையும் நிஜம். நம்பு!''

யார்?

பிரமித்துப் போனவனாக நிமிர்ந்து நோக்கினான் அருண்.

மாடியிலிருந்து இறங்கி வந்து கொண்டிருந்தான் பத்மனாபன்.

மாயாவின் பதற்றத்தையும் அருணின் திகைப்பையும் பொருட்படுத்தாமல் அவன் நிதானமாகச் சொன்னான்:

''ஆமாம் மாயா! உன் அண்ணனை ஜெயிலுக்கு அனுப்பிய அஸிஸ்டெண்ட் பிராசிக்யூட்டர்தான் நான்! ஆனால் அருணுக்குத் தெரியாத இன்னொன்றையும் சொல்லிவிடுகிறேன், கேள். செய்த தவறுக்காக வருந்தி, பிராயச்சித்தம் செய்யத் துடித்து, அந்த உத்தியோகத்தைக்

கால் கடுதாசி கிழித்துத் தூக்கி எறிந்துவிட்டு வந்திருப் பவனும் இதே பத்மனாபன்தான்!''

## 14

**வி**னாடி நேரத்துக்கு, பூமி சுழல்வதை நிறுத்திக் கொண்டது. காற்று, அசைவதை நிறுத்திக் கொண்டது. உயிர் நிறைந்து, ஓசை நிறைந்து காணப்பட்ட தெரு, செத்து மௌனமாயிற்று.

அருண் ஸ்தம்பித்து நின்றான்.

பத்மனாபன் வேலையை ராஜினாமா செய்து விட்டானா? எத்தனையோ இளம் வக்கீல்கள் ஏங்கித் தவித்து எதிர்பார்க்கும் பதவியை உதறித் தள்ளிவிட் டானா! நிதானத்துக்கும் உறுதிக்கும் பெயர் பெற்ற நண்பனா இப்படி உணர்ச்சி வசப்பட்ட செயலில் இறங்கினான்?

எது அவனை இந்த அசட்டுத் துணிச்சலில் இறங்க வைத்தது? அன்புக்கு ஒருத்தியான கல்யாணியையும், அழகுக்கு ஒன்றான குடும்பத்தையும் மறந்து துறந்து அலையும்படி அவனை இயக்குகின்ற சக்தி என்ன?

அந்தச் சக்தி, நண்பர்கள் இருவருக்கும் குறுக்கே நின்று கொண்டிருந்தது, கண்ணைக்கூடக் கொட்டாமல். அந்தச் சக்தியின் முகத்திலே குழப்பமும் கோபமும் கலந்து கூத்தாடின. அந்தச் சக்தி வெளியேற்றும் மூச்சில் ஆங்காரமும் அழுகையும் இணைந்து வெளிப்பட்டன.

ஆனால் வாய் திறந்து ஒரு வார்த்தை பேசவில்லை.

வாயைத் திறந்தால் அழுகை வெடித்துக்கொண்டு வந்துவிடும் என்று மாயா பயந்தாளோ?

பத்மனாபன் கேட்டான்: "நாம் மேலே போகலாமா, மாயா? உனக்காகத்தான் காத்திருந்தேன்."

நிதானம் தவறாத அவன் பேச்சு, மாயாவை நிலை குலைய வைத்தது. ஆனால் கண்ணிமைக்கும் நேரத்துக்குக்கூட அவள் அதைக் காட்டிக் கொள்ளவில்லை. "இ... இவர் சொன்னது.... நிஜம்தானா?" என்று அருணைச் சுட்டிக் காட்டிக் கேட்டாள்.

"அதுவும் நிஜம். அதற்கு நான் சொன்ன பதிலும் நிஜம். உன் அண்ணனைச் சிறைக்கனுப்பியவன் நான் என்பதும் உண்மை. அதற்காக, உதவி பிராசிக்யூட்டர் வேலையை விட்டு விட்டேன் என்பதும் உண்மை."

இரண்டாவதைப் பற்றி மாயா கவலைப்பட்டதாகத் தெரியவில்லை.

"டாக்ஸி!"

மூன்று பேராகக் கூடி நிற்பதைக் கவனித்து மெல்ல வந்து கொண்டிருந்த பேபி டாக்ஸி அருகில் வந்து நிற்க, சட்டென ஏறிக் கதவைச் சாத்திக் கொண்ட மாயா, "சேத்துப்பட்டு," என்று டிரைவருக்குக் கட்டளையிட்டாள்.

வண்டி புறப்படவும், அவள் கண்டத்திலிருந்து கேவலொன்று வெளிப்படவும் சரியாயிருந்தது. தாண்டிச் சென்ற டாக்ஸியின் பின்புறத்துக் கண்ணாடி, உள்ளேயிருக்கும் மாயா கைக்குட்டையைப் பிரித்து முகத்தை மூடிக்கொள்வதைத் தெள்ளெனக் காட்டியது.

டாக்ஸி நகர்ந்ததோ இல்லையோ, பூமியும் காற்றும் தெருவும் ஓசைகளும் பத்து மடங்கு வேகத்துடன் இயங்கத் தொடங்கினாற்போல அருணுக்குக் கிறுகிறுப்பு ஏற்பட்டது. தான் கொட்டிய வார்த்தைகளெல்லாம் கைப்பிடியில் அகப்படக்கூடிய ஜடப் பொருள்களாக

இருந்து, அவ்வளவையும் திரும்பப் பொறுக்கிச் சேர்த்து, யாருக்கும் தெரியாமல் ஒளித்துப் புதைத்துவிட முடியாதா என்று ஏங்கினான் அவன். இவ்வளவும் ஒரு பயங்கரக் கனவாக இருக்குமோ ஒரு வேளை? கண்ணை மூடி மூடித் திறந்தான். அத்தனையும் நனவுதான், வேம்பெனக் கசக்கும் உண்மை நிகழ்ச்சிகள்தான் என்பது அவனை வாட்டியெடுத்தது.

பத்மனாபன் மாடிப்படியில் ஏற ஓரடி எடுத்து வைத்தவன், திரும்பி நோக்கினான்: ''நீ வந்த காரியம் முடிந்து விட்டது என்று நினைக்கிறேன். இனிமேல் போவாய் அல்லவா?''

மின்னல் நேரம்.

இரண்டு நண்பர்களின் பார்வையும் சந்தித்தன. வலுமிகுந்த மின்சாரத்தின் இரண்டு பிரிவுகளும் மோதிக் கொண்ட அந்த இடத்தில், நடுவில் அகப்பட்டுக் கொண்டவையெல்லாம் எரிந்து பஸ்மமாகின.

இனி என்றென்றைக்கும் தங்கள் உறவு வேறு விதமானது தான், இனி ஒரு போதும் அது பழையபடி இருக்க முடியாது என்பதை உணர்ந்து கொண்டான் அருண்.

தடதடவென்று படியேறிப் போய்விட்டான் பத்மனாபன். மேலேயிருந்த அவனது அலுவலக அறையின் கதவு படீலென்று சாத்திக் கொள்ளும் சப்தம் கேட்டது.

ரத்தத்தை மட்டும் உறிஞ்சுமாமே ஒரு காட்டேரி, அது அடித்திருந்தால்கூட அருண் அப்படிச் சீவனற்றுப் போயிருக்கமாட்டான். வீதியில் நாலு பேர் பார்க்கிறார்கள் என்பதுகூட நினைவில்லாமல், மாடிப்படியிலேயே உட்கார்ந்து கொண்டான்.

தலையைக் கையில் பிடித்துக் கொண்டிருந்தவன், யாரோ மேலேயிருந்து இறங்கி வந்து தன்னைத் தாண்டிக் கொண்டு செல்வதை உணர்ந்து நிமிர்ந்து பார்த்தான்.

பத்மனாபன்தான்.

இடிந்துபோய் உட்கார்ந்திருக்கும் நண்பனை ஏறெடுத்துப் பார்க்க அரை நிமிடமும் செலவழிப்பதற்கு விருப்பமில்லாமல் விடுவிடுவென்று சென்று கொண் டிருந்தான்.

அருண் எழுந்தான்.

எங்கே செல்வது என்ற நோக்கமில்லாமல் அவன் கால்கள் நடந்தன. மாலுமி உடையணிந்த ஒரு வெள்ளைக் காரன் டாக்ஸிக்காரனோடு தகராறு செய்து கொண் டிருப்பதைக் கண்டபோதுதான், தன்னை அறியாமலேயே துறைமுகப் பகுதி வரையில் வந்துவிட்டது தெரிந்தது.

மனம் வெறுத்துச் சலித்திருந்த நிலையில், அந்த வெள்ளைக்காரனின் தள்ளாடிய தோற்றம் பலவகைச் சபலங்களை எழுப்பியது. பெங்களூரில் ராஜரத்தினம் துயரங்களை மறைப்பதற்காகக் கையாண்ட வழி அருணுக்கு ஆசை காட்டியது. அந்த அளவுக்குப் புத்தி உந்த, ராயபுரம் வரை நடந்து, பாதி உடைந்திருந்த சிமெட்டிப் பெஞ்சியொன்றில் உட்கார்ந்து கொண்டான்.

அவனுக்காகவே காத்திருந்த மாதிரி இரண்டு பிச்சைக்காரிகள் திடீரென்று முளைத்தார்கள் அவ னெதிரில்.

''சாமி! வவுத்து வலி சாமி! குழந்தை துடிக்குது,'' என்று வயதானவள், இளையவளைக் காட்டினாள். இளையவள் அதற்கேற்றாற்போல் வயிற்றைப் பிடித்துக் கொண்டு அருமையாகப் 'பாவம்' காட்டினாள்.

கல்யாணியின் நினைவு முளைத்தது அந்த வினாடியே.

சுரீலென்று யாரோ சாட்டையால் அடித்தமாதிரி இருந்தது அவனுக்கு. சில்லறையைக் கொடுத்தபின் வெகுவேகமாக நடக்கலானான்.

சாலையின் இருபுறத்தையும் துருவித் துருவி ஆராய்ந்தன அவன் கண்கள். டெலிபோன் கூண்டு அல்லது டெலிபோன் கடை வைத்திருக்கும் கடையை அவன் தேடினான்.

*கல்யாணி! அவள் புரிந்து கொள்வாள் தன்னை!*

அருண் வேகமாக நடந்தான், அதிகரித்த ஆவலுடன்.

உலக மொத்தமும் எதிர்த்தாலும், கல்யாணி, நீ ஒருத்தி இருக்கிறாய் எனக்குக் கை கொடுக்க. ஊர் முழுதும் என்னைத் தூற்றினாலும் நீ ஒருத்தி வருவாய் எனக்காகப் பரிந்து கொண்டு.

டெலிபோன் கூண்டு ஒன்று கண்ணில் பட்டது. பதற்றத்துடன் ஓடினான். ஏமாற்றம். உள்ளே ஒருவர் பேசிக் கொண்டிருந்தார்.

கதவின் குமிழைப் பிடித்தவாறு பதைபதைப்புடன் காத்திருந்தான். அவன்மீது ஆத்திரம் ஆத்திரமாய் வந்தது. இத்தனை நேரம்தான் டெலிபோனில் பேச வேண்டும் என்று சட்டம் இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!

அப்பாடா! அவர் ஒரு வழியாக வெளியேறினார். படபடப்பினால் இரண்டு மூன்று முறை எண்கள் தப்பாக வர, கடைசியில் அருண் முயற்சியில் வெற்றி பெற்றான்.

''ஓ! அருண் ஸாரா? வணக்கம் ஸார்!'' என்று கல்யாணி கேட்டபோது அதில் புயலின் சீற்றத்தைக் காணவில்லை அருண். அவளுடைய வழக்கமான வேடிக்கை என்று நினைத்துக் கொண்டான்.

''என்ன, சமையல் நடக்கிறதா? போனில் சாம்பார் வாசனை ஜமாய்க்கிறதே!'' என்றான்.

''ஆடீாம்,'' என்றாள் கல்யாணி இயல்பாக. ''விஷம் தயாரித்துக் கொண்டிருக்கிறேன் - எனக்காக.''

''கல்யாணி!'' அதிர்ச்சி அருணைக் குலுக்கி எடுத்தது.

''எதற்காக விஷம் என்கிறீர்களா? நமக்கு நன்மை செய்பவர்கள் என்று எண்ணி இருக்கிறவர்களெல்லாம், எவ்வளவு அழகாக நம் காலடியில் குழி தோண்டிக் கொண்டிருக்கிறார்கள் என்று தெரிந்த பிறகு, விஷத்தைச் சாப்பிடாமல் பாதாம் அல்வாவா சாப்பிட முடியும்?''

''கல்யாணி, அவன் - பத்மனாபன் - என்னென்னவோ தப்பாய்ச் சொல்லியிருக்கிறான் உன்னிடம்!''

''இல்லை, இல்லை! அந்த விஷயத்தில் உங்களைக் காட்டிலும் அவர் நேர்மையானவர். சரியாய்த்தான் சொன்னார்,'' என்று முகத்தில் அடித்தாற்போல் பதிலளித் தாள் கல்யாணி. ''அவருக்கும் அவருடைய கட்சிக்காரர் களுக்கும் நடுவில் ஆயிரம் இருக்கும். அது அவருடைய தொழில். அதைக் குலைப்பதற்கும், கெடுப்பதற்கும் உங்களுக்கு யார் உரிமை கொடுத்தது? நிச்சயமாய் நான் கொடுக்கவில்லை.''

''தயவு பண்ணி நான் சொல்வதைக் கேள், கல்யாணி. நான் செய்தது தப்பு என்றால்...''

''என்றால் என்ன, என்றால்? தப்புதான்! எப்படிச் செய்வீர்களோ எனக்குத் தெரியாது. அந்த மாயாவைப் பார்த்து, அவள் அண்ணனின் வழக்கை இவரே ஏற்று நடத்துகிற மாதிரி செய்ய வேண்டியது உங்கள் பொறுப்பு!''

''முட்டாள்தனமாகப் பேசாதே, அவன் செய்த காரியம் தெரியுமா உனக்கு?''

''வேலையை விட்டுவிட்ட விஷயம்தானே? அவரே சொல்லிவிட்டார்.''

''அதில் உனக்கு விசேஷ அர்த்தம் ஒன்றும் தோன்ற வில்லை?''

''ஏன் தோன்றாமல்? மாயாவின் கேஸில் அத்தனை அக்கறையாக இருக்கிறார் என்று அர்த்தம்!''

''கல்யாணி! வேண்டுமென்றே திரித்து அர்த்தம் சொல்கிறாய்!''

மறுமொழி கூறவில்லை அவள். டெலிபோன் டக்கென்று வைக்கப்படும் ஒலி மட்டுமே கேட்டது.

அகண்ட பாழ் இருப்பதை அறியாமல் ஓடித் தடா லென்று விழுந்த குதிரை போல, நம்பிக்கையுடன் கல்யாணியை நெருங்கிய அருணுக்கு, இந்த ஏமாற்றம் தாங்க இயலாததாக ஆயிற்று.

**கு**றுக்கு வழியாக நடந்திருந்தால் தண்டையார் பேட்டை ஜாகை இரண்டு பர்லாங்குகள் இருந்திருக்கும். ஆனால் சுற்று வழியாகச் சென்றதில் இரண்டு மணி நேரம் ஒழிந்தது என்ற ஆறுதல் கிட்டியது அருணுக்கு.

கதவைத் திறந்து கொண்டிருந்தபோது, தலையைச் சொறிந்துகொண்டே பின்கட்டுக்காரர் சிதம்பரம் உள்ளேயிருந்து வந்தார்.

''சொன்னேனே, அருண், என் தங்கை சமாசாரம்? வேடிக்கை பார், அவள் அடுத்த வாரமே வருகிறாளாம்,'' என்று பேச ஆரம்பித்தவர், பேயடித்தமாதிரி இருந்த அருணின் முகத்தைக் கண்டதும் பயந்து பின்வாங்கி, ''அப்புறமாய் வருகிறேன்,'' என்று நழுவத் தொடங்கினார்.

அருண், கதவைத் திறந்துவிட்டு நடையில் இறங்கி, தெருவைப் பார்த்தான்.

விளக்கேற்றிய சமயம். இயற்கை ஒளியும், செயற்கையொளியும் தெருவை ஆக்கிரமிக்கப் போட்டி போட்டுக் கொண்டிருந்தன.

அருணுக்குத் தெரிந்த சைக்கிள் ரிக்ஷாக்காரன் ஒருவன், ''சவாரியா சாமி?'' என்று இளித்தான்.

''ஆமாம், வா என் பின்னால்,'' என்ற அருண் வேகமாக அறைக்குள்ளே சென்று, அலமாரியிலிருந்த புத்தகங்களைக் கிடுகிடுவென்று கீழே தள்ளினான். மேஜைமீதும் ஜன்னல்களிலும் இருந்த விரிப்புக்களை இழுத்துக் களைந்து சுருட்டி மூட்டை கட்டினான். பேனாக்கள், கடிகாரம், சிலவற்றைத் தன் சட்டைப் பைகளில் நிரப்பிக் கொண்டான். ''புத்தகங்களையெல்லாம் ரிக்ஷாவில் ஏற்றப்பா!'' என்றான்.

வெளியே நின்றிருந்த சிதம்பரத்தைத் திகில் பிடித்துக் கொண்டது.

''அருண்! நான் என்னப்பா தப்பாய்ச் சொல்லி விட்டேன்?'' என்று குழறினார். அவரது குரலிலிருந்த பதற்றம் உள்ளேயிருந்து பெண்மணிகளையும் வர வழைத்தது.

ஆனால் யாருக்கும் விளக்கம் சொல்லிக்கொண்டு உட்கார்ந்திருக்கக்கூடிய பொறுமை அருணுக்கு இருக்க வில்லை.

''எல்லாவற்றையும் கொண்டு போய் இந்த விலாசத்தில போடு. நான் பின்னாலேயே வருவதாகச் சொல்லு'' என்றான். ஒரு துண்டுக் காகிதம் எடுத்து, ராஜரத்தினத்தின் நுங்கம் பாக்கம் விலாசத்தை எழுதிக் கொடுத்தான். முன்பணமாக ஐந்து ரூபாய் கூலியும் தந்தான்.

சைக்கிள் ரிக்ஷா புறப்பட்ட கையோடேயே அவனும் கிளம்பிவிட்டான். சிலையாக நின்றிருந்த

குடித்தனக்காரர்களில் ஒரு பாட்டியம்மாள்தான் துணிச்சலாக முன்வந்து, ''என்னவோ அப்பா, நாலிலே எட்டிலே இந்தப் பக்கம் ஒரு நடை வந்துட்டுப் போ'' என்றாள். தலை ஆட்டிவிட்டு அருண் தெருவில் இறங்கினான். ஐந்து வருடமாகப் பழக்கமாகிவிட்ட புழுதித் தெருவையும் பழம் வீட்டை யும் துறந்து செல்வது ஒரு குமட்டலான வேதனையை அளித்தன.

டாக்ஸி பிடித்துக் கொண்டு முன்னதாகப் போகலாமென்றோ, வேறொரு சைக்கிள் ரிக்ஷாவில் ஏறிப் பின்னால் தொடரலாம் என்றோ அருணுக்குத் தோன்றவில்லை. நடையாகவே புறப்பட்டான்.

பத்மனாபன் கொடுத்த இடியும், மாயா கொடுத்த அடியும், கல்யாணி வெடித்த வெடியும் அவன் உள்ளத்தில் ஏற்படுத்தியிருந்த குழப்பத்தை, எத்தனை மைல் நடையினாலும் அகற்ற முடியாதெனத் தோன்றியது.

ராஜரத்தினத்தின் பங்களா கேட்டில், இருபுறமும் நின்றிருந்த விளக்குக் குண்டுகள் மங்கலாக எரிந்து கொண்டிருந்தன. ஏழெட்டுக் கொசுக்கள் சுற்றி வந்ததைத் தவிர வேறு நடமாட்டம் தென்படவில்லை.

''எஜமான் படுத்துவிட்டாரா?'' என்று காவல்காரனை விசாரித்தபோது அருணின் பார்வை மாடியறையின் வெளிச்சத்தை நோக்கியது.

''இப்பத்தாங்க படுத்தாரு, தூங்கிட்டாரோ என்னவோ பாவம், இன்னேரம் வலி வலின்னுதான் முனங்கிட்டேயிருந்தாராம்,'' என்றான் வாசல் காப்போன்.

அருண் திகைத்தான். ''வலி.... வலியா? என்ன வலி?''

''உங்களுக்குச் சமாச்சாரமே தெரியாதுங்களா? ஐயா கீழே விழுந்து. கை எலும்பு முறிஞ்சு போயி, டாக்டர் வந்து பார்த்து...''

''என்னப்பா உளறுகிறாய்?'' என்று அருண் உள்ளே விரைய, கேட்டைப் பூட்டிவிட்டுப் பின்தொடர்ந்த வேலைக்காரன் சொல்லிக்கொண்டே வந்தான்: ''லல்லி யோடே விளையாடிட்டிருந்தாங்க. என்னவோ ஒரு பலூன் இருக்கங்களே – ஆ! ஹைட்ரஜன் பலூன் – அது விட்டா மேலே போய் ஒட்டிக்குமில்லே? அது வாங்கிக் கொடுத்திருந்தாரு. லல்லி பேபி அதை விட்டிட்டுது. அங்கணத்திலே போய் அது ஒட்டிக் கிட்டதும், குழந்தை அது வேணுமின்னு கத்திச்சாம். ஐயா மேஜை, நாற்காலி, ஸ்டூல் எல்லாம் ஒண்ணு மேலே ஒண்ணாய்ப் போட்டு ஏறி..''

கிணுகிணுவென்று அழைப்பு மணி கூவியது.

தான் வந்ததைப் பார்த்துவிட்டார் என்று புரிந்து கொண்டான் அருண். உள்ளே நுழைந்தான்.

படுக்கையில் படுத்திருந்த ராஜரத்தினத்தைப் பார்க்கவே பரிதாபமாயிருந்தது. வலது கையில் பிரம்மாண்டமான கட்டு. இடது கையினால் படுக்கையைத் தட்டிக் காட்டினார், அருகில் வந்து அமரும்படி.

அருண் உரிமையோடு, ''நீங்கள் இப்படியெல்லாம் அஜாக்கிரதையாக இருக்கலாமா?'' என்று கடிந்து கொண்டான்.

''அந்தப் பேச்சை விடு. வேறொரு முக்கியமான விஷயம்,'' என்று ஜாடை காட்டினார் ராஜரத்தினம்.

அருண் தலையசைத்தான்.

ராஜரத்தினம் தவித்தார், எதையோ சொல்ல. வெகு அருகிலேயே பென்சிலும் நோட்டும் இருந்தும் அவற்றை உபயோகிக்கும் சக்தியை இழந்து, வாயைத் திறந்து மூடி அவர் பட்ட பாட்டைக் கண்டபோது அருண் தனக்குள் உறுதி சொல்லிக் கொண்டான்: ''இவ்வளவு பெரிய பட்டணத்தில், இந்தக் கோளாறுக்கு

ஸ்பெஷலிஸ்டு டாக்டர் இல்லாமலா போவார்? நாளைக்கு முதல் காரியம் அதை விசாரிப்பது.''

ராஜரத்தினம் உயிர்போகும் சிரமத்துடன் இடது கையினாலேயே நோட்டில் குண்டு குண்டான, தாறு மாறான எழுத்தில் எழுதினார்:

''மாயா - பத்மனாபன்.''

அருணின் தலை தாழ்ந்தது. ''அவர்களைப் பற்றி யெல்லாம் முன்பே உங்களிடம் சொல்லாததற்கு மன்னியுங்கள்... ''

''உஸ்!'' என்று முகத்தைச் சுளித்தார் ராஜரத்தினம். இடது கையின் ஒரு வீச்சில் அந்தப் பேச்சை வெட்டி விட்டு, ''பத்மனாபன் - வக்கீல் - உன் சிநேகிதனா?'' என்று எழுதினார்.

"ஆமாம்," என்று கூறிவிட்டு ஆவலுடன் நோட்டையும் அவரையும் மாறி மாறிப் பார்த்தான் அருண்.

''அவனை மூர்த்திக்காக வாதாடாதபடி விலகச் சொல். எவ்வளவு பணம் வேண்டுமானாலும் தரலாம்.''

அருண் விக்கித்து நின்றான்.

# 15

**போ**யிற்று! போய்விட்டது. போயே போய்விட்டது.

குழந்தை ஆசையுடன் கட்டிய மணல் வீட்டை முரட்டுக் காளையொன்று தடதடவென்று சரித்துவிட்டு ஓடினாற்போல், அருண் சகலத்தையும் நாசம் பண்ணி விட்டுப் போய்விட்டான்.

மேஜைமீது நீண்டு கிடந்த கைகளைச் சிரமத்துடன் தூக்கி முகத்தைத் துடைத்துக் கொண்டான் பத்மனாபன்.

உள்ளங்கை கசகசத்தது. வியர்வையில் நனைந்த புழுதி முகத்திலும் முழங்கையிலும் ஒட்டியிருப்பதைக் கண்டான் பத்மனாபன்.

புத்தம் புது ஸ்டீல் பர்னிச்சர்கள் தூசியில் திளைத்துக் கொண்டிருந்தன. அறையைக் கூட்டி ஐந்து நாள் இருக்கும். மேஜை நாற்காலி பீரோக்களைத் தூசி துடைத்து ஒரு வாரம் இருக்கும். கூட்டுகிற வேலைக்காரி, ஆபீஸ் பையன், அத்தனை பேருமா மறைந்து விட்டார்கள்!

பத்மனாபன் பெருமூச்செறிந்தான்.

மவுண்ட்ரோடில் வெற்றிலை பாக்குக் கடைகூடப் பளபளவென்றிருக்கிற காலத்தில், ஓர் இளம் வக்கீலின் புது அலுவலகம் இப்படிப் புழுதியடைந்து கேவலத்திலும் கேவலமாகக் காட்சி தருகிறது!

இந்தக் குப்பைக் காட்டுக்கு, வீடு எத்தனையோ மடங்கு தேவலை. ஆனால் அது ஆஸ்பத்திரியாகிக் கொண்டு வருகிறது. சதா கல்யாணியின் முனகல், மருந்துகளின் நெடி, என்ன இழவுதான் வந்ததோ அவளுக்கு! கேட்டாலும் 'ஒன்றுமில்லையே' என்று மழுப்பல். வேஷம் போடுகிறாளோ ஒருவேளை?

இருக்கும், இருக்கும். அருண் சொல்லிக்கொடுத்திருப்பான் இப்படியெல்லாம் நடி என்று. நான் ஏமாறப் போவதில்லை. ஆறு நாளாகிறது வீட்டுப் பக்கம் எட்டிப் பார்த்து. ஒன்றும் குடி முழுகிவிடாது. அப்படியே முழுகினால் முழுகிவிட்டுப் போகட்டும். எப்போது ஒரு பெண்டாட்டி கணவனைவிடக் கணவனின் சினேகிதன் மேலென்று நினைக்கிறாளோ, அப்பறம் அவள் இருக்கிற இடத்தைக் குடும்பமாகக் கருத வழியில்லை..

மாடி ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தான் பத்மனாபன்.

மவுண்ட்ரோடுக்கென்ன குறைச்சல்! மேனியெங்கும் நடைபோட்டுக் கொண்டு உலவும் நங்கை மாதிரி, வழிந்தோடும் வாகனங்களில் பெருமை கொண்டு பூரித்து நிற்கிறது.

சட்டெனப் பின்வாங்கினான் பத்மனாபன்.

சைக்கிள் ரிக்ஷாவிலிருந்து இறங்கி வருகிற நபர்–

முகத்தை மறைக்கும் அந்தத் திருநாமம், கட்டிடத்தின் சொந்தக்காரருடையதுதான்.

''ஏமிரா ஸ்வாமி!'' என்று குரல் கொடுத்தவாறு, குடையின் நுனியை ஒவ்வொரு படியிலும் தட்டிக் கொண்டு மேலே வந்தார் சொந்தக்காரர்.

''வாருங்கள் சார்!'' என்று வரவேற்காதிருக்க முடியவில்லை.

''நூறு தடவை வந்தாச்சு, ஸ்வாமி!'' என்று கூறி முழங்காலைப் பிடித்து விட்டுக் கொண்டார் வந்தவர்.

பத்மனாபன் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான். சால் ஜாப்புகள் அவனுக்குப் பழக்கமேயில்லை. ''என்ன பண்ணட்டும்? ஏகப்பட்ட பீஸ் வரவேண்டியிருக்குது கட்சிக்காரர்களிடமிருந்து! வந்ததும்...''

சொந்தக்காரர், ஏளனத்துடன் அறையை நோட்டம் விட்டுவிட்டு, ''கட்சிக்காரரா? கேஸ் கட்டு ஒன்று கூடக் காணோமே ஸ்வாமி? எந்தக் கட்சிக்காரரைச் சொல்றீங்க?'' என்று வினவினார்.

''அந்தக் கவலை உங்களுக்கு ஏன்?'' சற்று வெடுக்கெனவே பதிலளித்து விட்டதை உணர்ந்து நாக்கைக் கடித்துக் கொண்டான் பத்மனாபன். ''முதல் தேதி டாணென்று மொத்த வாடகையையும் தந்துவிடுகிறேன், சரிதானே?''

''என்னவோ செய்யுங்க. எனக்கு நம்பிக்கை இல்லை. மவுண்ட் ரோடிலே அங்குலத்துக்கு ஐந்நூறு ரூபாய்

வாடகை தருகிறேன் என்று பறக்கிறார்கள். உமக்குத் தெரியவில்லை ஸ்வாமி!'' என்று முணுமுணுத்துக் கொண்டு திரும்பிப் போகிறவர் மீது பத்மனாபனுக்கு ஆத்திரம்தான் ஏற்பட்டது. மனிதன் வீட்டு வாடகையில் மட்டும் மாதம் நாலாயிரம் சம்பாதிப்பதாகக் கேள்வி. இந்தப் பிச்சைக்காசு முன்னூறு வந்துதான் கஞ்சி காய்ச்ச வேண்டுமா என்ன?

பக்கத்து ரொட்டிக் கடையில் மணி பத்தடித்தது.

யாரோ மீண்டும் ஏறி வந்தார்கள். ஆனால் குமாஸ்தா அல்ல.

ஸ்டீல் பர்னிச்சர்களுக்கான தவணைப் பணத்தை வசூல் செய்யும் சிப்பந்தி.

வீட்டுக்காரர் மாதிரி இவனுக்குத் தனிப்பட்ட அக்கறை கிடையாது. கம்பெனியில் கொடுக்கிற நோட்டீசை, குறித்த விலாசத்தில் விசிறி விட்டுப் போவது அவன் வேலை. ஆகவே, ஏன் நாலு தவணை நிற்கிறது என்று அதிகப்பிரசங்கித்தனமாகக் கேட்காமல், கம்பெனி கடிதத்தை மட்டும் கொடுத்து விட்டுத் திரும்பிவிட்டான்.

அவனைக் கிட்டத்தட்ட மோதிக் கொள்வதுபோல இடித்துக்கொண்டு உள்ளே வந்தவர், பத்மனாபனின் குமாஸ்தா. குடை முதல் கேஸ் கட்டு வரையில் எல்லா வற்றையும் எல்லாப் போதிலும் கன்னாபின்னாவென்று சுமந்துகொண்டு திரியும் குழப்பக்காரக் கிழவர். பிராசிக்யூட்டரின் உதவியாளனாகப் பத்மனாபன் இருந்த காலத்தில் ஏதாவது வேலை தரும்படி நடையாய் நடந் தார். பத்மனாபன் சொந்தப் பிராக்டிஸ் ஆரம்பித்ததும் அவரை அழைத்துக் கொண்டான். ஆனால் அதை நன்றியுடன் நினைத்துக் கொள்பவரல்ல அவர்.

தேவாரப் பாடலொன்றை உரக்கப் பாடிக்கொண்டே தன் மேஜையை அணுகியவர், ''சார்! நீங்கள்தான் இந்த அற்பப் பயல்களிடமிருந்து என்னைக் காப்பாற்ற வேண்டும்,'' என்றார்.

''யாரிடமிருந்து?'' என்று பத்மனாபன் திகைத்தான்.

''எனக்கென்ன தெரியும், கஷ்டகாலம்? வக்கீல் குமாஸ்தாக்களுக்காக ஏதோ யூனியன் இருக்கிறதாமே? அதிலே சம்பளம் தீர்மானம் பண்ணியிருப்பதற்குக் குறைவாக நான் உங்களிடம் ஒப்புக்கொண்டு விட்டே னாம்! பாய் பாய் என்று பாய்கிறார்கள், போங்கள்!''

பத்மனாபன் பல்லைக் கடிப்பதைப் பார்க்கவில்லை அவர். ''அட, கட்சிக்காரங்க அஞ்சு பத்து கொடுப்பார் களே, அதைச் சம்பளம் என்று சேர்த்துச் சொல்லலா மென்று பார்த்தால், எந்தக் கட்சிக்காரன் இங்கே வருகிறான்?'' என்றார்.

''இன்றைக்கு உங்களுக்கு ஒரு வேலையும் இல்லை. வீட்டுக்குப் போவதானால் போங்கள்,'' என்றான் பத்மனாபன்.

''அப்படியா, அதை முன்னாடியே சொல்லக் கூடாதோ?'' என்றவர் மறுகணமே வெளியேறிவிட்டார்.

நெற்றியை இறுக அழுத்திக்கொண்டு பத்மனாபன் மேஜையடியில் உட்கார்ந்தான்.

''இந்த நாடகத்தை இனி அதிக நாளைக்கு ஓட்ட முடியாது. பண்ணியதெல்லாம் மடத்தனம், சிறுபிள்ளைத் தனம். நிதானமான, நிம்மதியான வாழ்க்கையைக் கண்டபடி குலைத்துக் கொண்டது போதும், ஒரே முழுக்கு, தலை முழுக்கு...'' என்று எண்ணினான்.

செருகு அறையை வெளியே இழுத்தான். பாங்க் பாஸ் புத்தகத்தை எடுத்துப் பார்த்தான்.

*வரவுப் பத்தி பாலைவனம் போல இருந்தது; வாங்கும் பத்தியில் திருவிழாக் கூட்டம்.*

*• கையிருப்பு: 304-13.*

*பாஸ் புத்தகத்தை இரண்டாக மடித்து, பையில் போட்டுக்கொண்டு எழுந்தான் பத்மனாபன்.*

*''குளோஸே பண்ணிவிடப் போகிறீர்களா?'' என்று பாங்க் குமாஸ்தா கேட்டார்.*

*''ஆமாம்,'' என்றான் பத்மனாபன் அழுத்தமாக. மொத்தப் பணத்தையும் வாங்கிக் கொண்டு கணக்கை மூடுவதற்கு, தான் வந்திருக்க வேண்டாம் என்று இப்போது தோன்றியது. வேறு யாரையாவது அனுப்பி யிருக்கலாம். என்னவோ கணக்கில் லட்ச ரூபாயைக் கட்டப் போவதுபோல நேரில் எதற்காக வரவேண்டும்?*

*பாஸ் புத்தகத்தில் எல்லாச் சடங்குகளும் சம்பிரம மாக முடிந்தன. ரூ.304-13 கச்சிதமாக எண்ணிக் கையில் தரப்பட்டது.*

*பணத்தை பையில் அடைத்துக் கொண்டு, வாசலுக்கு வந்த சமயம், ''என்னய்யா பத்மனாபன், அப்புறம் வராமலே இருந்துவிட்டீர்?'' என்று ஒரு குரல் விளித்தது.*

*சுப்ரீம் கோர்ட் லாயரான சேஷாசலத்தின் அரை டஜன் குமாஸ்தாக்களில் இவரும் ஒருவர்.*

*பத்மனாபன் தயக்கத்துடன் நின்று, ''சௌக்கியமா?'' என்று விசாரித்தான்.*

*''என் சௌக்கியம் இருக்கட்டும். ஐயா! ஒரு ஆயிரத்தைந்நூறு ரூபாய் கூடவா புரட்ட முடியாமல் போய்விட்டது உம்முடைய கட்சிக்காரரால்!'' என்றார் குமாஸ்தா.*

*''அதெல்லாமில்லை....''*

''இல்லையாவது ஒன்றாவது!'' என்று கோபித்துக் கொண்டார் அவர். ''எங்கள் பெரியவர் டெல்லிக்குப் போவதென்றால் ஆயிரத்தெட்டு முனகல் முனகுவார் – குளிர், சாப்பாடு சரியில்லை என்று. என்னவோ உம்ம அதிர்ஷ்டம், கேஸை எடுத்துக் கொள்வதாக ஒப்புக் கொண்டார். பீஸ் ஆயிரத்தைந்நூறை முன்னாடியே தரணுமென்றால் தர வேண்டியதுதானே?''

''அதற்குத்தான் ஏற்பாடு பண்ணிக்கொண்டிருக் கிறேன்,'' என்றான் பத்மனாபன். ''போதும் எல்லா ஏற்பாடும்!'' என்று அவன் உள்மனம் அலுத்துக் கொண்டது. ''யாருக்காக, என்ன செய்ய வேண்டும் இனிமேல்? மாயா ஒரே வினாடியில் உதறிவிட்டுப் போனபிறகு யார் எப்படிப் போனால் என்ன? அவளுக்குத் தெரியப் போகிறதா, மூர்த்திக்காக நாம் எப்படி உயிரை விட்டுக் கொண்டிருக்கிறோம் என்பது?''

குமாஸ்தா கோபித்துக் கொண்டார். ''நன்றாய் ஏற்பாடு பண்ணினீர் போம்! நான் உம்ம வீட்டுக்குக் கூட வந்து தேடினேன். உம்மைக் காணோம்.. அப்புறம், ஒரு வேளை அந்தப் பையன் பெயர் என்ன – மூர்த்தி – ஆமாம், அவன் வீட்டுக்குப் போய் விசாரிக்கலாமா என்று...''

''போனீர்களா என்ன?'' என்று ஆவலுடன் கேட்டான் பத்மனாபன்.

''இல்லை... அவர்கள் விலாசம் சரியாய் நினை வில்லை...''

பத்மனாபனின் மனத்தில் சுறுசுறுவென்று ஒரு யோசனை பிறந்திருந்தது.

''இப்படி வாரும்,'' என்று அவர் தோளைப் பற்றி, பாங்க் கட்டிடத்தின் ஒரு மூலைக்கு அழைத்துச் சென்றான்.

''என்ன விஷயம்?'' குமாஸ்தாவின் குரலில் திகில் தென்பட்டது.

பத்மனாபன் பையில் கையை விட்டு, ஐம்பது ரூபாய் எடுத்தான். குமாஸ்தாவின் சட்டைப் பையில் திணித்தான்.

''என்ன.. என்ன இது?'' என்று அவர் திணறினார்.

''சொல்கிறேன், கேளும்,'' என்றான் பத்மனாபன். ''இந்த மூர்த்தியின் வழக்கில் நான் அக்கறையே எடுத்துக் கொள்ளவில்லை என்று அவர்கள் விட்டில் ஒரு தப்பான அபிப்பிராயம்...''

''சே, சே! நாக்கு அழுகிவிடாதா?'' என்று குமாஸ்தா விசுவாசத்துடன் குறுக்கிட்டார்.

''உஸ்! அதிலும் முக்கியமாக, இந்த மூர்த்திக்கு ஒரு தங்கை இருக்கிறாளே மாயா என்று, அவளுக்குத்தான் என் மீது ரொம்பக் கோபம். நீர்தான் இதைச் சரி செய்ய வேண்டும்!''

''எப்படி?''

''அவர்கள் வீட்டில் போய் என்னைத் தேடுங்கள்! ராவாய்ப் பகலாய் நான் மூர்த்தி ஜபத்துடன் எங்கேயோ சுற்றிக் கொண்டிருப்பதாய்ச் சொல்லுங்கள். இப்படியே விட்டால் பைத்தியமே பிடித்துவிடும் என்று பயமா யிருப்பதாகவும் அதனால்தான் கவலையோடு என்னைத் தேடிக்கொண்டிருப்பதாயும் அளந்து விடுங்கள். நாலு நாளாய் என்னைக் காணவே காணோம் என்று பயமுறுத் துங்கள்! மூர்த்தியின் வழக்கை எடுத்துக் கொள்வதற்காக நான் வேலையை விட்டது பற்றி ஒரு மூச்சு அழுங்கள்.''

குமாஸ்தா முதலில் திகைத்த போதிலும், பத்மனாபன் விவரிக்க விவரிக்க உற்சாகமடைந்தார்.

''ஜமாய்த்துவிடுகிறேன்! வீட்டிலே உங்கள் சம்சாரம் கண்ணீரும் கம்பலையுமாய் நிற்கிறதைப் பார்த்தால் கண்ணராவியாய் இருக்கிறதென்று..''

பதறினான் பத்மனாபன். ''வேண்டாம் வேண்டாம்! என் வீட்டைப் பற்றிப் பேச்சு எதுவும் எடுக்காதீர்கள்! அதிலே பல சங்கடம். அப்புறம் சொல்கிறேன்...''

குமாஸ்தா உலக அனுபவம் உள்ளவர். ஏதோ சமாசாரம் இருக்கிறதென்று ஊகித்துக் கொண்டார். ''சரி, சரி. என்னிடம் ஒப்படைத்தாகிவிட்டது. விடும் கவலையை!'' என்றவர் பையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டார். ''எல்லாம் பத்து ரூபாய் நோட்டாகவே கொடுத்துவிட்டீர்களோ? பரவாயில்லை, பஸ்ஸில் சில்லறை இல்லை என்பான்... பரவாயில்லை...'' என்றார்.

சில்லறையாக ஒரு ரூபாய் கொடுத்து அனுப்பிவிட்டு, மவுண்ட் ரோடுக்குத் திரும்பினான் பத்மனாபன்.

அடுத்த இரண்டு மணி நேரம், பத்மனாபனுக்கு அறைக்குள் இருப்புக் கொள்ளவில்லை. கூண்டில் அடைக்கப்பட்ட மாதிரி குறுக்கும் நெடுக்கும் உலாவு வதும், நொடிக்கு ஒருமுறை தெருவை எட்டிப் பார்ப்பது மாகத் தவித்தான்.

''வெற்றி! வெற்றி!'' என்று உற்சாகமாகக் கூவிக் கொண்டே குமாஸ்தா உள்ளே வந்தார்.

பத்மனாபன் அவர் கரங்களைப் பிடித்துக் கொண் டான். ''எப்படி? என்ன நடந்தது?''

''சக்ஸஸ்தான்! வேறே?'' என்றார் குமாஸ்தா. ''பெரியவர் ஒருத்தர் இருக்கிறாரே மூர்த்தியின் அப்பாவா அது? – அவர் அவ்வளவு சுவாரசியம் காட்டவில்லை. ஆனால் அந்தப் பெண், பாவம், அழுதேவிட்டாள்!''

''நிஜமாகவா?''

''சத்தியமாய்! எல்லாம் என்னால் வந்ததுதான்! நான் அவரை ரொம்பக் கோபித்துக் கொண்டுவிட்டேன் என்று ஓவென்று கதறிவிட்டது.''

''அப்புறம்?''

''இன்னும் கொஞ்ச நேரத்தில் வருவாள் பாருங் களேன். 'மவுண்ட் ரோடு ஆபீசுக்கு அவர் வராமல் இருக்கமாட்டார். ஒரு நாள் பூரா காத்திருந்தாவது அவரைப் பார்க்கிறேன்' என்றாள்.''

''பிரமாதம்!'' என்று பத்மனாபன் அவரைக் கட்டி அணைக்காத குறையாகப் பாராட்டி விடை கொடுத் தனுப்பினான்.

சிட்டுக் குருவி போல ஜிவ்வென்று அவன் உள்ளம் பறந்தது.

மாயா வரப்போகிறாள்! இன்னும் சில வினாடிகளில்!

அறையின் அலங்கோலம் அவன் கண்களை உறுத்தியது. கீழேயும் மேசை நாற்காலிகள் மீதும் சிதறிக் கிடந்த காகிதங்களை ஒழுங்குபடுத்தத் தொடங் கினான், அவசர அவசரமாக. பின்னர்தான் நினைவு வந்தது - அறை சுத்தமாயிருந்தால் குமாஸ்தா சொன்ன தற்குப் பொருத்தமாய் இருக்காது என்று. அடுக்கியதை மீண்டும் கலைத்துப் போட்டான். தலையை மட்டும் கையால் அழுத்தி விட்டுக்கொண்டு, சட்டையை உதறி விட்டுக் கொண்டான்.

கீழே டாக்ஸி வந்து நின்றது. பச்சை வர்ணப் புடவை ஜன்னலோரத்தில் தெரிந்தது.

மேஜைக்குச் சட்டெனத் திரும்பிய பத்மனாபன் தலையைக் கவிழ்த்துக் கொண்டான்.

அவள் படியேறி வரும் காலடியோசை கேட்டது.

அறைக்குள் நுழையும்போதே குரல் வந்தது.

''ஹலோ! நினைவிருக்கிறதா என்னை?''

சாட்டையடி பட்டமாதிரி நிமிர்ந்து நோக்கினான்.

''உங்கள் மனைவி, கல்யாணி.''

கல்யாணிதான். ஆனால் எத்தனை மாறியிருக்கிறாள்! கன்னத்தில் இளைப்பு. தேகத்தில் மெலிவு. குரலில் – உல்லாசம் இருக்கிறதே தவிர, ஆழ்ந்த பலவீனம்!

அவன் எதிரே வந்து நின்றாள் கல்யாணி.

''என்னதான் என் சமையல் மோசமென்றாலும் நீங்கள் இப்படி ஒரேயடியாய் நிராகரிக்கலாமா? ஏதோ நாலிலே எட்டிலே வீட்டுக்கு வந்து, என் சமையலிலும் ஒரு பிடி விழுங்கிவிட்டுப் போகக் கூடாதா? வேண்டு மானால், சாப்பாடோடு வயிற்றுவலி மருந்தும் வாங்கி வைக்கிறேன்.''

வினாடி நேரம் அவள் பார்வையைப் பத்மனாபன் சந்தித்தான். வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருந் தாலும், கண்ணின் முனையில் முத்துக்கோத்த மாதிரி நீர் பளபளப்பது நன்றாய்த் தெரிந்தது.

எழுந்து கொண்டான் எரிச்சலுடன். "அழுவதற்காகவே மெனக்கெட்டு டாக்ஸி வைத்துக்கொண்டு வந்தாயாக்கும்!''

சினத்துடன் சொன்னவாறு ஜன்னலண்டை நின்றவன் திடுக்கிட்டான்.

கீழே தெருவில், ஒரு டாக்ஸியிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தாள் மாயா.

# 16

வந்த திசைக்கு நேர் எதிர்த்திசையில் டாக்ஸி ஓடி மறைந்துவிட்டது.

கல்யாணி இங்கே இருக்கிறாள்! மாயாவும் வந்து கொண்டிருக்கிறாள்! அந்தச் சந்திப்பை எப்படித் தவிர்ப்பது?

பத்மனாபன் கையைப் பிசைந்தான்.

மாடிப்படியில் மெல்லிய ஸ்லிப்பரின் ஓசை சரக் சரக்கென்று கேட்டது.

மாயா வந்து கொண்டிருக்கிறாள். இன்னும் இருபது அல்லது இருபத்திரண்டு தரம் காலடியோசை கேட்கும். பிறகு நின்று விடும்.

கல்யாணியை அவள் நேருக்கு நேராக சந்தித்த பின்னர் இன்னொரு இருபது அல்லது இருபத்தைந்து காலடியோசையில் திரும்பிவிடுவாள் மாயா. பிறகு அந்த ஓசை இந்த மாடிப்படியில் ஒருபோதும் கேட்காது.

ஜன்னலருகே சென்ற கணவன் வெடுக்கென்று திரும்பியபோது அவன் முகத்தில் பரவியிருந்த குழப் பத்தையும் கலவரத்தையும் கல்யாணி கவனித்தாள்.

''நான் ஏதாவது தப்பாய்ச் சொல்லியிருந்தால்–''

உலர்ந்த சுள்ளி முறிந்த மாதிரி அவள் பேச்சு பட்டென்று நின்றது.

அறை வாசலில் வந்து நிற்பவள் யார்? ஆவலுடன் வேகமாக வந்தவள் தயக்கத்துடன் நின்றுவிட்டது ஏன்?

''வா, மாயா, உள்ளே வா. நமக்கு வேண்டியவர்கள் தான்.'' பத்மனாபன் நம்பிக்கை இல்லாமல் சமாளிக்க முயன்றான்.

ஸ்லிப்பரைக் கழற்றி வாசலிலேயே விட்டுவிட்டு, ஆர்வத்துடன் உள்ளே வந்தாள் மாயா. பத்மனாபனை மிகவும் நெருங்கினாள். ''என்னை... என்னை மன்னியுங்கள். நீங்கள் தனியாயிருப்பீர்கள் என்று...'' படபடப்பாக வந்த சொற்களை அடக்கிக் கொண்டு மீண்டும் தயக்கத்துடன் கல்யாணிமீது பார்வையை வீசினாள்.

கல்யாணியும் அவளை அளந்தாள். 'ஆக, இவள் தான் மாயா!'

கல்யாணி தன்னை மறந்து, வெறி பிடித்தவளாகக் கூச்சலிட்டுவிடவில்லை. தன் புலன்கள் அனைத்தும் கூர்மைப்பட்டு, தீட்டிய கத்தியாகப் பளபளத்து நிற்பதை அவளால் உணர முடிந்தது. ஒரு தவறான சொல், ஒரு அஜாக்கிரதையான அசைவு, ஆற்ற முடியாத ரண காயத்தை ஏற்படுத்திவிடும் என்று அவளுக்குத் தெரிந்தது.

கபடமில்லாத பார்வையோடு, இளமையின் தலைவாயிலில் நிற்கும் மாயாவை விழியகற்றாமல் கல்யாணி கவனித்தாள். தன் மணவாழ்வைப் பறிக்க வந்த சத்துரு என்ற பொறாமையும் சினமும் எழவில்லை. தன்னைப் போலவே விதியின் சூதாட்டப் பலகையில் உருட்டப்படும் பகடைக்காய் என்ற பரிதாபம்தான் மேலிட்டது.

என்ன செய்துவிடுவாளோ, என்ன சொல்லிவிடுவாளோ என்ற அச்சத்துடன் நிற்கும் பத்மனாபனைப் பார்த்தாள். துரோகம் இழைக்கும் கணவனாக அவன் காட்சி தரவில்லை. வழி தவறிவிட்ட குழந்தையாகத் தோன்றினான்.

இருக்கையிலிருந்து எழுந்து கொண்டவள், ''சரி. உங்களுக்காக அடுத்த கட்சிக்காரர் வந்துவிட்டார். நான் வருகிறேன் வக்கீல் சார்,'' என்றாள் சோகமான புன்னகையுடன்.

'வக்கீல் சார்,' என்று அவள் அழுத்திக் குறிப் பிட்டதன் முழுப் பொருளை உணர்ந்தவனாக விதிர்த்துப் போன பத்மனாபன், ''வந்து... அப்பறம்... நாம்...'' என்று தடுமாறித் தவித்தான்.

கல்யாணியின் பேச்சில் தெளிவும் உறுதியும் நிறைந் திருந்தன. ''எல்லாம் உங்கள் கையில் விட்டுவிட்டேன். நீங்கள் பார்த்து என்ன ஏற்பாடு செய்தாலும் சரி.''

''அதாவது....''

''ஜீவனாம்சத்துக்கு வழி பண்ணிக் கொடுங்கள், போதும். மற்றபடி அவராக மனம் திருந்தி என்றைக்கு என்னிடம் திரும்பி வந்தாலும் சரி. கேஸை நீங்கள் எப்படி ராஜி செய்தாலும் சரி. கணவனிடம் சண்டை பிடிப்பதற்காகக் கோர்ட்டுப் படி ஏற நான் தயாராயில்லை. அது எனக்கும் அவமானம். அவருக்கும் இழுக்கு. வருகிறேன், வக்கீல் சார். ரொம்ப நன்றி!''

திரும்பியும் பாராமல் கணமும் தயங்காமல் அறையை விட்டு வெளியேறினாள் கல்யாணி.

மாடிப்படியில் அவள் இறங்குகையில், மாயா தன்னையே பார்த்துக் கொண்டு நிற்பதை உணர்ந்தாள்.

''பாவம், வாழ்க்கையில் ரொம்பக் கஷ்டப்பட்ட பெண் போலிருக்கிறது,'' என்று மாயா அனுதாபத்துடன் கூறுவது செவியில் கணீரென விழுந்தது.

''ஆமாம்.... மணவாழ்க்கையில்... ஏமாற்றம்...'' என்று பத்மனாபன் ஏதோ முனகுவதையும் அவள் கேட்டாள்.

இரும்புக் கிடக்கியொன்று அடிவயிற்றுக்குள் புகுந்து குடலைக் கவ்வித் திருகுவது போன்ற பயங்கர வேதனை கல்யாணிக்கு ஏற்பட்டது. கண்கள் நெருப்பு உருண்டைகளாக எரிய, உதடுகள் சுண்டி விடப்பட்ட ஸ்பிரிங் சுருள் போலத் துடித்தன.

**வீ**ட்டை அடைந்தபோது முற்றத்தில் வெய்யில் சாய்வாக விழுந்திருந்தது.

அலாரத்தை நோக்கினாள். எப்போதோ நின்று போயிருந்தது அது. இருந்தாலும் மணி நான்கு இருக்கும் என்று ஊகித்துக்கொண்டாள். மூடமறந்திருந்த குழாய், சிமிட்டித் தரையில் கொடகொடவென்று தண்ணீரைக் கொட்டிக் கொண்டிருந்தது. அதை நிறுத்திவிட்டு, முற்றத்தின் ஓரமாக வயிற்றை இரண்டு கைகளாலும் அமுக்கிப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்தாள் 'வேண்டாம், வராதே!' என்று கண்ணுக்குத் தெரியாத ஒரு பயங்கரத் திடம் அவள் மௌனமாக மன்றாடிக் கொண்டிருந்தாள். என்ன கெஞ்சலுக்கும் அது மசியாது என்று அவளுக்கு அனுபவத்தால் தெரியும். கீழ் வயிற்றில் இடது குடலுக் கருகே அது உருண்டு திரண்டு கொண்டிருந்தது.

கொஞ்சம் கொஞ்சமாக அந்த வேதனை அதிகரித்தது. சற்றைக்கெல்லாம் தொண்டையில் எரிச்சலுடன் கமறிக் கொண்டு வந்தது.

"கடவுளே!" என்று வாய்விட்டு விம்மிக் கொண்டு சாக்கடை ஓரமாகக் காறித் துப்பினாள்.

செக்கச் சிவந்த திரவம் சாக்கடைக்குள் அமிழ்ந்து மறைந்தது. மெல்லிய சிவப்புப் படலம் சில வினாடிகள் மிதந்து, பிறகு தேய்ந்தது.

இரண்டு மாதங்களுக்கு முன்பு முதன் முறையாக இப்படி நேரிட்டபோது ஏற்பட்ட பயம் இப்போது இல்லை. கொஞ்ச நேரம் கஷ்டம், துன்பம். எதையெல் லாமோ தாங்கிக் கொள்கிறோம். இதைப் பொறுக்க முடியாவிட்டால் அப்புறம் என்ன பெண் ஜன்மம்!

தாளமுடியாத சிரமத்துடன் எழுந்து தண்ணீரை மொண்டு சாக்கடையில் வீசிக் கொட்டிச் சுத்தம் செய்தாள்.

உடம்பு மொத்தத்திலும் ஒரே படபடப்பு, கொட்டக் கொட்டக் கண்ணைத் திறந்திருக்கும போது இருளைப் பார்ப்பது போன்ற பிரமை. தலைக்குள் வண்டு புகுந்து கொண்ட மாதிரி ஒரு கிறுகிறுப்பு.

காபி போட்டுக் குடிக்கலாம். கொஞ்ச நாளாக அது ஒன்றுதான் ஆகாரம்.

டப்பாவில் காபிப் பொடியின் மணம்தான் இருந்தது.

அலமாரியில் பொருத்தப் பட்டிருந்த காப்பி அரைக்கும் மெஷினைச் சுற்றினாள். பட்டினி போட்டு வேலை வாங்குவதை ஆட்சேபிப்பதுபோலக் கொட கொடத்தாலும், வறியனாகிவிட்ட வள்ளல் போல, தன்னிடம் இருப்பதைச் சிந்தியது மெஷின். உள்ளங்கை வலிக்க வலிக்க அதன் வாயின்மீது தட்டி இன்னும் கொஞ்சம் பொடி சேகரித்தாள்.

தெருக்கோடி மளிகைக் கடையில் கொஞ்சம் ஜாடையாகச் சொன்னாலும் போதும், ஐந்நூறு ரூபாய் வரை சாமான்கள் கொடுப்பார்கள். அவளுக்குத் தெரியும். ஆனால் அப்படிப் பெறுகிற உப்பு, கரிக்காது; மிளகாய், உறைக்காது; புளி, புளிக்காது.

புஸ்ஸென்று இரைச்சலிட்டது ஸ்டவ். சமையல் மேடையில் சாய்ந்தாற்போல் நின்று கொண்டாள் கல்யாணி.

'இத்தனையும் பைத்தியக்காரத்தனம்!' என்று ஏதோ ஒன்று எச்சரித்தது அவளை. 'பின்னே என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?' என்று எரிந்து விழுந்தாள் கல்யாணி. 'இல்லாத பொல்லாத முனகல்களையெல் லாம் அவரிடம் அளந்து அவர் நிம்மதியைக் குலைக்கச் சொல்கிறாயா? பார், சற்று முன்னால் ஒரு சிறு நாடகம்; ஒரு குட்டிப் பொய். அவர் சந்தோஷமாகிவிட்டார்.

அந்தச் சின்ன இக்கட்டுக்கூட நேர்ந்திருக்காது. நேற்றே பழைய பையன் முத்து வந்து அவருடைய ஆபீஸ் இருக்கும் இடத்தைச் சொல்லியிருந்தால். நேற்றே போய்ப் பார்த்துவிட்டு வந்திருக்கலாம். அவருக்கு எந்தவித தர்மசங்கடமும் ஏற்படுத்தாமலே திரும்பி யிருக்கலாம்...'

நீர் கொதிக்கவும், பால்காரி குரல் கொடுக்கவும் சரியாயிருந்தது. பதினைந்து நிமிடத்தில் காபி தயா ராயிற்று. முன்னெல்லாம் ஐந்து நிமிடத்துக்கு மேல் ஆகாது. பரவாயில்லை. இந்த மட்டுக்கு உடம்பு முடிந்ததே.

காபியைக் குடித்துவிட்டு, கட்டிலில் போய்ப் படுத்துக் கொண்டாள் கல்யாணி. முற்றத்தின் நிழல்கள் நீண்டு கொண்டே போய்க் கடைசியில் மறைந்து விட்டன.

அதே போல் இந்த உடம்பு வாதனை அதிகரித்து அதிகரித்துக் கடைசியில் மறைந்தே போய்விடுமா?

லேடி டாக்டர், இரண்டு மாதத்துக்கு முன்பு சொன்னது மறுபடி நினைவில் வந்தது. ஓய்வாயிருக்கும் வேளையிலெல்லாம் அந்த வார்த்தைகள் எதிரொலிப்பது வழக்கமாயிற்று.

''மிகப் பொல்லாத வியாதி இது. வளரவிடக்கூடாது. உன் கணவரை அழைத்து வா, அவரிடம் சொல்லிக் கொள்கிறேன். ஆயிரம் இரண்டாயிரம் செலவழித்தாவது ஆபரேஷன் செய்து குணப்படுத்திக் கொள்ள வேண்டும். அலட்சியமாயிராதே.''

எப்படி இராதே என்று லேடி டாக்டர் எச்சரித்தாரோ, அப்படித்தான் கல்யாணி இருந்தாள். கணவனிடம் சொல்ல நினைப்பதும், இப்போது வேண்டாம், இன் னொரு சமயம் பார்த்துக் கொள்ளலாம் என்று ஒத்திப் போடுவதுமாகப் பல வாரங்கள் ஓடிவிட்டன.

கல்யாணி புரண்டு, குப்புறப் படுத்துக் கொண்டாள். எழுந்து உட்கார்ந்தால் வலி அதிகமாகிவிடும் போலிருந்தது.

''கல்யாணி!''

தன்னை மீறிக் குபுக்கென்று எழுந்து உட்கார்ந்தாள் கல்யாணி.

''கல்யாணி! கதவைத் திற!''

அவர்! அவர் குரல்!

பாய்ந்தோடிச் சென்று தாளைப் பறித்து விலக்கினாள்.

''விளக்குக்கூட ஏற்றாமல் என்ன செய்கிறாய்? உடம்பு கிடம்பு சரியில்லையா, என்ன?... உள்ளே கொண்டு வந்து வையப்பா..''

பத்மனாபன் உடைகளைக் களைய உள்ளே சென்றான்.

கல்யாணி வாசலை நோக்கினாள். ரிக்ஷாவில் மளிகைச் சாமான் பொட்டலங்கள் நிறைந்திருந்தன.

''கொண்டு வா,'' என்று திகைப்புடன் கூறிவிட்டு உள்ளே திரும்பினாள் கல்யாணி.

கண்ணைக் கசக்கிக் கொண்டாள்.

சொப்பனமல்ல. எல்லாம் உண்மையாகத்தான் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன.

''எல்லாம் சரியாயிருக்கிறதா பார். இரண்டு மாத மாய் மறந்தே போய்விட்டேன்.'' பத்மனாபன் பனியனும் மேல் துண்டுமாக அவளருகில் வந்து நின்றான்.

''கொஞ்சம் இருங்கள்,'' என்ற கல்யாணி முற்றத்தில் இறங்கி, கையை நீட்டிப் பார்த்தாள். வானத்தை அண்ணாந்து நோக்கினாள்.

''கழுதை!'' என்று அவள் தலையில் குட்டினான் பத்மனாபன். ''மழை எதுவும் வராது. ரிக்ஷாக்காரனுக்குக்

கூலியைக் கொடுத்தனுப்பு, மளிகைக் கடையில் விசாரித்தேன், இந்த மாதத்துக்கு வாங்கிப்போய் விட்டாயா என்று. இல்லை என்றார்கள். வழக்கமான ஜாபிதாபடி போடு என்று வாங்கி வநதேன். எப்படி என் சாமர்த்தியம்!''

"அடேயப்பா! யாருக்கு வரும்?" என்றாள் கல்யாணி. பரபரவென்று ஓடியாடியதால் வயிற்றின் வேதனை அதிகரித்தது. வேண்டாம். தயவு பண்ணி வராதே. ரொம்ப ரொம்ப நாளைக்கப்புறம், அவர் பழைய மனிதராக வந்திருக்கிறார். கெடுக்காதே. அவர் அந்தண்டை போகட்டும். என்னைக் கொன்று வேண்டுமானாலும் போடு. – அந்த இனம் தெரியாத நோயிடம் கல்யாணி கண்ணீர் மல்கக் கெஞ்சினாள்.

''பையை எடுத்துக்கொண்டு புறப்படு. கறிகாய் வாங்கி வரலாம். இரவு சமையல் பிரமாதமாய் இருக்க வேண்டும்,'' என்றான் பத்மனாபன்.

''இதோ,'' என்றவள், மளிகைச் சாமான்களைப் பரபரவென்று பாத்திரங்களில் கொட்டி மூடிவிட்டு, ஒரே நொடியில் முகம் கழுவி, தலைசீவிக் கொண்டு, புறப்பட்டாள்.

வாசல் கதவைப் பூட்டும் போது, ''இளைத்துத்தான் போய்விட்டாய்,'' என்றான், ஓரக்கண்ணால் அவளை நோக்கிய பத்மனாபன்.

''நாளைக் காலையே பெருத்துவிடமாட்டேனா!'' என்றாள் கல்யாணி. ஆனால் பாதங்களில் இரும்புக் குண்டுகள் கட்டப்பட்டாற்போல் ஒவ்வோர் அடி யெடுத்து வைப்பதும் உயிர் போகும் பிரயத்தனமாக இருந்தது.

மெர்க்குரி விளக்குப் போட்ட கறிகாய்க் கடையில், வாடிக்கையான வியாபாரி, வெகுநாளைக்கப்புறம்

அவர்களைச் சேர்ந்து பார்த்த வியப்பை வெளிப்படை யாகக் கேட்டுவிட்டான்.

''அம்மா ஊரிலே இல்லீங்களா சாமி?''

''ஆமாம்; வழிய வழியப் பிரியம் காட்டிக்கொண்டே, வாடல் வதங்கல் எல்லாம் போடாதே. சேப்பங்கிழங்கு நல்லதாக எடுத்துப் போடு. ஐயா உயிர் அதிலேதான் இருக்கிறது! நாசூக்காய் எடு. கண்டபடி கையாளாதே!'' என்றாள் கல்யாணி சிரித்துக்கொண்டே. 'நல்ல வேளை சிரிக்க முடிகிறது.'

''காலிஃப்ளவர் போடு. அம்மா உயிர் அதிலே இருக்கிறது,'' என்றான் பத்மனாபன்.

''ஐயையோ! வேண்டாம். ஏகப்பட்ட விலை சொல்வான். இது சீஸன் இல்லை,'' என்று தடுத்தாள் கல்யாணி.

''என்ன விலையானாலும் சரி. இன்றைக்கு உனக்கு வாங்கிக் கொடுத்தே தீருவது,'' என்று பத்மனாபன் சொன்னது, அவள் வயிற்றில் அமுத தாரையாக இறங்கியது.

ஆனால் அடுத்த வாக்கியம் அந்த ஆனந்தத்தைக் கொளுத்தும் அக்கினித் திராவகமாக அல்லவா இருந்தது?

அவளருகே குனிந்து, மெல்லச் சொன்னான் பத்மனாபன்: ''உனக்குத் தாங்க்ஸ் சொல்லத்தான் இத்தனையும். எப்பேர்ப்பட்ட நெருக்கடியிலிருந்து என்ன சாமர்த்தியமாய் என்னைக் காப்பாற்றினாய் இன்று!''

கல்யாணிக்கு மயக்கமே வந்துவிட்டது!

ஆக, இத்தனையும் மனப்பூர்வமாக வந்த அன்பின் பெருக்கல்ல, இழிவான ஒரு செயலுக்குத் துணை நின்றதற்குக் கிடைத்த இனாம். பொய்யான நாடகத் துக்குக் கிடைத்த பரிசு. பார்க்கப் போனால், 'இந்த

நாடகத்தை நீ நடத்த நடத்த மேலும் மேலும் கிடைக்கும்' என்று ஆசைகாட்டும் லஞ்சம்.

சற்று நேரமாக மறந்திருந்த வேதனைகளும், வலிகளும் பத்து மடங்கு அதிகரித்த ஆத்திரத்துடன் கல்யாணியைக் குதறின. ''சீ!'' என்று அவ்வளவு கறி காய்களையும் நடுத்தெருவில் வீசி எறிந்து விட்டு ஓடுவதற்கு அவள் உடலும் உள்ளமும் பறந்தன.

''பொறு!'' என்று அடக்கி அதட்டிக் கொண்டாள்.

மெய்யோ பொய்யோ, நிஜமோ நடிப்போ, இந்தத் தற்காலிக ஆனந்தத்தை அவள் இழக்கத் தயாராயில்லை.

''போதும். இவ்வளவை வைத்துக் கொண்டு ஒரு கல்யாணமே நடத்தலாம்,'' என்றாள்.

''வேண்டுமானால் உனக்கு நான் இன்னொரு தாலி கட்டி வைக்கிறேன்,'' என்றான் பத்மனாபன்.

இருவரும் சிரித்துப் பேசியபடியே வீட்டைத் திரும்ப அடைந்தபோது, கதவின் மீது சாய்ந்து கொண்டு நிற்கும் உருவத்தைக் கவனித்தார்கள்.

இருவருக்கும் இரண்டு விதத்தில் அதிர்ச்சி ஏற்பட்டது.

இருந்தாலும் கல்யாணிதான் முதலில் சமாளித்துக் கொண்டு, ''அதெப்படி உங்களுக்கு மூக்கில் வியர்க்கிறது, ராத்திரி விருந்து செய்யப் போகிறேனென்று?'' என்று கேட்டாள்.

பத்மனாபன் சுரத்தில்லாமல், ''ஹலோ!'' என்றான்.

''சாவியை மட்டும் கொடுத்துவிட்டு, கொஞ்சம் அப்படியே புருஷனுடன் நில் கல்யாணி. நான் உள்ளே போய் ஆரத்தி கரைத்து எடுத்து வந்து சுற்றுகிறேன்,'' என்றான் அருண். எப்படிப்பட்ட சூழ்நிலை நிலவுமோ என்று ஆயிரம் ஐயங்களுடன் வந்திருந்தவனுக்கு, அவர்கள் சேர்ந்து வந்த காட்சி நிம்மதி தந்தது.

''காலேஜுக்கு ஒழுங்காய்ப் போய்க் கொண்டிருக்கிறாயா?'' என்று விசாரித்தான் பத்மனாபன். வேறு எதைப்பற்றியும் பேச அவன் பயப்படுவது அப்பட்டமாகத் தெரிந்தது.

கல்யாணி கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்று, முதலில் சுவாமி படத்துக்கு விளக்கேற்றி விழுந்து வணங்கினாள். ''தாயே, இந்த உயிர் இப்படியே போவதானாலும் சரி, என்னவோ நல்லது நடக்கும்போல் அறிகுறிகள் காட்டுகிறாய். இதை நீடிக்க விடு. மேலும் மேலும் விளையாடாதே'' என்று தெய்வத்திடம் நேருக்கு நேராக முறையிட்டுவிட்டு, அடுப்படியில் முனைந்தாள்.

நடுநடுவே எட்டிப் பார்த்தபோது, கல்லூரி நடப்புகளை அருண் சுவாரசியமாக விவரித்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

ஒரு மணி நேரம் ஓடியது. தாம்பாளத்தில் கரண்டியால் கடகடவென்று தட்டி, ''சாப்பாடு தயார்!'' என்று கல்யாணி அறிவித்தாள்.

''நீயும் உட்காரேன், கல்யாணி. நாம் மூன்று பேருமாய்ச் சேர்ந்து சாப்பிட்டு ரொம்பக் காலமாகிறது,'' என்றான் அருண்.

''பரவாயில்லை, எனக்கு மிச்சம் வையுங்கள். போதும்,'' என்று சொல்லிவிட்டுப் பரிமாறலானாள் கல்யாணி.

''நான் எதற்கு உன்னைத் தேடிக் கொண்டு வந்தேன் என்று கேட்கவேயில்லையே?'' என்றான் அருண்.

''எதற்கு?'' என்று பத்மனாபன் கேட்டான்.

''ஒரு கட்சியில் ஆஜராவதற்கும், வாதாடுவதற்கும் தான் இதுவரை நீ பீஸ் வாங்கி இருப்பாய், இல்லையா?''

''ஆமாம்.''

''ஒரு கட்சியில் ஆஜராகமல் இருப்பதற்காக, வாதாடாமல் விலகுவதற்காக, உனக்கு ஒருவர் ஐயாயிரம் ரூபாய் தருகிறேன் என்கிறார்!''

''என்ன சொல்கிறாய்?''

''அந்த மூர்த்தி ஒரு கெட்ட ராஸ்கல். அவன் கேஸை நீ எடுத்துக் கொள்ளாமல் இருந்தால் ஐயாயிரம் ரூபாய் தருவதற்கு ஒருத்தர் தயாராயிருக்கிறார். நீ ஒப்புக்கொள்ள வேண்டும் என்பதுதான் என் வேண்டுகோளும்.''

''நான்சென்ஸ்!'' என்று கையை உதறிக்கொண்டு இலையைவிட்டு எழுந்து விட்டான் பத்மனாபன்.

# 17

மூர்த்தியின் வழக்கை எடுத்துக் கொள்ளாமல் இருக்க வேண்டும். அதற்குப் பீஸ் கொடுப்பார்கள்! கையை உதறிக்கொண்டு இலையை விட்டு எழுந்து கொண்டான் பத்மனாபன் என்றால், தன் யோசனை எத்தனை தூரம் அவனைச் சீண்டி விட்டிருக்கவேண்டும் என்பதை அருண் உணர்ந்து கொண்டான்.

கல்யாணியின் பார்வையில் கண்டனம் தெறித்தது. வெண்ணெய் திரளும் சமயத்தில் தாழியை உடைத்தார்கள் என்பதற்கு இதைவிடப் பொருத்தமான நிகழ்ச்சி இருக்க முடியாது. கொஞ்சத்துக்குக் கொஞ்சம் மனம் மாறினாற் போல் வந்திருப்பவனை, அருணின் பேச்சு கட்டாயம் திருப்பி விரட்டி விடத்தான் போகிறது. அவள் விழிகள் எதிர்ப்பை மட்டும் தெரிவிக்கவில்லை. ''இதுதான் நீங்கள் எனக்குச் செய்யும் உதவியா?''

என்ற பரிதாபகர மான குற்றச்சாட்டையும் வீசியது அருண்மீது.

தான் அவசரப்பட்டிருக்கக் கூடாது என்பதை அருண் புரிந்து கொண்டான்.

''அடடே! உட்காரப்பா!'' என்று நண்பனின் சட்டையைப் பிடித்திழுத்தான். ''கல்யாணி பிரமாத மாய்க் காரட் கோசுமல்லி செய்திருக்கிறாள். அதைச் சாப்பிட்டுவிட்டு அப்புறம் வேண்டுமானால் கோபப்படு,'' என்று நிலைமையை விளையாட்டாக மாற்ற முயன்றான்.

அவன் முயற்சி பலிக்கவில்லை.

இலையை விட்டு எழுந்த பத்மனாபன், கோட் ஸ்டாண்டில் மாட்டியிருந்த சட்டையை மாட்டிக் கொண்டான்.

''இவர் கிடக்கிறார். நீங்கள் உட்காருங்கள்,'' என்று பின்னாலேயே சென்ற கல்யாணி மன்றாடியதும் அவன் காதில் விழவில்லை.

''நான் யாரம்மா இந்த வீட்டில் கோபிப்பதற்கும், கொஞ்சுவதற்கும்?'' என்றான் பத்மனாபன். வேட்டியைக் களைந்தெறிந்து, பாண்ட்டில் கால்களை நுழைத்த வண்ணம். ''இரண்டு பேரும் முன்பே பேசி, திட்டமிட்டுக் கொண்டு தான் இவ்வளவு நைச்சியங்களும் நடக்கிறது என்பது தெரியாமல் உட்கார்ந்திருந்தேன் பார், அந்த முட்டாள் தனத்துக்கு என்னைச் செருப்பால் அடிக்க வேண்டும்.''

கல்யாணியின் கண்ணில் நீர் தளும்பியது. ''சத்தியமாக எனக்கொன்றும் தெரியாது. அருண் தன்பாட்டுக்கு ஏதோ சொன்னார். நீங்கள் என்ன சொன்னாலும், என்ன செய்தாலும் நான் உங்கள் பக்கம்தான்.''

''நான் வருகிறேன்,'' என்று புறப்பட்டுவிட்டான் பத்மனாபன்.

''போகாதீர்கள் என்றால் போகாதீர்கள்!'' கல்யாணி அவ்வளவு இரைந்து அதுவரை கத்தியது கிடையாது. திறந்திருந்த வாசல் வழியே அந்தச் சத்தம் பாய்ந்து, தெருவில் ஒரு கறிகாய் வண்டிக்காரனை அதிசயத்துடன் நின்று பார்க்க வைத்தது.

அடுத்த வினாடி கல்யாணி, ''அம்மா!'' என்று வயிற்றை ஒரு கையால் இறுக அமுக்கிக் கொண்டு தடாலெனத் தரையில் உட்கார்ந்து கொண்டாள்.

அருண் ஒரே எட்டில் பத்மனாபனின் குறுக்கே சென்று நின்று கொண்டான். ''பத்மனாபன்! என்னை மன்னித்துவிடு. என் தாயின்மீது ஆணையாகச் சொல் கிறேன். இந்தக் குடும்பம் மகிழ்ச்சியாக இருப்பதைக் காட்டிலும், நீங்கள் இரண்டு பேரும் ஒற்றுமையாக இருப்பதைக் காட்டிலும், எனக்கு வேண்டியது வேறெதுவும் கிடையாது. அந்த ஒற்றுமையும் மகிழ்ச்சியும் என்னால் குலைகிறதென்றால் நான் விலகிக் கொள்கிறேன். நான் இங்கே வருவதால்தான் சண்டை மூளுகிறதென்றால், மறுபடி என் தாயின் மேல் ஆணையாகச் சொல்கிறேன், இந்த வீட்டு வாசல்படியில் இனி என் நிழலாடாது. கல்யாணி நோயாளி. உனக்குத் தெரியாது, அவள் எப்படிப்பட்ட துன்பத்தை அடக்கிக் கொண்டிருக்கிறாள் என்று. அவளைக் கவனி, போதும். நான் போய் வருகிறேன்!''

வினாடி நேரமும் தயங்கித் தாமதிக்காமல் தெருவில் இறங்கி விடுவிடுவென்று புறப்பட்டான் அருண். வீதியும் மனிதர்களும் சுழன்று சுழன்று காட்சியளிக்க, காதுக்குள் ஹோவென்ற இரைச்சல்கள் கேட்க, நூறாயிரம் என்ஜின்கள் இயங்குவதுபோல மார்பு படபடக்க, தெருக் கோடியை அடைந்த பின்னரே, அவனுக்கு நிதானம் ஏற்பட்டது. லாந்தர் கம்பொன்றைப் பிடித்துக் கொண்டு நின்று பார்த்தான்.

கல்யாணியின் வீட்டுக்குள்ளிருந்து பத்மனாபன் எதிர்த்திசையில் செல்வது தெரிந்தது.

கல்யாணி வாசல் வரையில் வந்தவளாகத் தெரியவில்லை.

உள்ளேதான் இருக்கிறாளா? எப்படி இருக்கிறாள்? என்ன பண்ணுகிறாள்?

தெய்வமே! என்னைக் கொல்லு. இந்த நிமிடத்திலேயே பூமி இரண்டாகப் பிளந்து என்னை விழுங்கும்படி செய். ஆனால் கல்யாணியின் இல்லத்திலே மகிழ்ச்சியை விதை. பட்டுக் கிடக்கும் அவள் வாழ்க்கைச் செடிக்கு ஒரு சொட்டு நீர் உற்று.

திரும்பிப் போகலாமா? போய், "கல்யாணி! உனக்குத் துன்பம் விளைவிக்க நான் எண்ணவேயில்லை," என்று ஒரு வார்த்தை சொல்லிவிட்டு வரலாமா?

வேண்டாம். அருண் பல்லைக் கடித்துக் கொண்டு நேரே நடந்தான். என் கால்களில் சனி குடி கொண்டிருக்கிறான். அது மிதிக்கும் இடங்களில் கோபம், துயரம், தாளாத மன வருத்தம் இவைதான் விளையும். நான் விலகுகிறேன். அவனுக்கும் அவளுக்கும் இடையே ஆயிரம் அந்தரங்கங்கள் இருக்கும். பிரம்மச்சாரியான எனக்குத் தெரியாது அதெல்லாம். நான் குறுக்கிடாமல் இருந்தாலே எல்லாம் நல்லபடியாகும்...

பஸ்ஸொன்று அவனுக்காகவே வந்த மாதிரி உரசிக் கொண்டு நின்றது. நிமிர்ந்து பார்த்தான். நுங்கம்பாக்கம் செல்லும் பஸ்தான்.

**டி**ங்ச்சரின் நெடி நாசியைத் துளைத்தது, அருண் ராஜரத்தினத்தின் அறையில் நுழையும் போது.

தினசரி பங்களாவுக்கே வந்து கைக்கு மருந்து போட்டுக் கட்டுப் போட்டு விட்டுப்போக ஒரு

கம்பவுண்டர் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தார். அன்றைய வேலையை முடித்துக்கொண்டு திரும்பவிருந்த அவர், "எனக்கு நஷ்டம் ஏற்படுத்துறீங்க," என்றார் புன்சிரிப்புடன்.

"என்ன?" என்று புருவத்தை உயர்த்தி வினவினார், ராஜரத்தினம் திகைப்புடன்.

"இன்னும் ஒரு இருபது நாளாவது நான் வந்து போகும்படியா இருக்குமென்று நினைச்சிருந்தேன். ரொம்ப சீக்கிரமாய் ஆறிட்டு வருதுங்களே? இன்னும் நாலு நாள் கட்டுப் போட்டால் போதும்," என்று கம்பவுண்டர் விளக்கிவிட்டு, அருகில், கவுன் நுனியால் மூக்கைப் பொத்திக்கொண்டு நின்றிருந்த லல்லியின் கன்னத்தில் செல்லமாகக் கிள்ளினார்.

"எல்லாம் இதன் மேலுள்ள பிரியம்தான் காரணம்," என்று சொல்வது போல லல்லியை அருகே இழுத்துக் கொண்டு, கட்டுப் போடாத மறு கையினால் அதன் தலையை வருடலானார் ராஜரத்தினம்.

"என்ன, நன்றாய்த் தேவலையா?" என்று விசாரித்த படி உள்ளே நுழையும் அருணுக்குத் தலையாட்டிப் பதில் கொடுத்துவிட்டுக் கம்பவுண்டர் வெளியேறினார்.

"உட்கார்," என்று படுக்கையைத் தட்டிக் காட்டினார் ராஜரத்தினம்.

அருண் உட்கார்ந்து கொண்டான் மௌனமாக. மடிமீது ஏறியமர ஓடி வந்த குழந்தையை மெல்ல முதுகில் தட்டி, "தோட்டத்துக்குப் போய் விளையாடிக் கொண்டிரு. மருந்து நாற்றம்... ஹூம்!" என்று சொல்லி அனுப்பி வைத்தான்.

"காலேஜுக்குப் போகலாம் என்றிருக்கிறேன்," என்று தானும் எழுந்து கொண்டான் சற்றைக்கெல்லாம். தனக்குச் சம்பந்தமில்லாத ஒரு சூழ்நிலையில் ஏன் சிக்கிக் கொண்டோம் என்பதை எண்ண எண்ண

அவனுக்கே புதிராயிருந்தது. யார் இந்த ராஜரத்தினம்? யார் இந்தக் குழந்தை! மூர்த்தியும் மாயாவும் எதற்காக நம் வாழ்க்கையில் குறுக்கிட வேண்டும்! இந்தப் பெயர்கள் கொண்ட நபர்கள் உலகத்திலே பிறந்திருப்ப தாகவே தெரியாத ஒரு காலத்தில் வாழ்க்கை எவ்வளவு நிம்மதியாகவும் குழப்பமில்லாமலும் சென்று கொண் டிருந்தது! அந்தக் காலம் திரும்ப வரக்கூடாதா மறுபடி?

எல்லாவற்றையும் முறித்துக்கொண்டு அறுத்துக் கொண்டு ஓடிவிட வேண்டும் போல ஒரு துடிப்பு அருணை ஆட்டுவித்தது.

ராஜரத்தினம் தொண்டையைக் கனைத்து, கையை ஆட்டி விசாரித்தார். அவர் அதிகம் சிரமப்படத் தேவை யிருக்கவில்லை. தன் மனத்தில் எது அடைந்து கிடக் கிறதோ அதைத்தான் அவர் வினவினார் என்று அருண் புரிந்து கொண்டான்: ''பத்மனாபன் விஷயம் என்ன ஆயிற்று?''

பத்மனாபன்! அருணின் குழப்பம் இன்னும் அதிகரித்தது. அவனுடைய பிரச்சினை, அவனுடைய தொழில் அவனோடு. நாம் அப்படியும் சொல்ல வேண்டாம். இப்படியும் சொல்ல வேண்டாம்.

''பத்மனாபனா? விசாரித்தேன். ஊரில் இல்லை யாம். வரட்டும். நான் பேசுகிறேன்,'' என்று துணிந்து ஒரு பொய்யைச் சொல்லி வைத்தான். பிறகு அவர் முகத்தைப் பார்க்கக் கூடத் துணிவின்றி, ''குளித்துவிட்டு வருகிறேன்,'' என்று கிளம்பினான்

சில்லென்ற குளிர் நீரை ஷவர்பாத் அவன் மீது தெளித்தபோது, உடம்பில் அழுக்கை மட்டுமல்லாமல் உள்ளத்தின் கசப்பையும் நீக்கினாற்போல் இருந்தது. ஆடை மாற்றிக் கொண்டு பலகாரம் அருந்தியபின்

ராஜரத்தினத்திடம் சொல்லிக்கொண்டு கல்லூரிக்குப் புறப்படலாம் என்று அவர் அறைக்குத் திரும்பினான்.

ஜன்னலருகே, தோட்டத்தைப் பார்த்தபடி அவர் நின்றிருந்தார். விசாலமான முதுகுதான் தெரிந்தது. சிம்பு வைத்து மடித்துக் கட்டப்பட்டிருந்த ஒரு கை மறைந்திருக்க, இன்னொரு கை, ஜன்னலின் கம்பியைப் பற்றிக் கொண்டிருந்தது.

தான் உள்ளே வந்த ஓசையைக்கூடக் கவனிக்க விடாமல் அவரைக் கவர்ந்திருப்பது என்ன?

அருண் முன்னே சென்று அவர் அருகில் நின்று, தோட்டத்தைக் கவனித்தான்.

குழந்தை லல்லி விளையாடிக்கொண்டிருந்தாள். அவளுடைய தோழர்கள் தோட்டக்காரனின் ஆறு வயதுப் பையனும், மூன்று வயதுப் பெண்ணும்.

குரோட்டன்ஸின் நிழலில் மூன்று குழந்தைகளும் ஒதுங்கியிருந்தன. பட்டும் கிழிசலும், செழுமையும் ஏழ்மையும், சிவப்பும் கறுப்பும், நறுமணமும் வீச்சமும் அங்கே வெளிப்படையான வித்தியாசங்களாகத் தெரிந்த போதிலும், குழந்தை உலகம் என்ற ஒன்றுக்குள் மூன்றும் ஒன்றேபோல் விளங்கின.

பெரியவனான பையன், ''சொல்லு... அப்பா! அ-ப்-பா- அப்பா!'' என்று மற்ற இரண்டிடமும் சொல்லிக் கொண்டிருந்தான்.

அவன் தங்கை உடனே ''அப்பா!'' என்றது.

லல்லி திருதிருவென்று விழித்தபடி இரண்டு பேரையும் மாறி மாறிப் பாாத்தாள்.

''நீ சொல்லு லல்லி! தெரியாது?'' என்றான் பையன். ''சரி. அம்மா. அ-ம்-மா - அம்மா! சொல்லு!''

இந்தத் தடவையும் அவன் தங்கை முந்திக் கொண்டாள்.

லல்லி இரண்டாம் முறையும், திகைப்பும் குழப்பமும் அகன்ற விழிகளில் கூத்தாட மௌனமாய் அவர்களை நோக்கினாள். இன்னும் அவளுக்கு நன்றாகப் பேச வரவில்லை. ஆனால் அந்தப் பார்வை, "அப்பாவா? அம்மாவா? அப்படியென்றால்?" என்று தெள்ளத் தெளிவாய்க் கேட்டது.

பெரிய பையன் அப்பா அம்மாவை விட்டுவிட்டு, "ஆடு மாடு" என்று சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தான்.

ராஜரத்தினம் சரேலெனத் திரும்பினார்.

அருண் திடுக்கிட்டான், கரகரவென்று நீர் வழியும் அவர் கண்களைக் கண்டு.

எல்லையற்ற அனுதாபத்துடன் அவர் தோளைப் பற்றி அழைத்து, கட்டிலில் உட்காரவைத்து, கண்களைக் கைக்குட்டையினால் துடைத்துவிட்டான்.

கொஞ்ச நேரமாக அவனுள் அடங்கியிருந்த கசப்பும், ஆத்திரமும் சீற்றமும் பல மடங்கு வேகத்துடன் மறுபடி தலைதூக்கின.

பச்சைக் குருத்து! உலகம் தெரியாத பிள்ளைப் பிராயம்! ஏழையினும் ஏழையான எந்தக் குழந்தைக்கும் கிட்டக் கூடிய சர்வசாதாரணமான பாக்கியத்தைக்கூட, தகப்பன் என்ற பாவி பறித்துக்கொண்டு விட்டான். இரக்கமற்ற கொடூர உலகம் வேடிக்கை பார்க்கிறது இத்தனை பெரிய அநீதியை. சின்னஞ்சிறு குழந்தையின் வாழ்வைச் சூறையாடியவனை எதிர்த்துப் போராட முடியவில்லை. கல்யாணி என்ற ஒரு கால் கட்டு! பத்மனாபன் என்ற ஒரு வாய்ப்பூட்டு! மாயா என்ற ஓர் இன்பத்திரை! இவர்களுக்கெல்லாம் எங்கிருந்து வந்தது உரிமை, இந்தப் பச்சிளம் குழந்தையின் பாக்கியத்தைப் பறிக்க!

''நான் உங்களிடம் சற்று முன்னால் சொன்னது பொய்! பச்சைப் பொய்!'' தன்னையும் அறியாமல் உரக்க, ஆங்காரத்துடன் பேசினான் அருண்.

ராஜரத்தினம் வியப்புடன் அவனை நோக்கினார்.

''ஆமாம்! நண்பனாயிற்றே என்பதற்காக மூடி மறைத்தேன்! மன்னியுங்கள், அந்தக் கிராதகன் மூர்த்தியின் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ள நீங்கள் துடிக்கும் துடிப்பை இப்போது நானும் அனுபவிக்கிறேன். பத்மனாபன் என் சினேகிதன் என்று சொல்லிக்கொள்ளவே வெட்கமா யிருக்கிறது! அவனுக்குத் தொழில்தான் பெரிது. அதை யொட்டிக் கிடைக்கும் அனுகூலங்கள்தான் பெரிது! கள்ளங்கபடம் அறியாத குழந்தைக்கு நீதி வழங்க வேண்டும் என்பதைத் துளியும் உணராத மரக்கட்டை அவனெல்லாம்!''

''இரு, இரு!'' என்று அவனை முதுகில் தட்டி அடக்கினார், ராஜரத்தினம். அவரது பார்வையில் மென்மை மறைந்து, பாறையின் கடினம் வெளிப்பட்டது. ''என்ன சொன்னான்?'' என்று கேட்கும் பாவனையில் அவனைப் பார்த்தார்.

''அவன் மூர்த்தியின் வழக்கை விடத்தயாராய் இல்லை! நடத்தத்தான் நடத்துவானாம்! நீங்கள் வேறு ஏதாவது தான் வழி செய்ய வேண்டும்!'' என்று படபடப்பாகக் கூறிவிட்டு வேகமாக வெளியேறினான் அருண்.

கல்லூரிக்காகப் பஸ் ஏறியபோதும் சரி, வகுப்பில் லெக்சர்களைக் கேட்டுக் கொண்டிருந்த போதும் சரி, தான் கடைசியாகச் சொன்ன வாக்கியமே அவன் செவியில் எதிரொலித்துக் கொண்டிருந்தது. அந்த வாக்கியத்தைச் சொன்ன போது, ராஜரத்தினத்தின் முகம் காட்டிய பயங்கரமான பாவம் அவன் கண்ணெதிரே

நின்று கொண்டிருந்தது. இன்னதென்று புரியாத ஒரு பீதி அவன் உள்ளத்தில் புகுந்து கொண்டது.

தான் சொன்ன வார்த்தையை அப்படியே எடுத்துக் கொண்டுவிட வேண்டாம் என்று கேட்கும் உத்தேசத்துடன் பரபரப்பாக மாலையில் திரும்பிய போது, விஷயம் முற்றிவிட்டதை உணர்ந்தான்.

பங்களாவுக்கு வெளியே இரண்டு மூன்று சைக்கிள்கள் நின்றிருந்தன.

''ஐயா எங்கே இருக்கிறார்?'' என்று வேலைக்காரனை விசாரித்தான்.

''மேலே அவர் ரூமிலே இருக்கிறார். யாரோ வந்திருக்காங்க. பேசிக்கிட்டிருக்காரு. யாரையும் அங்கே அனுப்ப வேண்டாமென்று உத்தரவு,'' என்றான் வேலைக்காரன்.

''என்னைக்கூடவா?''

''அப்பாலே எஜமான் என்னைக் கோபிப்பாருங்க,'' என்று வேலைக்காரன் கெஞ்சினான்.

ராஜரத்தினம் என்ன நோக்கத்துடன், என்ன காரியத்தில் ஈடுபட்டிருப்பார்?

அருணினால் ஊகிக்க இயலவில்லை. இருக்கை கொள்ளாதவனாக, தன் அறையின் நீள அகலத்தை அளந்து கொண்டிருந்தான்.

இரண்டு மூன்று பேர் வெளியேறும் சத்தம் கேட்டது. கிசுகிசுவென்று பேச்சுக் குரல்கள்.

வெளியே பார்த்தான்.

நான்கு பேர், அட்டகாசமாகக் கைவீசியபடி தோட்டத்தின் வழியே நடந்துபோய், வெளியே நிறுத்தப்பட்டிருந்த சைக்கிள்களில் ஏறிக்கொண்டு திசைக்கொருவராகப் பிரிந்தார்கள்.

அருண் அவர்களைக் கவனித்தது, இரண்டு நிமிடக் காலம்தான் இருக்கும்.

அவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதைக் கணக்கிட அந்த நேரம் போதுமானதாய் இருந்தது. அவர்களுடைய உடை, கிராப்பு வாரியிருந்த விதம், மீசை, பட்டையான பெல்ட் முதலியன எள்ளளவு சந்தேகமுமின்றித் தெரிவித்தன-

எந்தப் பாதகத்துக்கும் துணிந்த ஒன்றாம் நம்பர் ரௌடிகள் என்று.

# 18

உண்மை ராஜரத்தினத்தை அவ்வளவு ரகசியமாக வந்து சந்தித்துவிட்டு, அவ்வளவு ரகசியமாகத் திரும்பிப் போகிறவர்கள் யாராயிருக்க முடியும்?

யோசிக்க யோசிக்க அருணுக்குக் குழப்பம்தான் மேலிட்டது.

வந்தவர்கள், எந்தப் பாதகப் பட்டியலிலும் இடம் பெறக்கூடிய ரௌடிகள் என்பதிலோ, அவர்களால் ராஜ ரத்தினத்துக்கு ஆகக்கூடிய காரியம் நல்லதாக இருக்க முடியாது என்பதிலோ அவனுக்கு எள்ளத்தனை சந்தேகமும் எழவில்லை.

ஆனால் ராஜரத்தினம் அப்படிப்பட்ட நபர்தானா? அவருடைய செல்வமும் சுகபோகங்களும் ஒருவேளை தீய இடங்களிலிருந்து திரட்டியவைதானோ?

அருண் உள்ளே சென்று பார்த்தான்.

சிகரெட்டைப் பற்றவைத்துக்கொண்டு அறையின் நடுவே உலவிக் கொண்டிருந்தார் ராஜரத்தினம். அவருடைய முகத்தில் ஆழம் காண முடியாத தீர்மானங்களின் அறிகுறிகள் படிந்திருந்தன.

கட்டிலில் குழந்தை லல்லி, கண்ணயர்ந்திருந்தாள்.

நடுநடுவே நின்று அதைப் பார்ப்பதும், வேதனை யுடன் முகத்தைச் சுளிப்பதுமாக ராஜரத்தினம் தன் உணர்ச்சிகளுடன் போராடுவதை அருண் நன்கு காண முடிந்தது.

அவனுடைய உள்ளத்தின் அடித்தளத்தில் புழுப் போல நெளிந்து கொண்டிருந்த ஒரு சிறு சந்தேகம், வரவரப் பெரிதாகி, பயங்கர நாகசர்ப்பமாகப் பட மெடுத்து ஆடியது.

ராஜரத்தினத்தின் மன உறுதி அவனுக்குத் தெரிந்தது தான். பிடிவாதம், முன்கோபம், அவமானப்படும்போது துடித்தெழும் ரோஷ உணர்ச்சி எல்லாவற்றிலும் கொஞ்சம் கொஞ்சம் அருண் கண்டிருந்தான் இந்தக் குறுகிய காலத்துக்குள்.

செல்வத்தாலும், செல்வாக்காலும் எதையும் சாதித்து விட முடியும் என்று செம்மாந்திருந்த அவருக்கு, பத்மனாபனின் மறுப்பு நிச்சயம் ஓர் அடிதான்.

அந்த அடியைத் தாங்க முடியாமல், பழிக்குப் பழி வாங்க அவர் திட்டமிட்டுக் கொண்டிருப்பாரோ? ரௌடிகளையும் போக்கிரிகளையும் அமர்த்துவது பத்மனாபனுக்கு ஒரு 'பாடம்' கற்பிக்கத்தானோ?

அருணின் உடம்பு ஒரு நடுக்கம் நடுங்கி நின்றது. மறு வினாடி விடு விடுவென்று வாசலுக்கு விரைந்தான்; பார்த்தான்.

காச நோய்க்காரனின் தொண்டையைப்போல, அடைசலும், சத்தமுமாக இருந்தது வீதி. ஆனால், அந்த ரௌடிகள் போன இடம் தெரியவில்லை.

வாசல் காப்போனிடம் எச்சரிக்கையாக, ''இப்போது போனார்களே, அவர்கள் இதற்கு முன் பங்களாவுக்கு வந்தது உண்டா?'' என்று விசாரித்தான்.

''இல்லை, சார். இப்பத்தான் முதல் தடவையாய் வர்றாங்க,'' என்ற காவல்காரன் இன்னொரு தகவலும் தந்தான். "அவங்க வருவாங்க, உடனெ உள்ளே அனுப்புன்னு எஜமான் முன்னாலேயே சொல்லியிருந்தாரு.''

யோசனையுடன் திரும்பினான் அருண். தமது அறை வாசலுக்கு வெளியே வந்திருந்த ராஜரத்தினம், ''நீ இன்னும் தூங்கப் போகவில்லை?'' என்று சாடை காட்டிக் கேட்டார்.

அவரது கண்களைக் கூர்ந்து நோக்கினான் அருண்.

குழந்தையின் மென்மையும் அதிலே தெரிந்தது; கொலைகாரனின் கடினமும் அதே இடத்தில் தென் பட்டது.

''இதோ போய்க் கொண்டுதான் இருக்கிறேன்,'' என்று பதிலளித்துவிட்டுத் தன் அறைக்குத் திரும்பிய அருண் வெகு நெரம் தூங்கவில்லை.

மறுநாள் அவன் எழுந்திருந்தபோது ஒரு திட்டத் துடன் இருந்தான்.

வித்தியாசமான எதையும் கவனித்திராதவன் போல வழக்கப்படி குளித்து உடுத்தி, லல்லியுடனும் ராஜரத்தினத் துடனும் பலகாரம் அருந்திவிட்டு, ''கல்லூரிக்குப் போகிறேன்,'' என்று புறப்பட்டான், புத்தகங்களுடன்.

ஸ்டியரிங்கைப் திருப்புகிற மாதிரி கையால் சாடை காட்டி, புருவத்தை உயர்த்தினார் ராஜரத்தினம்.

''காரா? வேண்டாம். நிறைய நேரம் இருக்கிறது. பஸ்ஸிலேயே போய்க் கொள்கிறேன்,'' என்று தெரிவித்து விட்டு அருண் கிளம்பினான்.

தெருக்கோடியில் ஒரு வெற்றிலைப் பாக்குக் கடை யோரமாக நின்று கொண்டான்.

அவன் ஊகித்திருந்தான் - எப்படியும் தான் கல்லூரிக்குப் போன பிறகு ராஜரத்தினம் தன் 'தோழர்' களைச் சந்திப்பார் என்று.

ஆனால் கிட்டத்தட்ட அறுபது நிமிடங்களுக்கு அவன் ஊகம் பலிக்கவில்லை. மணி பதினொன்றைத் தாண்டி விட்டதால், வகுப்புக்கள் ஆரம்பமாகிவிட்ட பள்ளிக்கூடம் போலத் தெரு கம்மென்று அடங்கி விட்டது. வெய்யில், வாகனங்கள், காற்று, கட்டிடங்கள், நிழல்கள் - எல்லாவற்றிலுமே ஓர் அமைதியும் ஆழமும் குடியேறின. பற்ற வைத்த அடுப்புப் போல மண்ணில் சூடு அதிகரித்தது.

திடுமென அவனைத் தாண்டிக் கொண்டு ஒரு டாக்ஸி பறந்தது.

அவன் நினைத்ததேபோல, ராஜரத்தினத்தின் பங்களா வாசலில் நின்றது. முந்தின நாள் பார்த்த நபர்களில் ஒருவனும், அவனுடைய கூட்டாளி போன்று தோன்றிய வேறு இரண்டு பேர்களும் இறங்கி உள்ளே சென்றார்கள் உரிமையோடு. டாக்ஸி 'வெயிட்டிங்' போட்டு, காத்து நின்றது.

அடுத்த கட்டத்தை அருண் யோசித்து வைத்திருக்க வில்லை.

பங்களாவுக்குள் தானும் நுழைந்து அவர்கள் சம்பாஷணையை ஒட்டுக் கேட்பதா? இல்லை, திரும்பிய பிறகு அவர்களைப் பின்தொடர்ந்து சென்று கண் காணிப்பதா?

அவன் ஒரு முடிவுக்கு வருவதற்குள் உள்ளே போனவர்கள் திரும்பிவிட்டார்கள்.

மூன்று பேருக்கும் தலைவன் போலத் தோன்றியவன், டாக்ஸிக்குள் உட்கார்ந்து கொண்டு, கையைப் பிரித்து,

கரென்ஸி நோட்டுக்களை எணணுவது நன்றாய்த் தெரிந்தது அருணுக்கு.

கூலிக்கு முன்பணமும் வாங்கிவிட்டார்களா!

அருணைப் பழையபடி தாண்டிக் கொண்டு டாக்ஸி பறந்தபிறகே அருண் விழித்துக் கொண்டான்.

அவன் பரபரத்த வேகத்துக்கு எந்த டாக்ஸியும் கிடைக்கவில்லை என்றாலும் சில நிமிடங்கள் கழித்துக் கிடைத்தது.

''முன்னே போகிறது பார் ஒரு டாக்ஸி! அதைப் பின் தொடர்ந்து செல்!'' என்று அவசரமாகக் கட்டளை யிட்டான்.

இரண்டுக்கும் இடையில் இரண்டு பர்லாங்கு தூரம் இருந்தது. ஆயினும் அருண் பிடித்த டாக்ஸி ஏமாளியல்ல. வெகு விரைவாக முன்னதை எட்டத் தொடங்கியது.

இரண்டு வண்டிகளும் மவுண்ட் ரோடை நெருங்கின.

நிச்சயமாகப் பத்மனாபனின் புதிய அலுவலகத் தருகே முதல் வண்டி நிற்கப் போகிறதென்று அருண் எதிர்பார்த்தான்.

ஏன் நிற்கவில்லை? தயங்கக்கூடத் தயங்காமல் போய்விட்டதே?

அருண் திகைத்துக் கொண்டிருந்த போது, அவனுடைய டாக்ஸி நின்றது.

''ஏன்? ஏன்?'' என்று துடித்தான் அருண்.

''சிக்னல் சார்,'' என்று டாக்ஸியோட்டியிடம் இருந்து பதில் வந்தது.

மூன்று பஸ்கள், ஏழெட்டுக் கார்கள், ஏராளமான சைக்கிள்கள் ஆகியவற்றுக்கு அனுமதி கொடுத்தான பிறகு, போக்குவரத்துக் கான்ஸ்டபிளின் கை இறங்கியது.

முந்தின வண்டி எந்தத் திசையில் திரும்பியதோ! சுவடுகூடத் தெரியவில்லை.

"எங்கே சார் போகட்டும்?" என்று டாக்ஸியோட்டி வினவினான், காரை நேரே செலுத்திய வண்ணம்.

பாதை சென்டிரல் ஸ்டேஷனை நோக்கிச் சென்றது.

"சென்டிரலிலே நிறுத்து," என்று சலிப்புடன் பதிலளித்தான் அருண்.

தான் பின்தொடர்வதைக் கண்டு கொண்டு போக்குக் காட்டியிருப்பார்களோ என்று கூட அவன் சந்தேகப் பட்டான். ஆனால் அப்படி எண்ண இடமில்லை.

அலை அலையாக வந்த மனிதக் கூட்டமும் வண்டி களும் அவனை ஓரத்துக்குத் தள்ளின. இந்த நேரத்துக்கு சென்டிரலில் ரயில் ஏதும் கிடையாது. ஏதோ ஒன்று லேட் போலும்.

"ஏன்ரி அருண் ஸ்வாமி!"

உரிமையோடு கூப்பிட்டு, உரிமையோடு அவன் முதுகிலும் தட்டினார்கள் யாரோ.

குரலைக் கேட்டதுமே "அண்ணா!" என்று மகிழ்ச்சி யுடன் திரும்பினான் அருண்.

ஆமாம். பெங்களூர் ராம்கிஷண் தான், கையிலே ஒரு சிறு தோல் பையுடன் வந்து கொண்டிருந்தார். பிரயாணக் களைப்பை அவரது உடையும் தலையும் நன்கு காட்டின.

"நான் கொடுத்த தந்தி கிடைக்காது என்று நினைத்தேனே! கிடைத்ததா என்ன? ரொம்ப லேட்டாய்த் தான் கொடுத்தேன்," என்றவர், கழுத்தைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டார். "உஸ்! என்ன வெய்யில், என்ன வெய்யில் இங்கே! உன் அண்ணி இருக்கிறாள் என்பதைத் தவிர, மற்றபடி பெங்களூரின் சுகம் எங்கேயும் வராது!"

தான் பழைய ஜாகையைக் கலைத்து விட்டதைத் தெரிவித்த அருண், ''தற்செயலாய்த்தான் இங்கே வந்தேன். ஏது இப்படி திடீர் விஜயம் உங்களுக்கு?''

''பிஸினஸ். வைர வியாபாரம்.''

அருண் திகைத்தான்.

''நிஜமாகவா? அவ்வளவு பெரிய கவர்மென்ட் வேலையை விட்டுவிட்டு, வைர பிஸினஸிலா இறங்கினீர்கள்?''

ராம்கிஷண் கடகடவென்று சிரித்து, ''பயப்படாதே. சும்மா சொன்னேன். உன் அண்ணிக்காக ஒரு நல்ல வைரத் தோடும் மூக்குத்தியும் வாங்க வேண்டுமென்று ரொம்ப நாளாய்த் திட்டம். இங்கே ஒரு சினேகிதரிடம் சொல்லி வைத்திருந்தேன். அவர் கடிதம் போட்டிருந்தார். ஒரு நல்ல 'ஸெகண்ட ஹாண்ட' செட் வந்திருக்கிறதாம். முடைக்காக விற்கிறார்களாம். சரி, நேரில் பார்த்து, திருப்தியாயிருந்தால் வாங்கிவிடலாம் என்று பணத்தோடு புறப்பட்டு வருவதாக அவருக்கு ஒரு தந்தி, உனக்கு ஒரு தந்தி கொடுத்துவிட்டுக் கிளம்பினேன்.''

ஆட்டோ ரிக்ஷா ஒன்று அவர்களை உராய்ந்தாற் போல் வந்து நிற்கவே, ஏறிக்கொண்டார்கள் இருவரும்.

''மயிலாப்பூர்,'' என்று கட்டளையிட்டார் ராம்கிஷண்.

அவருடைய நண்பர், மாபெரும் சம்சாரி என்பதை, ஆட்டோவை முற்றுகையிட்ட பட்டாளத்திலிருந்தே கண்டுகொண்டான் அருண்.

''எனக்குக் குடும்ப நண்பர்கள் அவர்கள். இதோ – டேய் சீச்சு! கீழே இறங்கு! மாமா தோள் மீதெல்லாம் ஏறக்கூடாது! – இதோ வந்து விடுவார்கள்'' என்று ராம்கிஷணின் நண்பர் சொல்லிக் கொண்டிருந்தபோது வாசலில் நிழலாடியது.

''இதோ வந்துவிட்டார்களே! வாருங்கள்!'' என்று அவர் வாசலுக்குச் சென்றார் வரவேற்க.

அருண் திகைத்தே போனான்.

''வாம்மா மாயா,'' என்று அழைத்தார் ராம்கிஷணின் சினேகிதர். ''வாருங்கள் அம்மா!'' இது அவள் தாயாருக்கு. ''டேய்! மாமி புடவையை விடுடா கழுதை!'' இது தம்முடைய வாரிசுகளின் ஒன்றுக்கு.

வீட்டுப் பெண்மணிகளில் ஒருத்தி, வந்த பெண் மணிகள் இருவரையும் உள்ளே அழைத்துச் சென்றாள்.

அருண் கவனித்தவாறிருந்தான்.

அவளது கண்களின் அடியிலே படர்ந்திருந்த கருமை அவளுடைய சோகத்தைக் காட்டிற்று. அருணுக்கும் தனக்குமுள்ள உறவையெல்லாம் எண்ணியோ என்னவோ அதிலே திகிலும் எட்டிப் பார்த்தது.

கையில் சிறு அட்டைப் பெட்டியுடன் திரும்பி வந்து ராம்கிஷணின் எதிரில் அமர்ந்தார் நண்பர். ''அவர்கள் குடும்பத்துக்கு இப்போது ரொம்ப சோதனை காலம். இரண்டு கையாலும் சம்பாதித்துக் கொண்டிருந் தான் பெரிய பையன் ஒருத்தன். என்ன போறாத வேளை, போங்கள் - டீ! நீ அந்தண்டை போகமாட்டாய்? இந்தா, உன்னைத்தானே? இவளை உள்ளே கூப்பிட்டுக் கொள்! - அந்தப் பிள்ளை இப்போது ஜெயிலில் இருக்கிறான்.''

''அடப் பாவமே!'' என்றார் ராம்கிஷண்.

''தகப்பனார் ஒரு எடுப்பார் கைப்பிள்ளை. எல்லாம் போனது போகட்டும் போ என்கிறார். அப்படி இருக்க முடியுமா? அவன் கேசுக்காகத்தான் இதையெல்லாம் விற்கிறார்கள்.'' அவர் பெட்டியைத் திறந்து ராம்கிஷணிடம் நீட்டினார். வைரக் கம்மலும்

மூக்குத்தியும் பளபளத்தன. நல்ல, பெரிய தோடு. கனமான ஒற்றைக் கல் மூக்குத்தி.

''அருமையான பழைய கட்டிடம். வாங்கிப் பாருங்கள்!'' என்றார் நண்பர்.

ராம்கிஷண் பார்த்தார். பிறகு வாசல் பக்கத்து வெளிச்சத்துக்கும் எடுத்துச் சென்று, வேட்டி நுனியால் ஒரு முறை துடைத்துவிட்டு நோட்டம் விட்டார். அவர் முகம் திருப்தியால் மலர்வதையும், அதைக் கண்டு அறைக்கு வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் மாயாவின் முகத்தில் மகிழ்ச்சி பரவுவதையும் அருண் கவனித்தான்.

''எனக்கென்ன தெரியும் வைரத்தைப் பற்றி! நீங்கள் சொன்னால் சரி,'' என்றார் நண்பரிடம்.

''அதெல்லாம் நான் காரண்டி. இரண்டாயிரத் தைந்நூறு சொன்னார்கள். ஒரு இருநூற்றைம்பது குறைக்கும்படி சொல்லியிருக்கிறேன். தாராளமாய்த் தகும்.''

ராம்கிஷண், பெட்டியை அருணிடம் கொடுத்தார். ''உனக்குப் பிடித்திருக்கிறதா அருண்? நீ சரி என்று சொன்னால்தான் வாங்கப் போகிறேன்.''

''நானா!'' என்று திகைத்தான் அருண்.

''ஆமாம்! நாளைக்கு உன் அண்ணி ஏதாவது முணு முணுத்தால் உன் பெயரைச் சொல்லித் தப்பலாம். ஆகவே நீ 'ஓகே' கொடு முதலில்!''

கண்ணிமைக்கும் நேரத்துக்கு அருண் நிமிர்ந்து மாயாவை நோக்கினான். அவள் மௌனமாக வெளிப் படுத்துவது கெஞ்சலா? பரிதாபமான வேண்டுகோளா?

அதே மாதிரியான இன்னொரு பார்வை அவனுக்கு நொடியில் நினைவு வந்தது.

கல்யாணி.

சிறு சிறு திவலைகளாகச் சொட்டி, கடைசியில் ஊரையே அழிக்கும் பிரளயம் போல, ஒவ்வொரு சிறு நிகழ்ச்சியாகச் சேர்ந்து கல்யாணியின் வாழ்வை அழிக்கின்றன. விதி அதிலேதான் முனைந்திருக்கிறது...

''வாங்குவதுதான் வாங்குகிறீர்கள். எதற்காகப் பழசு? புதிதாகவே வாங்கக் கூடாதா?'' என்றான் அருண்.

மறுபடி ஒருமுறை திருட்டுத்தனமாகப் பார்த்த போது, மாயாவின் முகத்தில் கலவரமும், ஏமாற்றமும் தாண்டவமாடுவதைக் கண்டான்.

அந்த ஒரு தண்டனையே போதுமென்று எண்ணி னானோ? அல்லது அவன் மனம் இளகிவிட்டதோ அந்தக் காட்சியில்?

''ஆனால், பழைய கம்மல். புதிதாய் வாங்கினால் இந்த மாதிரி கிடைக்காது. இல்லையா?'' என்றான் தொடர்ந்து.

''அப்படிச் சொல்லு,'' என்று உற்சாகமானார் ராம்கிஷண். ''சரி சார். நீங்கள் சொன்னால் சரிதான். முடித்து விடுங்கள்,'' என்று பையைத் திறந்து பணத்தை எண்ணலானார்.

இப்போது மாயாவின் விழியில் நன்றி பளபளத்தது.

''உன்னோடு அப்பறம் பேசிக் கொள்கிறேன்'' என்று மனதுக்குள் கறுவிக் கொண்டான் அருண்.

வியாபாரம் முடிந்து பண்டமும் பணமும் கைமாறின.

''அருண்! இவர்களைப் பத்திரமாய் ஒரு டாக்ஸியில் ஏற்றி அனுப்பிவிட்டு வா,'' என்றார் ராம்கிஷணின் சினேகிதர். ''பணத்தோடு போகிறார்கள். ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்''

ஒரு புறம் மகிழ்ச்சியும், மறுபுறம் வேதனையுமாகப் புறப்பட்டான் அருண்.

டாக்ஸி ஸ்டாண்டுக்காகக் குளத்தங்கரை வரையில் நடக்க வேண்டியிருந்தது.

மாயாவின் அம்மா அதிகம் பேசுகிறவள் அல்ல. அதிலும் ஓர் ஆண்பிள்ளை கூட வருகிறானென்ற கூச்சத்தில் புடவைத் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டு நடந்தாள் தெரு ஓரமாக.

மாயாவின் தலையில் சூடியிருந்த முல்லைச் சரத்தின் மணத்தைச் சுவாசிக்கிற அளவுக்கு நெருக்கமாக நடந்தான் அருண். உடம்பின் வாளிப்பை எடுத்துக்காட்டும் டெரிலின் காட்டன் புடவை, மெல்லக் காற்றில் அசைந்து அவன் கையில் கூடச் சில சமயம் பட்டது. தாபத்தால் கனக்கும் உள்ளத்தை அமுக்கிக்கொண்டு ''இந்தாப்பா!'' என்று கைதட்டி அழைத்தான் ஒரு டாக்ஸியை.

அந்த நீண்ட மௌனத்தை அவளால் தாள முடியவில்லை போலும். ''ரொம்ப நன்றி... சரியான சமயத்தில் கை கொடுத்தீர்கள்,'' என்றாள் ரகசியமாயும் அவசரமாயும்.

''நன்றி வேண்டாம். பத்மனாபனின் வாழ்க்கையில் இனிமேலாவது குறுக்கிடாமல் இருந்தீர்களானால் அதுவே எனக்குத் தெரிவிக்கிற பெரிய நன்றி'' என்று அருகில் அவள் தாய் வருவதற்குள் சொல்லி முடித்தான் அருண்.

''மன்னிக்க வேண்டும். அது மட்டும் என்னால் முடியாது,'' என்று நறுக்கென்று சொல்லிவிட்டு மாயா டாக்ஸியில் ஏறிக் கொண்டாள்.

அந்தப் பதிலினால் ஏற்பட்ட அதிர்ச்சி நீங்கு முன்னரே, அருணுக்கு இன்னொரு அதிர்ச்சி காத்திருந்தது, திரும்பி வந்த போது.

# 19

முகத்தில் அறைந்தாற்போல் பதில் கொடுத்துவிட்டு மாயா திரும்பிய போது, அருணுக்குத் தன்மீதுதான் அளவுகடந்த வெறுப்பும் ஆத்திரமும் ஏற்பட்டன.

எந்த நம்பிக்கையை, ஆதாரத்தைக் கொண்டு, மாயாவிடம் கெஞ்சினோம். ''பத்மனாபனின் வாழ்க்கையில் இனிமேலாவது குறுக்கிடாதே'' என்று? வயது பதினேழு தான் என்றாலும் சாகசத்திலே அவள் முப்பத்தைந்து வயதுக்காரி. அருணுக்கு எந்த இடத்திலே பலவீனம் என்பதைக் கணக்கெடுத்து வைத்துக்கொண்டு தான் சூத்திரக் கயிற்றை ஆட்டுகிறாள் அந்த மாயக்காரி.

''தூ, தூ! இந்த இடமா! சும்மா கொடுத்தால் கூட வேண்டாம்! இந்தக் கம்மலையும் மூக்குத்தியையும் வாங்காதீர்கள் அண்ணா!'' என்று ஒரே வார்த்தையில் சொல்லி, வெளியேறியிருக்கக் கூடாதா? அவளுடைய விழியிலே கெஞ்சல் தெரிந்ததாம்! பரிதாபம் புலப் பட்டதாம்!

இப்போது?

''அருண்! நீ ஒரு வடிகட்டின முட்டாளடா! அவளை விட ஆறு வயது பெரியவனல்ல! பத்து வயது சின்னவன் நீ!''

ஏமாற்றமும் எரிச்சலும் உள்ளத்தில் கனல் மூட்ட அவன் திரும்பியபோது ராம்கிஷண் வாசலில் தயாராய் நின்றிருந்தார். அருண் திகைத்தான். தன்னைக் கண்டதும் அவர் முகத்தில் எதற்காக அத்தனை பெரிய புன்னகை! ரொம்ப லாபகரமாக நகைகளைத் தட்டி விட்டோம் என்று எண்ணி மகிழ்ந்து போகிறாரோ?

''நான் போய்க் கடிதம் எழுதுகிறேன். மேற்கொண்டு கவனியுங்கள்,'' என்று தன் நண்பரிடம் விடைபெற்றுக் கொண்டார் அவர்.

''ஓ! ஜமாய்த்துவிடலாம்!'' என்று உற்சாகமாகப் பதிலளித்தார் சினேகிதர்.

''போகலாமா?'' என்றபடி ராம்கிஷண் அருணுடன் இறங்கி நடந்தார்.

தனது குழப்பத்தின் நடுவேயும், அந்தச் சம்பாஷணைக்கும் புன்னகைக்கும் பொருளென்ன என்று அருண் யோசிக்கத் தவறவில்லை. பெங்களூர் அண்ணாவுக்கு இப்படித் திடீர் திடீரென்று செலவு வெறி பிறப்பதுண்டு. கண்மண் தெரியாமல் ஏதாவது வாங்கி நிரப்பிக் கொண்டே போவார். அந்த மாதிரி, கம்மலுக்கும் மூக்குத்திக்கும் அடுத்தபடியாக வேறு என்னென்னவோ வாங்கத் திட்டமிட்டிருக்கிறார் போலும்.

''இப்போதே ஊருக்குத் திரும்பப் போகிறீர்களா அண்ணா?'' என்றான்.

''ஆமாம். எக்ஸ்பிரஸ் பஸ் இருக்குமே? வந்த காரியம் முடிந்துவிட்டது. இன்னொரு சின்ன வேலையையும் முடித்துக் கொண்டு திரும்ப வேண்டியதுதான்,'' என்றார் ராம்கிஷண்.

''என்ன அது?''

''சொல்கிறேன், பக்கத்திலே எங்கே தபாலாபீஸ் இருக்கிறது? ஒரு தந்தி கொடுக்க வேண்டும்.''

''நேரே கொண்டுபோய்க் காட்டுங்களேன், அண்ணா. 'வாங்கியாகிவிட்டது' என்று அண்ணிக்குத் தந்தி வேறே கொடுக்க வேண்டுமா? தந்தி போய்ச் சேருவதற்குள் நீங்களே போய்விடலாம்.''

''நோ, நோ! இது வேற விஷயம்,'' என்றவர், ''தபால் ஆபீஸ் வாசலில் நின்றபடியே தேடுகிறேன் பார்! வா'' என்று அருகிலேயே இருந்த அஞ்சலகத்துக்குள் நுழைந்தார்.

அருண் ஏதும் புரியாதவனாக முன்னே சென்று ஒரு தந்தி பாரம் வாங்கிவந்தான்.

ராம்கிஷண், மரப்பெஞ்சின் குறுக்காக உட்கார்ந்து கொண்டு பேனாவைத் திறந்தார்.

''நான் பார்க்கலாமா?'' என்று சற்றுக் கோபமாகவே கேட்டான் அருண். அண்ணாவின் மூடுமந்திரத்தை அவ்வளவாக ரசிக்கவில்லை.

''ஓ, ஓ! கட்டாயம்! விஷயமே உன்னைப் பற்றிய தாயிற்றே!'' என்றவர் தந்தி பாரத்தில் வாசகத்தை எழுத ஆரம்பித்தார்.

எழுதி முடித்தாரோ இல்லையோ, வெடுக்கென்று அவர் கையிலிருந்து பாரத்தை உருவினான் அருண். ''என்ன பைத்தியக்காரத்தனம் அண்ணா இது!''

''கொடு இப்படி! கொடேன்!'' என்று கெஞ்சினார் ராம்கிஷண். ''ஏண்டா, நான் இப்போது என்ன தப்பாய் எழுதிவிட்டேன் என்கிறாய்? பைத்தியக்காரத்தனம் என்ன இதிலே? எல்லாம் விசாரித்துத்தான் செய்கிறேன்! பெண் யாரென்று புரியவில்லையா உனக்கு?''

''தாராளமாய்ப் புரிகிறது!'' என்று சீறிய அருண், தந்தியை இன்னொரு முறை வாசித்துப் பார்த்தான்.

''அருணுக்கு அருமையான பெண் பார்த்திருக் கிறேன் - உடனே எல்லாரும் பெங்களூர் வரவும் - பேசித் தீர்மானம் பண்ணலாம். ராம்கிஷண்.''

தந்தி, மூத்த அண்ணாவான சிவராமுக்குக் கொடுக்கப் பட்டிருந்தது.

''நீ டாக்ஸியில் ஏற்றிவிடப் போனாயே, அப்போது என் சினேகிதரிடம் எல்லாம் விசாரித்தேன். அந்தக் குழந்தையின் முகத்தில் என்னமாய்க் கிளி கொஞ்சியது

பார்த்தாயா? என்ன அடக்க ஒடக்கம்! என்ன குடும்பப் பாசம்! பார்த்த உடனேயே தீர்மானம் பண்ணிவிட்டேன். ஏதோ போதாத காலமே தவிர, மற்றபடி நல்ல இடமாம். அந்தப் பெண் மாயாவைப் பண்ணிக் கொள்ள உனக்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டுமடா அருண்?''

''போதும் அண்ணா! நிறுத்துங்கள்!'' என்று கத்திய அருண், பின்னரே தாங்கள் இருப்பது கூட்டமான தபாலாபீசில் என்பதை உணர்ந்தான்.

''ஏன் அருண், உனக்குப் பிடிக்கவில்லையா அந்தப் பெண்ணை?''

''சும்மா இருங்களேன் அண்ணா'' என்று தமை யனின் கையைப் பிடித்துக் கொண்டு மன்றாடிய போது, அவனது நெஞ்சுக்குள் ரத்தம் வடிந்தது.

'அவளையா பிடிக்கவில்லை என்று சொல்வேன் அண்ணா! விதி மட்டும் இப்படியெல்லாம் விளையாடி யிராவிட்டால் உங்கள் யாருக்கும் சொல்லாமலேகூட அவளை என்னவளாக்கிக் கொண்டிருப்பேன்! நீதி மன்றத்தில் சந்தித்த அன்றே அவள் என் நெஞ்சில் புகுந்து, நினைவில் ஆழ்ந்தவள். காணுகின்ற காட்சி யிலும், இழுக்கின்ற மூச்சிலும், தொடுகின்ற உணர் விலும் மாயாதான் நிறைந்திருக்கிறாள். ஆனால் அதெல்லாம் கனவு! குரூரமான, பொல்லாத, நரகக் கனவு! விதியென்னும் யானை மிதித்துக் கூழாக்கி விட்ட காதல் பூ என்னுடையது!'

–இவ்வளவையும், தமையனின் தோளோடு சாய்ந்து விம்மி விம்மி வெளிப்படுத்த எண்ணினான் அருண். ஆனால் 'ஏன் அப்படி? எதனால் உன் காதல் நிறைவேறக் கூடாததாகி விட்டது?' என்று அண்ணன் கேட்பார். வெளியே சொல்ல முடியாத வெட்கக்கேடுகளை – நண்பனுக்கும் அவனுடைய மனைவியான தன்

சகோதரிக்கும் தீராத அவமானங்களை விளைவிக்கக் கூடிய அசட்டுத்தனங்களை – சொல்லவேண்டி நேரும்.

''வேண்டாமென்றால் விடுங்கள், அண்ணா!'' என்றான் வரவழைத்துக் கொண்ட முரட்டுத்தனத்துடன். ''என்னை இந்த விஷயத்தில் கட்டாயப்படுத்தினீர்களோ, நான் அப்புறம் என்ன செய்வேனென்று எனக்கே தெரியாது!''

அவனுடைய முகம் காட்டிய சினத்தைக் கண்டு ராம்கிஷன் பயந்துகூடப் போனார். ''சரி, அருண். என்னவோ எனக்கு ஆசை ஏற்பட்டது. உனக்கு இத்தனை கோபம் வருமென்று தெரியாது எனக்கு. கொடு அந்தப் பாரத்தை இப்படி,'' என்று கேட்டு வாங்கிக் கொண்டார். நிதானமாக அதை மடித்து, சுக்குச் சுக்காகக் கிழித்து நடுத்தெருவில் வீசியெறிந்தார்.

சின்னதும் பெரிதுமான காகிதத் துண்டுகள் காற்றோடு பறந்து ஓடிய போது, அருண் பித்துப் பிடித்தவன் போல அவற்றையே பார்த்துக்கொண்டு நின்றான்.

போங்கள், பொல்லாத சொப்பனங்களே, போங்கள்! என்றென்றைக்கும் நிறைவேற வழியில்லாது போய் விட்ட சுகங்களே, தொலையுங்கள், தொலையுங்கள்! கைகூடாத காதலே! குப்பையிலும் புழுதியிலும் சேர்ந்து, நீ இருந்த இடம் தெரியாமல் அழி, அழி, அழி!

**எ**க்ஸ்பிரஸ் பஸ்ஸில் அண்ணாவை ஏற்றியனுப்பி விட்டு, முடுக்கிவிட்ட பொம்மைபோலத் திரும்பி நடந்தபோது அருணின் மனத்தில் பழைய பிரச்னைகள் மேலோங்கி நின்றன.

ராஜரத்தினத்தின் ஆட்களைக் குறித்த எண்ணங்கள் மீண்டும் எழுந்தன.

பத்மனாபனுக்கு எதிரான - அவனுக்கு ஆபத்தை விளைவிக்கக்கூடிய - சதிகள் திட்டமிடப்பட்டிருக்கின்றன என்பதில் மேலும் மேலும் நிச்சயம் ஏற்பட்டது.

கூடா நட்பும், தகாத போக்கும் என்ன விளைவுகளைத் தரக்கூடுமோ அதைத்தான் பத்மனாபன் அடையப் போகிறான். ஆனால் - அவனுக்காக அல்ல. அன்பும் பண்பும் இனிமையும் நிறைந்த கல்யாணியின் கதி? அவளுக்காகவேனும் இதையெல்லாம் தடுத்து நிறுத்த வேண்டாமா? காரியம் கையை மிஞ்சிப் போன பிறகு, கண்ணீரும் கம்பலையுமாக அவள் கேட்பாளே, "அருண்! நீங்களுமா இந்த அளவுக்கு மதி கெட்டுப் போனீர்கள்?" என்று, அதற்குப் பதில் சொல்ல வேண்டாமா?

"இல்லை கல்யாணி, எனக்கு ஆயிரம் சோதனைகள், லட்சம் துயரங்கள், கோடி வேதனைகள் ஏற்படட்டும், உன் கண் முனையில் ஒரு பளபளப்பை நான் சகிக்க மாட்டேன்."

அருணின் நடை துரிதப்பட்டது. கல்யாணியைச் சந்தித்து பத்மனாபனிடம் எச்சரிக்குமாறு அவளிடமாவது சொல்லி வைப்போம் என்று அவன் பறந்தான்.

தெரு முனையை அடைந்தபோது அவன் கால்கள் தயங்கின. அவன் நின்றான்.

எந்த வீட்டின் வாசலில் தன் நிழலாடாது என்று ஆணையிட்டுவிட்டுத் திரும்பினானோ அதே வீட்டுக்குள் மீண்டும் நுழைவதா? தன் தலையீட்டினால் திரும்பத் திரும்ப அங்கே கலகங்களை நிகழ்த்துவதா?

தனக்குள் போராடியவாறு அருண் நின்றிருந்த போது, "என்ன சார், இங்கே நிற்கிறீங்க?" என்று ஒரு சிறுவனின் குரல் அவனை விளித்தது.

''முத்து! நல்ல சமயத்துக்கு வந்தாய்,'' என்று வெளிப்படையாக மகிழ்ச்சி தெரிவித்தான் அருண். அந்தப் பையனுக்கும் பத்மனாபனுக்கும் உறவு கிடையாது என்று தெரியும். இருந்தாலும் கல்யாணிக்காக உதவி செய்ய அவன் மறுக்க மாட்டான்.

அருண் அவசரமாகத் தன் பாக்கெட் டயரியை எடுத்து ஒரு காகிதத்தைக் கிழித்தான். தெரு ஓரத்தில், ஒரு வீட்டின் சுவரில் சாய்த்து வைத்துக் கொண்டு பேனாவால் எழுதினான் கிடுகிடுவென்று. ''கல்யாணிக்கு, பத்மனாபனுக்கு தீங்கு விளைவிக்கப் பலவிதமான முயற்சிகள் நடக்கின்றன. விவரம் நன்றாய்த் தெரிந்த பிறகு தெரிவிக்கிறேன். அதுவரை அவனை அதிகம் வெளியே போகாமல் இருக்கச் சொல்லு.''

கடிதத் துண்டை மடித்து, எட்டணா இனாமுடன் முத்துவின் கையில் கொடுத்தான். ''கல்யாணியம்மா இல்லை, அவங்ககிட்டே இதைக் கொடுத்துவிட்டு, பதில் வாங்கி வா. நான் இங்கேயே நிற்கிறேன். என்ன?''

''ஓ, இது ஒரு பிரமாதமா சார்? துட்டு எதுக்கு?'' என்று சொல்லிவிட்டு – ஆனால் காசை திருப்பிக் கொடுத்து விடாமல் – பையன் ஓடினான்.

அருண் பார்த்தபடியே நின்றான்.

பத்மனாபனின் வீட்டு வாசலில் முத்து நிற்பதும் கதவைத் தட்டிக் கூப்பிடுவதும் தெரிந்தது.

ஆனால் உடனே கதவு திறக்கவில்லை. கல்யாணி தூங்குகிறாளா என்ன?

முத்து, மறுபடி கொஞ்ச நேரம் தட்டினான். பிறகு, தெருப்பக்கமாக இருந்த ஜன்னலருகில் தாவியேறி உள்புறம் எட்டிப் பார்த்தான். மறுபடி வாசலுக்கு வந்து கதவைத் தட்டினான்.

பலனில்லை.

உதட்டைப் பிதுக்கிக் கொண்டு திரும்பி வந்தான் அருணிடம்.

''திறக்கமாட்டேங்கறாங்க, உள்ளே நல்லா தூங்கறாங்க போலிருக்குது,'' என்று தெரிவித்தான்.

அருணுக்குப் பதட்டம் ஏற்பட்டது. ''ஜன்னல் வழியாகப் பார்த்தாயே?''

''உள்ளே இருட்டாயிருக்குது, சார். ஒண்ணும் தெரியலை.''

அதற்கு மேல் தயங்கவோ தாமதிக்கவோ அருணால் முடியவில்லை. எத்தனை வகை சபதங்கள் கட்டுப் படுத்தியிருந்தாலும் அவற்றையெல்லாம் முறித்து அறுத்துக்கொண்டு ஓடும் வெறி அவனுக்குள் பிறந் திருந்தது.

''முத்து! நீயும் என் கூடவே வா'' என்று அந்தச் சிறுவனின் கையைப்பற்றி இழுத்துக்கொண்டு ஓடினான் கல்யாணியின் வீட்டுக்கு.

பலமுறை தட்டிப் பார்த்தான்.

குப்குப்பென்று ரத்தம் தன் மண்டைக்குள் ஓடு வதை உணர முடிந்தது. கண்ணில் எரிச்சலும், நரம்பு களில் படபடப்பும் ஏறின. கல்யாணி! உனக்கு விபரீத மாக ஏதும் நேராதிருக்க வேண்டும்! கல்யாணி! நீ என்றைக்கும் போல் சிரித்து வரவேற்று, 'எப்படி மூக்கில் வியர்த்தது உங்களுக்கு?' என்று கேட்க வேண்டும்! கல்யாணி, நீ....

''சார்! அந்தக் கம்பி இடுக்கிலே கைவிட்டுத் தாழ்ப்பாளை இழுக்க முடியுமா பாருங்க, சார்,'' என்று முத்து வழி காட்டினான்.

''நீயே பார், முத்து,'' என்று கூறி, சிறுவனின் இடுப்பைப் பிடித்துத் தூக்கி விட்டான்.

இரண்டு நிமிடத்தில் பொடக்கென்று தாள் நழுவி விழும் சத்தம் கேட்டது. உள்ளே பாய்ந்தான்.

வீட்டுக்குள்ளே குப்பையும் கூளமும் சிதறிக் கிடந்தன. எலியொன்று வேகமாக ஓடிச் சாக்கடைக்குள் நுழைந்தது. ''கல்யாணி!'' என்று கூவிக்கொண்டு உள்ளே ஓடிய அருண், நின்றான் மூச்சடைக்க.

கட்டிலில் எப்போதும் போல் படுத்திருந்தாள் கல்யாணி. அவள் ஆடைகள் அலங்கோலமாய்க் கிடக்க வில்லை. பண்பாடுள்ள குடும்பப் பெண்ணுக்கு லட்சண மாக அழகாகப் போர்த்துக் கொண்டு அமைதியாகக் கிடந்தாள் அவள்.

''கல்யாணி!''

அவள் – அவள் –

இல்லை. கல்யாணிக்கு ஒன்றும் நேரவில்லை. கடவுளே! நீ எங்கேயோ இருக்கிறாய். நியாயமும் நீதியும் தர்மமும் உலகத்திலே மக்கி, மண்ணாகிவிடாமல் பாதுகாத்துக் கொண்டு இருக்கத்தான் இருக்கிறாய்.

''கல்யாணி'' அவள் தோளைப் பிடித்து உசுப்பினான் அருண்.

மிகப் பலவீனமாக, வெகு ஆழமான பாழும் கிணற்றி லிருந்து வருவதுபோல் அவள் முனகிக் கண் விழித்தாள்.

''ஆம்புலன்ஸுக்குப் போன் பண்ணுங்கள். நான் உடனே ஆஸ்பத்திரிக்குப் போயாகவேண்டும். அம்மா! எத்தனை ரத்தம்! அருண், என்னால் தாள முடியவில்லை அருண்! தாள முடியவில்லை!'' என்றாள்.

முதல் முறையாக அவள் விம்மி விம்மி அழுவதை அருண் கண்டான்.

# 20

பச்சிளங் குழந்தைபோல் சக்தியற்றுப் பலவீன மாகக் கிடந்த கல்யாணியின் நிலை, அருணைத் துடி துடிக்கச் செய்தது. ஆனால் அவள் விம்மி விம்மி அழுததும், அவனுக்குத் துயரம் விலகி, சினம் மூண்டது உள்ளத்தில். அவளை இந்த நிலைக்குக் கொண்டு வந்த பத்மனாபன், அவன் கண்ணை மறைத்திருக்கும் மாயா, அவளை ஆட்டிப் படைக்கும் மூர்த்தி, இவ்வளவு பேரையும் படைத்துவிட்ட இறைவன் - ஒருவர் பாக்கியில்லாமல் அருணின் ஆத்திரம் சீறிப் பாய்ந்தது.

மெல்ல முதுகில் கைகொடுத்து. எழுப்பி உட்கார்த்தி வைத்து, பரட்டையாக விரிந்து கிடந்த கேசத்தை ஒழுங்கு படுத்தி, கைக்குட்டையால் விழியின் வெளிறலைத் துடைத்துவிட்டபோது, ஆத்திரப்படுவதால் ஆகக் கூடியது எதுவும் இல்லை என்ற உண்மை புலப்பட்டது.

''கல்யாணி!'' என்று கோபத்தை வரவழைத்துக் கொண்டு அதட்டினான். ''என்ன இதெல்லாம் கலாட்டா? ஒரு பைத்தியக்காரன் மாட்டிக் கொண்டிருக்கிறான், அழ வைக்கலாம் என்று பார்க்கிறாயா?''

கல்யாணி முழங்காலில் தலையை முட்டுக் கொடுத்துக் கொண்டாள். குலுங்கிக் குலுங்கி மீண்டும் அவள் விம்மிய போது, நடுமுதுகில் கிடந்த ஒற்றைப் பின்னல் ஏறியிறங்கி இப்படியும் அப்படியும் புரண்டு துடித்தது. ''இல்லை, அருண்! சத்தியமாக எனக்கு ஏதோ நேர்ந்துவிட்டது. சொன்னபடி செய்யுங்கள். நான் உடனே ஆஸ்பத்திரியில் சேர்ந்தாக வேண்டும்.''

''ஆமாம்! சேர்ந்தாக வேண்டும்! ஆஸ்பத்திரி எப்படி இருக்கிறதென்று பார்த்ததில்லையானால், இல்லை

யென்று சொல்லேன். 'ஒரு ஆஸ்பத்திரியைக் காட்டு அருண்' என்று கேளேன். இப்படியெல்லாம்–''

''அருண்!'' என்று அடிவயிற்றைப் பிடித்துக் கொண்டு கல்யாணி போட்ட கூச்சல் அவன் பேச்சை முறித்துப் போட்டது. சிரித்துச் சமாளித்துவிட முடியாதா என்ற அரை அசட்டு நம்பிக்கை மண்ணோடு மண்ணாக, ''இதோ வருகிறேன்,'' என்று கூறிப் பத்மனாபனின் அறைக்குப் பாய்ந்தான் அருண். டெலிபோனைப் பறித்து எடுத்து, நூற்றொன்றைத் சுழற்றி அவசர அவசரமாகச் செய்தி தெரிவித்தபின், திரும்பி ஓடி வந்தான் கல்யாணியிடம். ''இதோ வந்துவிடும். நீ எழுந்திரு,'' என்றான்.

''கொஞ்சம் அந்தக் கண்ணாடியையும் சீப்பையும் எடுங்கள். இவ்வளவு கோரமாக எப்படி வெளியே கிளம்புவது?'' என்று மெலிந்த குரலில் அவள் சொன்னது அருணுக்குத் தெம்பூட்டியது. ''ஆமாம், கல்யாணி! இப்படியே போனால் டாக்டர்கள் அத்தனை பேரும் அலறி அடித்துக் கொண்டு போய்விடுவார்கள். அப்புறம் நான்தான் உனக்கு வைத்தியம் செய்யவேண்டும்!'' என்று சொல்லி, அவள் கேட்டவற்றை எடுத்துக் கொடுத்தான். அடுப்பின்மீது வெதவெதவென்றிருந்த வெந்நீரையும், கொடியில் உலர்ந்திருந்த டவலையும் பெற்றுக்கொண்ட கல்யாணி, முகத்தை ஈரத்துணியினால் துடைத்துக் கொண்டாள். ரத்தம் வற்றியிருந்த கன்னங்கள் சோகைப் பளபளப்பினால் மின்னின. முந்திய நாள் போட்டிருந்த தாம்பூலத்தின் சிவப்பு, வெடித்திருந்த அதரங்களில் பாளம் பாளமாக நின்றிருந்தது.

''கல்யாணி! உனக்கு என்ன உடம்பு என்று என்னிடம் தான் சொல்லவில்லை இத்தனை நாளும். பத்மனாபனுக் காவது தெரியுமா தெரியாதா?'' – குங்குமச் சிமிழை எடுத்துத் தந்தவாறு அருண் கேட்டான்.

அகலமாகப் பொட்டிட்டுக் கொண்டாள் கல்யாணி. வட்டத்தில் பிசிறில்லாமல் சேலைத் தலைப்பால் துடைத்துக் கொண்டு, ''எனக்கும் டாக்டருக்கும் தெரிந்தால் போதும். ஆஸ்பத்திரியில் என்னைச் சேர்ப்பித்த பிறகு, லேடி டாக்டரை – அதோ அலமாரியில், பாட்டிலின் கீழே மருந்துச் சீட்டு இருக்கிறது பாருங்கள். அதில் விலாசமும் டெலிபோன் நம்பரும் இருக்கிறது – கூப்பிட்டு, தகவல் தெரிவித்துவிடுங்கள்,'' என்றாள்.

அவள் பேசுகையிலேயே மூச்சு இரைத்தது.

வாசலில் வந்து நின்ற ஆம்புலன்சிலிருந்து இருவர் ஸ்ட்ரெச்சருடன் இறங்கி வருவதைக் கண்டான் அருண். பயங்கரமான கண்ணராவியாக இருந்தது அந்தக் காட்சி.

''கல்யாணி... உனக்கு..'' என்று அவன் திணற, அவள் மெல்ல படுக்கையில் எழுந்து உட்கார்ந்துகொண்டு, ''அதெல்லாம் வேண்டாம். நான் மெதுவாய் நடந்தே வந்து ஏறிக் கொள்கிறேன்,'' என்று தள்ளாடியவாறு சுவரைப் பிடித்துக் கொண்டு நடந்து வந்தாள்.

ஸ்ட்ரெச்சருடன் வந்தவர்களுக்குச் சிறிது ஏமாற்றம், கொஞ்சம் கோபம். ''ஆம்புலன்ஸ் தேவைப்படுகிறவர்கள் ரொம்பப் பேர் இருக்கிறார்கள், அம்மா. நீங்களெல்லாம் டாக்ஸியில்–''

அதிகப்படி முயற்சியினால் கல்யாணி நிலைதடுமாறுவதைக் கண்டதும் ஆஸ்பத்திரி சிப்பந்தியின் கண்டனம் நின்று விட்டது. சட்டென முன்னே வந்து இருவரும் ஆளுக்கொரு பக்கமாகப் பிடித்துக்கொண்டு வண்டியில் ஏற்றிக் கொண்டார்கள்.

சரசரவென்று சன்னல்களையும் கதவுகளையும் சாத்திய அருண் வாசலைப் பூட்டிக்கொண்டு தானும் ஏறிக்கொண்டான். அந்த அவசரத்தின் நடுவே, லேடி டாக்டரின் சீட்டை எடுத்துக் கொள்ளத் தவறவில்லை.

வண்டியினுள் ஏறியமர்ந்தான். ''கல்யாணி! பத்மனாபனுக்குச் சேதி சொல்ல வேண்டுமே? கல்யாணி! கல்யாணி!''

''உஸ்!'' என்று அவனைத் தடுத்தார் உள்ளேயிருந்த ஆம்புலன்ஸ் ஊழியர். ''ரொம்பப் பலவீனம். மயக்கமாய் இருக்கிறார்: தொந்தரவு செய்யாதீர்கள்,'' என்று கூறி விட்டு கல்யாணியின் நாடியைப் பிடித்துப் பார்த்தார்.

மூடியிருந்த கண்களைத் திகிலுடன் பார்த்தவாறு இருந்தான் அருண். விழிக்கடையில் ஏனோ ஒரு நீர்முத்து பளபளத்துக்கொண்டிருந்தது. விரலினால் அதைச் சுண்டி யெறிந்துவிட்டு, நாடி பார்க்கும் ஊழியரின் முகத்தைக் கவலையுடன் நோக்கினான்.

''ஏன் சார், இவ்வளவு பலவீனமாக ஆகிற வரையில் சும்மா இருக்கலாமா?'' என்று கடிந்து கொண்டார் சிப்பந்தி.

அவரிடம் விளக்க இது நேரமில்லை. சமயத்தில் கவனித்திருக்க வேண்டிய பாவி நானல்ல, இவளைத் தொட்டுத் தாலி கட்டிய துரோகி தன் கடமையைச் செய்யத் தவறிவிட்டான் என்றெல்லாம் தெரிவிக்க இது இடமும் அல்ல, சந்தர்ப்பமும் அல்ல.

தலையைக் குனிந்து கொண்டு உட்கார்ந்திருந்தாலும், கல்யாணியின் நெற்றிப் பொட்டு, அந்தக் குங்கும வட்டம், அவன் பார்வையின் நடு மையத்தில் இருந்தது.

கல்யாணி! குங்குமத்தின் மங்களத்தை எண்ணி மகிழட்டுமா? அல்லது அதன் சிவப்பு வண்ணத்தைக் கருதிக் கலங்கட்டுமா?

அருண் இருக்கை கொள்ளாமல் தவித்துக் கொண்டிருந்தான்.

ஆஸ்பத்திரியில் கல்யாணியை மேலோடு பார்த்த வுடனேயே எமர்ஜென்ஸி வார்டுக்கு இட்டுச்சென்று விட்டார்கள்.

பையிலிருந்த மருந்துச் சீட்டை எடுத்து, கல்யாணியின் வாடிக்கை டாக்டருடைய டெலிபோன் எண்ணை அறிந்து கொண்டான் அருண். அவரைக் கூப்பிட்டுத் தகவலைத் தெரிவித்தான்.

''ஹூம்! மூன்று மாதத்துக்கு முன்பே சொன்னேன், ஒரு ஆபரேஷன் செய்து கொண்டு விடு என்று. அவள் கேட்கவில்லை. கடுமையான குடல் கட்டி இது. ஆபரேஷன்தான் சரி. ஆஸ்பத்திரியில் ஏற்பாடு செய் வார்கள். நானும் எனக்குத் தெரிந்த டாக்டர்களிடம் சொல்லி வைக்கிறேன். கவலைப்படாதீர்கள் மிஸ்டர் பத்மனாபன்,'' என்றார் அந்த அம்மாள்.

துணுக்கென்ற உணர்வுடன் டெலிபோனை வைத்தான் அருண்.

கவலைப்படாதீர்கள் மிஸ்டர் பத்மனாபன்!

ஆத்திரம் மிகுந்த சிரிப்பு வெடித்தது அவன் இதயத்தின் அடியிலிருந்து.

'மிஸ்டர் பத்மனாபன் கவலைப்படாமல்தான் இருக்கிறான், டாக்டர்! கவலைப்படாமல், ஹாய்யாக, ஆனந்தமாக, குஷாலாக, தன் அருமைக் காதலியுடன் சுகபோகமாகத்தான் இருக்கிறான்!'

கல்யாணியைக் கொண்டுசென்ற வார்டின் புறத்தி லிருந்து நர்ஸ் ஒருத்தி வந்து கொண்டிருந்தாள். ஆவ லுடன் எழுந்து சென்ற அருண், ''எப்படி இருக்கிறது, இப்போது அட்மிட் ஆன பேஷண்டுக்கு?'' என்று பரபரப்பாய் வினவினான்.

''யார், கல்யாணி என்ற பெண்ணா?'' இதற்கும் அடுத்த வாக்கியத்துக்கும் இடையே ஏற்பட்ட தாமதம் அரை வினாடிக்கும் கம்மிதான் என்றாலும் அருணுக்கு மூச்சுத் திணறிவிட்டது. ''எமர்ஜென்ஸி ஆபரேஷன் செய்ய வேண்டுமென்று பேசிக் கொண்டார்கள். நீங்கள் நினைக்கிற மாதிரி அவ்வளவு சட்டுப் புட்டென்று சொல்லக்கூடிய கேஸ் இல்லை இது. வீட்டுக்குப் போய்விட்டு நாளைக் காலையில் வரலாம்,'' என்று கூறிவிட்டுப் போய்விட்டாள் அந்த நர்ஸ்.

முள்மீது நின்ற மாதிரி சில நிமிடங்கள் தவித்த பிறகு, கல்யாணியை அனுமதிப்பதற்காகப் பதிவு செய்துகொண்ட குமாஸ்தாவிடம் சென்றான் அருண். பத்மனாபனின் டெலிபோன் நம்பரையும், ராஜரத்தி னத்தின் முகவரியையும் குறித்துக் கொள்ளும்படி கூறி, ''ஏதாவது அவசரமானால் உடனே செய்தி அனுப்புங்கள்,'' என்று கேட்டுக்கொண்ட பிறகு ஆஸ்பத்திரிக்கு வெளியே வந்தான்.

எத்தனைக்கெத்தனை அவன் இதயம் இரும்புக் குண்டாய்க் கனத்ததோ அத்தனைக்கத்தனை உலகம் காற்றாடியென பளுவற்றுப் பறந்தது. சந்தோஷமா யிருப்பவர்களைக் கண்டு வயிறெரியும் அற்பத்தனம் தனக்கு ஏற்பட்டுவிட்டதைக் கருதி அருண் வெட்கிக் கறுகிப் போனான். மூளையை ஒருமுறை கடினமாக உசுப்பிக் கொண்டபின், அடுத்தாற்போல் செய்யவேண்டிய கடமை நினைவு வந்தது.

இவ்வளவு சீரியஸாக விஷயம் முற்றிய பிறகு பத்மனாபனிடம் தெரிவிக்காமல் இருக்கக் கூடாது. எங்கேயிருந்தாலும் அவனைத் தேடிப் பிடித்து, செய்தியையும் சொல்லி, பொறுப்பையும் அவனிடம் ஒப்படைத்துவிட வேண்டும்.

கீழேயிருந்த ரொட்டிக் கடையில் விசாரித்தபோது, மத்தியானம் ஒரு பெண் வந்து அவரை அவசரமாக அழைத்துச் சென்றாள் என்று சொன்னார்கள். 'பெண்' என்று சொல்லும்போது ரொட்டிக் கடைக்காரனின் உதட்டில் குறும்புத்தனமான சிரிப்பு தவழ்ந்தது. ''வக்கீலய்யாவை அடிக்கடி பார்க்க வருகிற பெண்தான்,'' என்று அவன் மேலும் தெரிவித்தபோது அருணுக்கிருந்த கொஞ்ச நஞ்ச சந்தேகமும் அகன்றுவிட்டது.

*மாயா!*

வெறுப்புடன் அருண் உதட்டைக் கடித்துக் கொண்டான். தயக்கம் அவன் கால்களை ஒரு நிமிடம் கட்டுப்படுத்தியது. அடுத்த நிமிடம் அதை வென்றவனாக, பூந்தமல்லி ஹை ரோட்டுக்குச் செல்ல இன்னொரு ஆட்டோவைப் பிடித்தான்.

இருட்டிவிட்ட நேரத்தில் பரபரப்பாக நுழைந்த அவனை முதலில் திகைப்புடனும், பிறகு மகிழ்ச்சியுடனும் வரவேற்றாள் மாயாவின் அன்னை. முதல் சந்திப்பின்போது இருந்த கூச்சம் சிறிது குறைந்து, ''வாருங்கள், வாருங்கள்! என்ன விசேஷம்? அந்தத் தோடு விஷயத்தில் ஏதாவது...'' என்று விசாரித்தாள். ஒரு வேளை, அவர்கள் திருப்தி இல்லை என்று கொடுத்துவிட்டுப் பணத்தைத் திருப்பி வாங்கிக் கொண்டு போக அருண் வந்திருப்பானோ என்ற கவலை அவள் குரலில் தென்பட்டது. அதே சமயம், தோடு விற்பனையையும் பற்றி அவள் தாராளமாகவும் இரைந்தும் பேசியதிலிருந்து மாயாவின் அப்பா வீட்டில் இல்லை என்றும் தெரிந்து கொண்டான் அருண்.

"உங்கள் பெண் மாயாவிடம் ஒரு ஐந்து நிமிஷம் பேச வேண்டியிருக்கிறது. தயவு பண்ணிக் கூப்பிடுகிறீர்களா?" என்று சொல்லிவிட்டு, பிரம்பு நாற்காலியில் அமர்ந்தான்.

''இதோ,'' என்று சொல்லி விரைந்தாளே தவிர, அம்மாவின் வேண்டுகோளைப் பெண் பூர்த்தி செய்யத் தயாராயில்லை.

உள் அறையிலிருந்து கிசுகிசுவென்றும் உரத்தும் வந்த பலத்த வாதங்கள் அவன் செவியை மோதின.

''முடியாது அம்மா! நான் அவரைப் பார்க்கத் தயாராயில்லை,'' என்று மறுத்துக் கொண்டிருந்தாள் மாயா.

''என்னடி பெண்ணே இது? நமக்கு எத்தனை உபகாரம் பண்ணினவர்கள் அவர்கள்? நம்மலை அவர்கள் விற்பனைக்கு எடுத்துக் கொள்ளாவிட்டால்-''

''அது விற்பனையே ஆகியிருக்காதாக்கும்? போ அம்மா சரிதான்!'' என்று சீறினாள் மாயா. ''இதோ வந்திருக்கிறாரே, இந்த மனிதர், மூர்த்தி அண்ணாவுக்கு பரம விரோதி. அவனை ஜெயிலிலேயே அடைத்து வைத்திருக்க வேண்டும் என்று ஒற்றைக் காலில் நிற்பவர். வக்கீல் பத்மனாபனிடம், அண்ணா கேசையே எடுத்துக் கொள்ளாதே, ஐயாயிரம் ரூபாய் தருகிறேன் என்றாராம்! பத்மனாபனே சொன்னார்! அப்படிப் பட்டவரின் முகத்தில் நான் விழிக்கத் தயாராயில்லை!''

மாயாவின் அம்மா கையைப் பிசைந்து கொண்டு வெளியே வந்தாள். ''அவளுக்கு... என்னவோ தலை வலியாம்... படுத்திருக்கிறாள்...'' என்று திணறிய திணறலில், பொய்ச் சொல்லிப் பழக்கமில்லை என்பது திட்டமாய்த் தெரிந்தது.

அருண் நாற்காலிமீது காலைச் சப்பணமிட்டுக் கொண்டு சாய்ந்து அமர்ந்து கொண்டான். ''நானும் கேட்டுக்கொண்டுதான் இருந்தேன், அம்மா. உங்கள் பெண்ணுக்குத் தலைவலி சரியாகிற வரையில் நான்

இந்தண்டை அந்தண்டை நகரப் போவதில்லை. அவளிடம் சொல்லிவிடுங்கள்!'' என்றான் உறுதியாக.

மறுவினாடி, கதவைப் படீரென்று திறந்துகொண்டு மாயா வெளியே வந்தாள்.

''ஆண்பிள்ளை இல்லாத வீட்டில் பெண்களோடு வம்பு செய்ய உங்களுக்கு வெட்கமாயில்லை? என்ன வேண்டும் உங்களுக்கு?'' என்று அவள் கனல் உமிழ்ந்ததைக் கண்டு அருண் பின்னடைந்துவிடவில்லை.

''பத்மனாபன் எங்கே போயிருக்கிறான் என்று மட்டும் சொன்னீர்களானால் போதும். உடனே அவனை அவசரமாகப் பார்க்க வேண்டியிருக்கிறது,'' என்றான் அமைதியாக.

''ஓகோ!'' என்று மாயா இடுப்பில் கை வைத்துக் கொண்டு உறுமினாள். ''ஏன்? அவரை மறுபடி பார்த்துப் பேசி மனதைக் கலைக்கத்தானே? மூர்த்தி அண்ணாவுக்காக வாதாட விடாமல் தடுக்கத்தானே?''

''தூ! நீயும் உன் மூர்த்தியும்!'' என்று காறித் துப்பினான் அருண், அடக்கமாட்டாத ஆங்காரத்துடன். ''மூர்த்தி ஜெயிலில்தான் இருக்கட்டும், வெளியேதான் வரட்டும், சுடுகாட்டுக்குத்தான் போகட்டும்! அதற்காக இங்கே வரவில்லை நான். பத்மனாபனின் ம...—''

நெஞ்சை அடைத்துக் கொண்டு நின்றது சொல்.

பத்மனாபனின் மனைவியைப் பற்றி இவளுக்குத் தெரியுமா, தெரியாதா?

இப்போது சொன்னால் நம்புவாளா, மாட்டாளா?

நம்பினால், பத்மனாபனின் இருப்பிடத்தைச் சொல்வாளா? அல்லது, அசூயையுடன் மறைப்பாளா?

குழம்பி நின்றான் அருண்.

# 21

ஒரே நிமிடத்தில் அருண் முடிவுக்கு வந்தான்.

கல்யாணியைப் பற்றி இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்வது எந்த விதத்திலும் புத்திசாலித்தனமாகாது. அதைக் கல்யாணி விரும்ப மாட்டாள்; பத்மனாபன் வெறுப்பான்; மாயா நம்பமாட்டாள்.

'உன் காதலன் ஏற்கனவே கல்யாணமானவன்' என்ற கசப்பான உண்மையை வேறு எவரேனும், வேறு எந்தச் சந்தர்ப்பத்திலேனும் வெளிப்படுத்தட்டும். நமக்கு வேண்டாம் அந்தப் பொறுப்பு.

''தயவு பண்ணி நான் சொல்வதை அமைதியாக, படபடக்காமல் கேளுங்கள்,'' என்று மாயாவிடம் மன்றாடினான். ''பத்மனாபனுக்கு வேண்டிய ஒருவர், ஆஸ்பத்திரியில் மரணப் படுக்கையாகக் கிடக்கிறார். உடனே பத்மனாபனை அங்கே அழைத்துப் போக வேண்டும். அவன் வீட்டிலும் இல்லை. ஆபீசிலும் இல்லை. எங்கே போயிருப்பான் என்று உங்கள் ஒருத்தருக்குத்தான்...''

''பத்மனாபன் எங்கள் வக்கீலே தவிர... வேறு இல்லை,'' என்று சட்டென்று மறுத்தாள் மாயா. அப்படி மறுக்கும்போதே, பத்மனாபனுக்கும் தனக்கும் உள்ள நெருக்கத்தை அருண் உணர்ந்திருப்பதோடு வாய்விட்டும் சொன்னதில் ஏற்பட்ட மகிழ்ச்சி அவள் விழியில் தெரிந்தது.

''சரி, வக்கீல் என்ற முறையில்தான் சொல்லுங் களேன்.''

''மாயா, இதெல்லாம் என்ன அசட்டுப் பிடிவாதம்? யாரோ உயிருக்கு ஆபத்தான நிலைமையில் இருக்கிறார்

என்று அவர் சொல்கிறாரே?'' என்று மாயாவின் தாயும் சிபாரிசுக்கு வந்தாள்.

''நீ கொஞ்சம் வாயை மூடிக்கொண்டு இரேன் அம்மா! இவர் சமாசாரம் ஒன்றுமே உனக்குத் தெரியாது!'' என்று தாயை அடக்கிவிட்டு, அருணை இரக்கமில்லாத பார்வையோடு நோக்கினாள்: ''என் அண்ணாவின் கேஸை எடுத்துக் கொள்ளாமல் தடுக்கத்தான் அவரைப் பார்க்க வேண்டுமென்கிறீர்கள் என்கிறேன்,'' என்றாள் மீண்டும்.

''கடவுளே, கடவுளே!'' என்று தலையில் அடித்துக் கொண்டான் அருண் ஆங்காரத்துடன். ''சத்தியமாகச் சொல்கிறேன்! உங்கள் அண்ணன் வழிக்கு நான் போக வில்லை!''

''வாக்குக் கொடுக்கிறீர்களா, மூர்த்தி அண்ணாவுக்கு எதிராக எதுவும் செய்ய மாட்டேனென்று?''

''கொடுக்கிறேன். மாட்டேன், மாட்டேன்!''

''சரி, என்ன வேண்டுமென்கிறீர்கள்?''

''பத்மனாபனை எங்கே பார்க்கலாம் என்று மட்டும் சொல்லுங்கள்.''

''சுப்ரீம் கோர்ட் லாயர் சேஷாசலத்தின் வீடு தெரியுமா?''

''கோபாலபுரம்?''

''அதே. தோடு விற்ற பணம் அவருக்காகத்தான். அவருடைய பீஸைக் கொடுத்து, ஏற்பாடு செய்துவிட்டு வரத்தான் போயிருக்கிறார்.''

''நன்றி.'' நெருப்புக் கட்டியை வீசியெறிந்த மாதிரி வந்தனத்தைத் தெரிவித்துவிட்டு, தெருவுக்குப் பாய்ந்தான் அருண்.

ஒரு முறை திரும்பிப் பார்த்தபோது, மாயாவின் உதட்டில் இளநகை பூத்திருப்பதைக் காண முடிந்தது.

சும்மாவானும் பொய்த் தகவல் கொடுத்து ஏமாற்றி யிருப்பாளோ? அதை எண்ணித்தான் சிரிக்கிறாளா என்ன?

இருக்காது. அருண் புரிந்து கொண்டான். அவன் கழுத்தை நெருக்கி, மூர்த்திக்கு எதிராக எதுவும் செய்வதில்லை என்று வாக்குப் பெற்றுக்கொண்டாளே! அந்த வெற்றியின் மமதை அவளைச் சிரிக்க வைக்கிறது.

இருக்கட்டும், உன்னைக் கவனிக்க வேறொரு காலம் வரும். என் உயிருக்குயிரான கல்யாணி எமன் வாயில் சிக்கியிருக்கிற இந்த வேளையில் உன்னோடு மோத நான் தயாராயில்லை.

கோபாலபுரத்தை நோக்கி அவன் பாதை பறந்தது.

**மா**யாவின் வீட்டில் தொடுக்கப்பட்ட கேள்வி களைக் காட்டிலும் அதிகமாகவே இருந்தது, லாயர் சேஷாசலத்தின் இல்லத்தில் புறப்பட்ட வினாக்களின் எண்ணிக்கை.

முன் வெராந்தாவில் உட்கார்ந்திருந்த அரை டஜன் சிப்பந்திகளும், ''யார்? லாயரை எதற்காகப் பார்க்க வேண்டும்?'' என்று குடைந்தெடுத்தார்கள். அந்த இரவு வேளையில் கூட– அருணின் கைக்கடியாரத்தில் மணி ஒன்பதைத் தாண்டியிருந்தது - பங்களாவில் அத்தனை கூட்டம் இருந்ததைக் கண்டு சேஷாசலத்தின் பிராக்டிஸ் எக்கச்சக்கம் என்று ஊகித்துக் கொண்டான் அருண். அவ்வளவுக்கவ்வளவு இந்த இடத்தில் தகவல்கள் சேகரிப்பதும் கடினம் என்று புரிந்து கொண்டான்.

கடைசியில் ஒரு குமாஸ்தாவைத் தனியே மடக்கி அழைத்துச் சென்று, ''வக்கீல் பத்மனாபன் இங்கே வந்தாராமே? அவரைப் பார்க்கத்தான் வந்தேன். இப்போது எங்கே போயிருக்கிறார்?''என்று விசாரித்தான் - கெஞ்சினான் என்றே சொல்லலாம்.

''அடடே! அந்த சுப்ரீம் கோர்ட் அப்பீலா?'' என்றார் சற்று நல்லவரான அந்தக் குமாஸ்தா. ''ஒரு கல்யாணத்துக்காகச் சிதம்பரம் வரையிலே போயிருக்கிறார், எங்கள் லாயர். அவரை உடனே பிடித்தாகவேண்டுமென்று தானும் போய்விட்டார் பத்மனாபன்.''

அருண் திடுக்கிட்டான். ''சிதம்பரத்துக்கா?''

''சிதம்பரத்துக்கே. நான்கூட 'நாளைக் காலையிலே பெரியவர் வந்துவிடுவார். ஐயா, பொறுத்திருமேன்' என்று சொன்னேன். 'அதெல்லாம் முடியாது. நாளைக்கு நான் இங்கே கோர்ட்டில் இருந்தாக வேண்டும்' என்று சொல்லிவிட்டு ரயிலுக்கு ஓடிவிட்டார்.''

அருணின் பதற்றம் அதிகரித்தது.

''கோர்ட்டில் என்றால் எந்தக் கோர்ட்டில் இருப்பார்? என்ன கேஸ் இருக்கிறது அவருக்கு, உங்களுக்குத் தெரியுமோ?''

''அவருடைய குமாஸ்தாவுக்குத் தெரிந்திருக்க வேண்டிய விஷயம் '' என்று அருண் தலையில் ஒரு குட்டு குட்டிய திருப்தியுடன் சேஷாசலத்தின் குமாஸ்தா தகவலைத் தெரிவித்தார். ''சுப்ரீம் கோர்ட்டுக்கு அப்பீல் செய்ய இங்கே ஹைகோர்ட்டில் அனுமதி வாங்க வேண்டுமல்லவா? அது நாளைக்கு வருகிறது.''

''ஓகோ!'' என்று மோவாயைத் தடவிக் கொண்டான் அருண். மூர்த்தியின் அப்பீல் வழக்குக்கு அனுமதி என்றால் பத்மனாபனுக்கு உலக நினைப்பே இராது.

ஆனால் கல்யாணி எக்கேடு கெட்டால் என்ன என்று சொல்லும் அளவுக்கு இரக்கம் கெட்டவனாக ஆகிவிட மாட்டான்.

"வேறொன்றுமில்லையே?" என்று திரும்பலானார் சேஷாசலத்தின் குமாஸ்தா.

"ஒரே ஒரு உதவி," என்று அருண் மன்றாடினான். "பத்மனாபனின் மனைவி ரொம்ப உடம்பு சரியில் லாமல் ஆஸ்பத்திரியில் கிடக்கிறாள்..."

"அடப்பாவமே! இதை முன்னாலேயே சொல்லக் கூடாதோ?"

"நான் ஆஸ்பத்திரியில்தான் இருப்பேன். பத்மனாபன் வந்தால், உடனே அங்கே வரச் சொல்லுங்கள்."

"கட்டாயம், கட்டாயம்," என்று தலையாட்டினார் குமாஸ்தா.

விளையாடிக் கொண்டே களைத்துத் தூங்கிவிட்ட குழந்தை மாதிரி, பைக்ராப்ட்ஸ் ரோடு ஓய்ந்து கிடந்தது. பகல் நேரத்துச் சந்தடியின் மிச்ச சொச்சங்கள் மட்டும் இங்குமங்கும் தென்பட்டன.

பக்கிங்ஹாம் கால்வாயின் நெடி மூக்கைத் துளைக்க, அவன் அவசரத்தைத் தப்பாக புரிந்து கொண்ட டாக்ஸிக் காரர்களின் அழைப்புக்குப் பதில் சொல்லாமல் அருண் ஓடினான் ஆஸ்பத்திரியை நோக்கி. காலையிலிருந்து உணவருந்தாமலே அலைந்து கொண்டிருப்பதை அறியாமல், புலன்களின் கிறுகிறுப்புக்கும் தள்ளாட்டத்துக்கும் காரணம் மனம்தான் என்று அருண் எண்ணிக் கொண்டான்.

ஆஸ்பத்திரியின் தலைவாசலை மிதிக்கும் சமயத்தில் கூலித் தொழிலாளி போல் தோன்றிய ஒரு பெண்பிள்ளை, "அடியே என் செல்லம்மா! ஐயையோ என் கண்ணம்மா!"

என்று தன் வாயில் ஓங்கி ஓங்கி அறைந்து கொண்டு தலை விரிகோலமாக வெளியே ஓடுவது கண்ணில் பட்டது. 'பாவம், இருபது வயசிலே ஒரு மகள், போயிடுச்சு,' என்று ரிக்ஷாக்காரன் ஒருவன் விளக்கம் கொடுத்துக் கொண்டிருந்தான் சுற்றி நின்ற கும்பலுக்கு.

அருணுக்கு வயிற்றைப் பிசைந்தெடுத்தது இந்தக் கெட்ட சகுனம்.

பேய் பிடித்தாற்போன்ற ஆவேசத்துடன் உள்ளே நுழைந்து, அறிவிப்புகள் மாட்டப்பட்டிருக்கும் பலகையை நெருங்கி, கடகடவென்று படிக்கத் தொடங்கினான். எவ்வளவுக்கெவ்வளவு அவசரம் இருந்ததோ அவ்வளவுக் கவ்வளவு எழுத்துக்கள் தேய்ந்து தெளிவற்று மங்கின. நிதானப்படுத்திக் கொண்டு படித்தபோது–

'அபாயமான நிலையில் இருப்பவர்கள்' என்ற பட்டியலில் ஒன்றாவதாகக் கல்யாணியின் பெயர் இடம் பெற்றிருப்பது தெரிந்தது.

கைவிரல்களும், பாதங்களும் பனிக்கட்டியில் வைத்த மாதிரி உறைந்து போயின. பக்கத்திலிருந்த பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டு தலையைக் கைகளில் புதைத்துக் கொண்டான்.

இரக்கப்பட்ட ஒரு நர்ஸ் அருகில் வந்து, "யாருக்கு உடம்பு சரியில்லை?" என்று பரிவோடு கேட்டாள்.

அருண் நிமிர்ந்து பார்த்துவிட்டு நீர் தளும்பும் கண்ணினால் அவளைக் காண முடியாதவனாகத் தலையைக் குனிந்து கொண்டான். யாருக்கு உடம்பு சரியில்லை என்று சொல்வது? கல்யாணிக்கு. கல்யாணிக்கும் எனக்கும் என்ன உறவு? எந்தப் பிறவியிலே என்ன என்ன விதமான சொந்தம் ? சினேகிதன் மனைவி என்று சொல்வதா? தந்தச் சிற்பத்தை இரும்புத் துண்டம்

என்று சொல்கிற மாதிரி, உண்மைக்கு வெகு அப்பாலுள்ள உறவு அது.

'மனம் அமைதியிழந்து இருக்கும்போது எத்தனை நேரம் முடியுமோ அத்தனை நேரம் 'ராம் ராம்' என்று ஜபம் பண்ணு,' என்று அருணின் தாத்தா ஒருவர் அடிக்கடி சொல்வதுண்டு. அதை முயன்று பார்த்தான். ஜபம் செய்வதற்கும் ஒரு மன அமைதி வேண்டும். அதற்கு எங்கே போவது?

அவன் பக்கத்தில் ஒரு பாட்டியம்மாள் வந்து உட்கார்ந்து கொண்டாள். "ஏண்டாப்பா குழந்தை, என் பேத்தி உள்ளே ரொம்பக் கிடக்கிறாளாம். ஒத்தராவது உள்ளே விடமாட்டேனென்கிறார்களே? என்ன செய்யலாம்?" என்று யோசனை கேட்டவள், அருணின் முகத்தைப் பார்த்ததும், "ஐயோ பாவம், உனக்கு உன் கவலை போலேயிருக்கு," என்று அனுதாபத்துடன் சொல்லிவிட்டு அந்தண்டை போய்விட்டாள்.

நர்ஸ்களின் மெல்லிய காலடியோசை தவிர, வேறெதுவும் கேட்காதபடி இரவின் ஆட்சி ஓங்கியது. மின்சார விளக்குகளைச் சுற்றி ஓடும் பூச்சிகள், காலைக் கடிக்கும் கொசுக்கள், சில்லென்று தவழ்ந்துவரும் காற்று – இவற்றுக்குத்தான் ஓய்வு இருக்கவில்லை.

பித்துக்குளித்தனமான முயற்சிகளிலும் சேட்டை களிலும் ஈடுபடலானான் அருண். 'இதோ கண்ணை மூடிக் கொண்டு நூறுவரை எண்ணுவோம். அதோ இருக்கிற சிப்பந்தி எழுந்து போயிருந்தால் என் கல்யாணிக்கு எந்த ஆபத்துமில்லை என்று அர்த்தம்' என்று நினைத்துக் கொள்வான். கண்ணைத் திறக்கும்போது அந்தச் சிப்பந்தி அங்கேயே இருப்பான். மனத்தில் திகில் அதிகரிக்கும்.

அறிவிப்புப் பலகையில் புதிய பெயர் சேர்க்கப் படும்போதோ, பழைய பெயர் நீக்கப்படும்போதோ, பார்வையை உயர்த்தவே அச்சப்படுவான். வேறு வழி யின்றி, கடைசியில் கண்ணை உயர்த்தி நோக்கும் போது, கல்யாணியின் பெயர் அப்படியே இருக்கும்.

கல்யாணி, நீ தங்கமானவள். உனக்கு எதுவும் நேரக்கூடாது. கல்யாணி, ஈ எறும்பு துடித்தாலும் உள்ளம் பதறுகிறவள் நீ. உனக்கு ஒரு கஷ்டமும் நேரக்கூடாது.

நள்ளிரவின் அமைதி, பின்னிரவின் கும்மிருட்டு, விடிகாலையின் ஓசைகள் இவற்றை அடுத்தடுத்து அனுபவித்தவனாக அருண் உட்கார்ந்திருந்தான்.

பலபலவென்று பொழுது விடிந்தது. வெய்யில் சுள்ளென்று வீசத் தொடங்கியது. அவுட் பேஷண்ட் வார்டிலும், கவுண்டர்களுக்கு முன்னாலும் பாம்பென நீண்டன பலவகை க்யூக்கள்.

தூக்கமும் இல்லாமல் விழிப்பும் இல்லாமல் மரம் போல் உட்கார்ந்திருந்த அருணை உலுக்கி எழுப்பியது ஒரு கரம்.

பத்மனாபன்.

"அருண்! கல்யாணிக்கு என்ன திடீரென்று?" என்று அவன் கேட்டபோது உடனே பதிலளிக்க முடியாமல் அருணின் நாக்கு ஒட்டி உலர்ந்திருந்தது. அறிவிப்புப் பலகையைச் சுட்டிக்காட்டினான் மௌனமாக.

பத்மனாபனின் முகத்தை ஒரு வினாடி நேரம் பீதியும் கலக்கமும் இருட்டாக்கியது. அருணின் கரத்தைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டு அசைவற்று நின்றான்.

பிறகு, ''நீ இங்கேதானே இருப்பாய்? கோர்ட்டில் ஒரு அவசர வேலை இருக்கிறது. நான் போகாமல் இருக்க முடியாது. தலையைக் காட்டிவிட்டு வந்து விடுகிறேன், என்ன?'' என்று சொல்லிவிட்டு பறந்தான், காத்திருந்த காரில்.

அருணின் ரத்தம் கொதித்துக் கொண்டிருந்ததை அவன் உணரவில்லை.

# 22

**கோர்ட்** வாசலில் மாயா கவலையுடன் நின்றிருந்தாள்.

உயர்நீதிமன்றச் சுவர்களின் செங்காவி, அவள் முழங்கையில் படிந்திருந்தது, சாய்ந்து நின்றிருந்ததால். அதைத் துடைத்துக்கொண்டவாறு பத்மனாபனிடம் விரைந்து வந்தவள், ''இன்றைக்குக் கேஸ் இருக்கிற தாமே? நீங்கள் எனக்குச் சொல்லவேயில்லையே? தற்செயலாக மார்க்கெட்டில் உங்கள் குமாஸ்தாவைப் பார்த்தேன். சொன்னார்,'' என்றாள்.

அவள் எந்த குமாஸ்தாவைக் குறிப்பிடுகிறாள் என்று பத்மனாபனுக்கு விளங்கவில்லை. பல பேர் வந்து, பல பேர் போய்விட்ட கதையெல்லாம் தெரியாது போலும். ''இது ஒரு சின்ன விஷயம். ஸ்டாம்ப் பேப்பர் வாங்குகிற மாதிரி ருடீன் சமாசாரம். நீ எதற்காக மெனக்கெட்டு வந்தாயாம்?'' என்று கடிந்து கொண்டவன், ஏமாற்றத்தால் கூம்பிவிட்ட இந்த இளவதனத்தைக் கண்டதும் மனம் இரங்கினான். ''டெல்லியில் கேஸ் எடுத்துக் கொண்டதும் உன்னையும் அழைத்துப் போகிறேன். கேஸையும் ஜயித்துக் கொண்டு, ஒரு வாரம் தங்கியிருந்து வெற்றி விழாக் கொண்டாடிவிட்டு வரலாம் என்ன?'' என்றான் கொஞ்சலாக.

மாயாவின் முகம் முற்றும் மலரவில்லை. மௌனமாக ஹைகோர்ட்டின் நீண்ட தாழ்வாரத்தில் அவன் பின்னால் நடந்தாள். சமீபகாலமாகத் தன்னை 'மறந்து' போயிருந்த நபர்கள் கூட இப்போது புன்முறுவலுடன் தலையசைத்தோ, கையைத் தூக்கியோ வணக்கம் தெரிவித்துவிட்டுப் போவதன் மர்மம் முதலில் பத்மனாபனுக்குப் புரியவில்லை. பிறகுதான், தன்னுடன் கூட வரும் அழகியின் மகிமை அது என்று புரிந்து கொண்டான். சற்று நடையில் நிதானித்து அவளை முன்னால் போக விட்டபோது, ஜாக்கெட் முதுகுப் புறத்தின் 'ப' வெட்டும், கீழ்புறத்தில் விரல்கடையகலத்துக் குழியும், பத்மனாபனின் மன உளைச்சல்களை வெகு தூரத்துக்குத் துரத்திச் செங் குத்தான வீழ்ச்சிபோல் தோளின் வழியே சரிந்து நேரே விழுந்திருந்தது நீலப்புடவை. அதன் தலைப்பில் இருந்த பல வண்ணக் குஞ்சங்கள் இடையின் அசைவுக்கேற்ப ஆடி, ஓசையின்றி ரகசியம் பேசிக் கொண்டன.

மாயா நின்று திரும்பினாள். "என்ன யோசிக்கிறீர்கள்?''

''ஒன்றுமில்லையே.''

எதை மறைக்க முயலுகிறான் என்று தெரிய வில்லையே ஒழிய, பத்மனாபன் எதையோ மறைப்பது அவளுக்குப் புரிந்துவிட்டது. முந்திய தினத்துச் சம்பவங் களும் திடீரென நினைவுக்கு வந்ததால் திகில் ஏற்பட்டது.

"உங்கள்... உங்கள் சிநேகிதர் அருண் உங்களைத் தேடினாரே? பார்த்தீர்களா?'' என்று தயக்கத்துடனும், அச்சத்துடனும் விசாரித்தாள்.

''பார்த்தேனே.''

அவன் கண்ணில் கலவரத்தையும் பேச்சில் தடு மாற்றத்தையும் கவனித்ததும் மாயாவின் பயம் அதிகரித்தது. ''ஏதாவது சொன்னாரா உங்களிடம்?''

''எதைப் பற்றி?''

அவளால் சட்டெனப் பதில் தர இயலவில்லை. 'மூர்த்தியண்ணாவின் வழக்கை எடுத்துக்கொள்ள வேண்டாமென்று அருண் சொல்லியிருப்பானோ இல்லையோ? சொல்லியிராவிட்டால் தாமாக அந்தப் பேச்சை எடுப்பானேன்?' என்று குழம்பினாள் அவள்.

''யாருக்கோ உடம்பு சரியில்லை என்று சொன்னார்.''

''ஆமாம்.''

''உங்களுக்கு ரொம்ப வேண்டியவரென்று...''

பத்மனாபன் தலையைக் குனிந்து கொண்டு சுவரைப் பிடித்தபடி நின்றான். உணர்ச்சிகளை ஒருங்கு கூட்டிக் கொள்ள, குரலைச் சமனப்படுத்திக் கொள்ள, சில வினாடிகள் பிடித்தன அவனுக்கு. ஒவ்வொரு வார்த்தையையும் உள்ளுக்குள் ஒருமுறை சொல்லிக் கொண்டு பின்னர் வெளிவிடுபவன் போல, ''ஆமாம் மாயா. எனக்கு ரொம்ப வேண்டியவர்தான். வாழ்க்கையில் நான் யாருக்கேனும் மிக அதிகமாக கடமைப்பட்டிருந் தால், அது, தற்போது படுக்கையில் கிடக்கிறாரே அவருக்குத்தான்.''

கண்ணில் நீர் துளிக்காமலே எப்படி அவ்வளவு சோகமாக பேச முடிந்தது என்று பத்மனாபனை வியப் புடன் பார்த்தாள் மாயா. பிறகு மெல்ல, ''அவ்வளவு வேண்டியவர்களானால் நீங்கள்... ஆஸ்பத்திரிக்குப் போகாமல்... இங்கே...'' என்று தயங்கினாள்.

''இது இன்னும் முக்கியமான விஷயமாயிற்றே?'' என்றான் பத்மனாபன். ஆனால் முந்திய தடவைபோல் இருதயத்திலிருந்து பிறக்காமல், உணர்ச்சி வசப்பட்டுச் சொன்னதாகவே தோன்றியது இந்த வார்த்தை.

தபாலாபீசைத் தாண்டி, பின்புறக் கட்டிடத்தின் படிகளில் அவர்கள் ஏறும்போது –

''பெரியவர் இன்று காலை டெல்லிக்குப் புறப் பட்டுவிட்டார்'' என்று ஓடிவந்து தெரிவித்தார் சுப்ரீம் கோர்ட் லாயர் சேஷாசலத்தின் ஜூனியர் ஒருவர்.

''நம்ம விஷயமாகவா?'' என்று திகைத்தான் பத்மனாபன்.

''நோ, நோ. அவர் போயிருப்பது பணிக்கர் எஸ்டேட் விஷயமாக.''ஜூனியர் அனாவசியமாக மாயாவின் பக்கம் திரும்பிச் சொன்னார்: ''இங்கே விஷயம் நல்ல படியாய் முடிந்ததும் டிரங்க் போட்டுச் சொல்லச் சொல்லியிருக்கிறார். டெல்லியில் மற்ற ஏற்பாடுகளை உடனே செய்வதாக உங்களிடம் தெரிவிக்கச் சொன்னார்.''

ஜூனியர் எதிர்பார்த்தது வீண்போகவில்லை.

கஞ்சத்தனமில்லாமல் தாராளமாக ஒரு புன்னகையை அவரிடம் வீசியெறிந்து, ''நன்றி,'' என்றாள் மாயா.

''நீ அப்படி விஸிட்டர்கள் பகுதியில் உட்கார்ந்திரு மாயா,'' என்று கூறிவிட்டு வேறு வழியில் நுழைந்தான் பத்மனாபன்.

சட்டென்று அவன் கையைப் பிடித்து இறுக்கி அழுத்தினாள் மாயா. அவள் கண்முனையில் ஈரம் பள பளத்தது. ''விஷ் யூ ஆல் லக்'' என்றாள் தொண்டையை அடைக்க.

''ஊம், ஊம்,'' என்று கூறிவிட்டு நகர்ந்தான் பத்மனாபன். மாயாவின் அந்த அந்தரங்கமான பரிவு அவனை நிலை குலையவைத்துவிட்டது. வெகு காலத்துக்கு முன்பு, முதல் கேஸுக்காக, முதல் கறுப்புக் கவுனுடன் அவன் கோர்ட்டுக்குப் புறப்பட்டபோது, இதே மாயாவைப் போல் கல்யாணி...

மழையில் நனைந்த பூனை ஈரத்தை உதறுவது போல, உடம்பைச் சிலிர்த்து நினைவுகளை உதறிவிட்டுக் கோர்ட்டுக்குகள் நுழைந்தான் பத்மனாபன்.

நெருப்புத் துண்டம் மேலே விழுந்திருந்தால் கூட அப்படித் துள்ளி எழுந்திருந்து இருக்க மாட்டான்.

ஓர் இளம் வயது நர்ஸின் கரம் அவனுக்கு அப்படி இருந்தது, அவன் தோளை அவள் மெல்லத் தட்டியதும்.

"பி. கல்யாணி என்று திருவல்லிக்கேணியிலிருந்து..."

பதறினான் அருண்: "ஆமாம், ஆமாம். அவர்களுடன் வந்தவன்தான் நான்! எப்படி இருக்கிறது அவளுக்கு?"

"என் பின்னால் வாருங்கள்," என்று சொன்ன நர்ஸ் வேறெதுவும் கூறாமல் நடந்தாள்.

பிரமை பிடித்து ஒரு வினாடி நின்று விட்ட அருண் மறுவினாடி ஒரே தாவலில் அவளை அடைந்து... "நர்ஸ்... அவளுக்கு... தயவுபண்ணிச் சொல்லுங்கள்... கல்யாணிக்கு..." என்று திணறினான் பேசத் தெரியாமல்.

அவன் குரலும் உடம்பும் நடுங்கிய நடுக்கத்தைக் கவனித்த நர்ஸ் அனுதாபத்துடன், "அடடா! என்ன, கிழவர்களைப் போல் இப்படிப் பயப்படுகிறீர்கள்? அவர்களுக்கு ஒன்றுமில்லை. தைரியமாய் வாருங்கள்" என்று அவன் முதுகில் பரிவுடன் தட்டிக் கொடுத்து மெல்ல அழைத்துச் சென்றாள்.

அருண் நிம்மதி பெற்று மேலே நோக்கிவிட்டு நடந்தான். தெய்வமே, உன் அருளினால் நல்லபடியாய் ஆபரேஷன் நடந்து முடிந்துவிட்டது போலும். அதனால் தான் கூப்பிடுகிறார்கள். அதிகம் பேசக்கூடாது என்று தடுப்பார்கள். அதனாலென்ன? ஆபரேஷன் செய்து கொண்ட நோயாளிக்கு ஓய்வு தேவை. கட்டாயம் தேவை.

இரண்டே இரண்டு வார்த்தை: பலே கல்யாணி. போதும். வேதனையுடன் புன்னகை செய்வாள். ஆமாம். பத்மனாபன் எங்கே என்று ஜாடை காட்டிக் கேட்பாள். அவனுக்குப் பாவம், அவன் அலுவல். நான் சொல்லிக் கொள்கிறேன். எல்லாம் சரியாகிவிட்டது. உலகம் எத்தனை இனிமையாயிருக்கிறது! ஹாஹாஹா! நோயாளிகள்கூட இங்கே சிரிக்கிறார்கள். கெட்டிக் காரர்கள் நிறைந்த அருமையான ஆஸ்பத்திரி. என் கல்யாணியைக் காப்பாற்றி விட்ட முதல்தர ஆஸ்பத்திரி...

அபாயமான கேஸ்கள் உள்ள அறைகள் வரிசை வரிசையாயிருந்தன. கைக்குட்டை விழுந்தால்கூடக் கேட்கும். அத்தனை நிசப்தம்.

பதினொன்றாம் நம்பர் அறையின் வாசலில் இரண்டு டாக்டர்கள் தாழ்ந்த குரலில் பேசியபடி நின்றிருந்தார்கள்.

''இவர்தான்,'' என்றாள் அருணை அழைத்து வந்த நர்ஸ். பிறகு உள்ளே போய்விட்டாள். வெள்ளை நிறத் தடுப்புப் பலகை உள்புறத்தை மறைத்துவிட்டது.

சற்று இரட்டை நாடியாகவும் குள்ளமாகவும் இருந்த டாக்டர், ''பேஷண்ட்டுக்கு நீங்கள் என்ன உறவு?'' என்று வினவினார்.

உறவா! மறந்துபோயிருந்த அழுகை வெடித்துக் கொண்டு வந்தது அருணுக்கு. அதை அடக்கிக் கொண்டு, ''நான்... அவர்கள் குடும்ப நண்பன்... அவள்... ஒன்றும் பயமில்லையே டாக்டர்?''

தன் கைகளை மெல்ல அவனிடம் இருந்து விடு வித்துக் கொண்டார் டாக்டர். ''நோ, நோ! சும்மா... இந்த மாதிரி சமயத்தில் பேஷண்ட்டின் பக்கத்தில் அவருக்கு வேண்டியவர்கள் இருந்தால் ஒரு தெம்பு இல்லையா?''

இந்த மாதிரி சமயத்தில்? அருணின் இதயம் பயங்கரமாக அடித்துக்கொண்டது. கேஸ் மோசமான

நிலைமையை அடையும் போதல்லவா, உற்றார், உறவினரைப் பக்கத்தில் இருக்கும்படி சொல்வார்கள்?

''டாக்டர்!... ஆபரேஷன்...''

''இல்லை... அதை ஒத்திப் போட்டிருக்கிறோம்... இப்போதைய தேக நிலைமையில் எமர்ஜென்ஸியாகக் கூட எதுவும் செய்ய முடியாதிருக்கிறது. உடம்பை அவ்வளவு தூரம் அந்தப் பெண் கெடுத்துக் கொண் டிருக்கிறாள்.'' டாக்டர் அவன் தோளில் மெல்லத் தட்டினார். ''உண்மையைச் சொல்லப்போனால், இன்னும் இரண்டு மணி நேரம் தாண்டினால்தான் பேஷண்ட்டைப் பற்றி எதுவுமே சொல்லலாம். அதனால்தான் உங்களை வரவழைத்தோம்.''

''டாக்டர்!''

''பக்கத்தில் உட்கார்ந்திருங்கள். அழுது கிழுது செய்யக் கூடாது. பேஷண்ட்டுக்கு நினைவு வந்தால் கூடப் பேசக் கூடாது. கடவுள் இருக்கிறார், ஆஃப்டர் ஆல் நாமெல்லாம்...''

அருண் அவரை விலக்கித் தள்ளிக் கொண்டு அறையினுள் நுழைந்தான்.

கண்மூடிக் கிடந்த கல்யாணி அவன் ரத்தத்தை உறைய வைத்தாள்.

கட்டிலுக்கருகேயிருந்த நாற்காலியை நோக்கிச் சில அடிகள் எடுத்து வைப்பதற்குள் அவனுக்குப் பிராணன் போய்த் திரும்பியது.

தூய்மையான இதயங்கள் ஒன்றையொன்று உடனுக்குடன் புரிந்து கொள்ளுமா என்ன?

கல்யாணி மெதுவே இமைகளை நகர்த்திப் பிரித்துத் தூக்கினாள். கும்மாளம் எப்போதும் குதியிடும் அந்தக் கருவிழிகள், சோகத்தில் தோய்ந்து மங்கிக் கிடந்தன.

ஓர் அசுரப் பிரயத்தனம் செய்து, உதட்டை அசைத்து, நமட்டுச் சிரிப்பொன்றை எப்படியோ வெளிப்படுத்தினாள்.

அருண் பல்லைக் கடித்துத் தன்னை அடக்கிக் கொண்டு, உற்சாகமாய் இருப்பவனைப் போலத் தலையசைத்துப் புன்னகை செய்தான்.

அவன் நெஞ்சில் உப்புக் கரித்தது.

''எஸ்?'' என்ற கேள்வியுடன் புருவத்தை உயர்த்தினார் கனம் நீதிபதி. உங்கள் வாதத்தை ஆரம்பிக்கலாமே? என்று அலுப்புடன் அனுமதி கொடுத்ததாக அதற்குப் பொருள்.

பத்மனாபன் டையை இழுத்து விட்டுக் கொண்டு, அங்கியையும் மெல்ல நீவிக் கொண்ட பிறகு எழுந்து நின்று நீதிபதிக்கு வணக்கம் தெரிவித்தான்.

எதிர் வரிசையில் அவன் பார்வை சென்றபோது மனம் சங்கடப்பட்டது. மிகச் சமீப காலம் வரையில் யாரின் கீழ் ஜூனியராகவும் அஸிஸ்டெண்ட பிராசிக்யூட்டராகவும் இருந்தானோ அதே மனிதரா!

எதிர்பார்த்ததுதான். என்றாலும் அவர் வேலையை விட்டு விலகியோ ரஜாவின் பேரிலோ சென்றிருந்து, வேறொருவர் அந்தப் பதவியில் அமர்ந்திருந்தால் பத்மனாபனின் உள்ளத்தில் இவ்வளவு பளு தெரிந்திருக்காது. ''நீயுமாயிற்று உன் வேலையுமாயிற்று!'' என்று கால் கடுதாசியை கிழித்தெறிந்துவிட்டு வந்த பின்னர் இன்றைக்குத்தான் அவரை முதன் முதலாகச் சந்திக்கிறான்.

அந்தச் சந்திப்பும் அவருடன் எதிர் வழக்காடுவதற்காகத்தான்.

''எஸ்?'' என்றார் நீதிபதி இரண்டாம் முறையாக. சிறிது பொறுமை இழந்து விட்டார் என்பதை அந்த அதட்டல் எடுத்துக் காட்டியது.

பத்மனாபன் தன்னைச் சுதாரித்துக் கொண்டு, சிறைத் தண்டனை வழங்கப்பட்டிருக்கும் மூர்த்திக்காக சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்து கொள்ளத் தாழ்மை யுடன் அனுமதி கேட்டான் - சுருக்கமாகச் சில வார்த்தைகளில்.

''என்ன பாயிண்ட்டின் மீது அனுமதி கேட்கிறீர்கள், மிஸ்டர் பத்மனாபன்'' என்று வினவினார் நீதிபதி. அவர் குரலில் சற்றே அக்கறை தொனித்தது. பத்மனாபன் தன் கட்சியை எடுத்துச் சொன்ன விமரிசைக்கு ஒரு பாராட்டுத்தான்.

சட்டத்தின் குறிப்பிட்ட பிரிவுகளைச் சுட்டிய பின்னர், வேறு நீதிமன்றங்களின் தீர்ப்புக்களையும் மேற்கோள் காட்டினான் பத்மனாபன்.

பிராசிக்யூட்டரைப் பார்த்தார் கனம் நீதிபதி. ''நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?'' என்று அந்தப் பார்வைக்குப் பொருள் கொள்ள வேண்டும். இந்த ஜட்ஜ் அதிகம் பேசுகிறவரல்ல.

பிராசிக்யூட்டர் எழுந்து கொண்டு, அப்பீலுக்கு அனுமதி மறுக்கப்படவேண்டுமென்று கேட்டுக் கொண்டார். குற்றவாளியைத் தக்கபடி விசாரித்து, தக்கபடி தண்டனை வழங்கியிருப்பதால் நியாயம் பிறழவில்லை என்று வாதாடினார் அவர்.

சட்டப் பாயிண்ட்டுகளைப் பொறுத்த மட்டில் அவருடைய வாதத்தில் வலுவில்லை என்பதை முதல் சில வாக்கியங்களிலேயே கண்டுகொண்டுவிட்டான் பத்மனாபன். நீதிபதியும் வாயைப் புறக்கையால் மூடி, அடக்கமாக ஒரு கொட்டாவியை வெளியேற்றியதைக்

கண்டதும் அவனுக்கு உற்சாகம் ஏற்பட்டுவிட்டது. வெற்றியின் சுவையை அப்போதே துய்க்கத் தொடங்கினான்.

பெருமிதத்துடன் அவன் பார்வை சுழன்ற போது, பார்வையாளர்கள் நடுவில் மாயாவின் முகம் கண்ணில் பட்டது.

கண்ணாலேயே பத்மனாபன் கேட்டான்: ''எப்படி என் விவாதம்?''

மாயாவும் கண்ணாலேயே பதிலளித்தாள்:''ஏ ஒன்.''

பத்மனாபன்: ''பார்த்துக் கொண்டேயிரு! ஊதித் தள்ளிவிடுகிறேன்!''

இந்த மோன உரையாடல் முடியவும், பிராசிக்யூட்டர் தன் பேச்சை முடித்துக் கொண்டு உட்காரவும் சரியாயிருந்தது. பத்மனாபன் அவரது முகத்தைக் கவனித்தான். நம்பிக்கையின் சாயல் துளிகூட அதில் காணப்படவில்லை.

நீதிபதி, தம் முன்னிருந்த தஸ்தாவேஜுகளையும் சட்டப் புத்தகங்களையும் புரட்டத் தொடங்கினார்.

பியூன்களும் இரண்டொரு குமாஸ்தாக்களும் கிசுகிசுத்துக் கொள்வதைத் தவிர, வேறு ஓசை இல்லாமல் இருந்தது அந்தப் பரந்த ஹால்.

எதிர்பாராத ஒரு பரபரப்பு. வாசல் பக்கத்திலிருந்த கூட்டத்தை விலக்கிக் கொண்டு ஒரு போலீஸ் அதிகாரி உள்ளே நுழைந்தார். சற்று நின்றார். பிராசிக்யூட்டர் எங்கே இருக்கிறார் என்பதைக் கண்டதும் தாமதியாமல் அவரிடம் வந்தார். குனிந்து காதோடு ஏதோ சொன்னார்.

சிரத்தையில்லாமல் செவிமடுத்துக் கொண்டிருந்த பிராசிக்யூட்டர் திடீரென்று சுறுசுறுப்புக்குள்ளாகி நிமிர்ந்து அமர்ந்தார். பத்மனாபனையும் பிறகு நீதி

பதியையும் இமைக்காமல் பார்த்தார். தாழ்ந்த குரலில் மீண்டும், வந்த அதிகாரியிடம் சந்தேகம் கேட்டுக் கொண்ட பிறகு, எழுந்து நீதிபதியை அணுகினார்.

முதலில், ஏதோ போலீஸ் ஜபர்தஸ்து என்று எரிச்சல் பட்டுக்கொண்டிருந்த பத்மனாபன், பிராசிக்யூட்டர் நீதிபதியை நெருங்கியதும் திகைத்தான். குழப்பம் அடைந்தான்.

நீதிபதி, சுவாரசியமாகவே கேட்டுக் கொண்டார் பிராசிக்யூட்டரின் செய்தியை. "ஓ! அப்படியா! அடடா!" என்ற வியப்பொலிகள் மட்டுமே மற்றவர்களின் செவிக்குக் கேட்டது.

நடையில் புதிய தெம்புடன் பிராசிக்யூட்டர் திரும்ப வந்து அமர்ந்தார் தன் இடத்தில்.

நீதிபதி, தன் மூக்குக் கண்ணாடியைக் கழற்றி, மெல்லச் சுழற்றிய வண்ணம், "மிஸ்டர் பத்மனாபன்! நீங்கள் இந்தக் கேஸில் உண்மையாகவே அக்கறை காட்டுகிறீர்களா?" என்று கேட்டார்.

என்ன கேள்வி இது! பத்மனாபன் குழப்பத்துடன், "எஸ், மை லார்ட்! கட்டாயமாக!" என்றான்.

"குற்றவாளியெனத் தண்டனை அடைந்திருக்கும் மூர்த்தி விடுதலை செய்யப்பட வேண்டும் என்று நீங்கள் கருதுகிறீர்கள்?"

"ஆமாம், மை லார்ட்."

"ஆகவே அப்பீலுக்கு அனுமதி வேண்டும் என்கிறீர்கள்?"

"ஷ்யூர், மை லார்ட்."

"அப்படியானால் உங்களுக்கு விஷயம் தெரியாது போலிருக்கிறது," என்றார் நீதிபதி, குரலைத் தணித்துக் கொண்டு.

பத்மனாபனின் முகம் சிவந்தது. ''என்ன விஷயம், மை லார்ட்?''

''நீங்கள் யாருடைய விடுதலைக்காக இங்கே பாடுபட்டுக் கொண்டிருக்கிறீர்களோ, அவர், தன் விடுதலையைத் தானே தேடிக் கொண்டுவிட்டார்!''

''என்னது?''

''ஆமாம், மிஸ்டர் பத்மனாபன்! கைதி மூர்த்தி நேற்று இரவு சென்னை ஜெயிலிலிருந்து தப்பி ஓடி விட்டான்! இன்னமும் கூட அவனை நிரபராதி என்று தாங்கள் வாதாடப் போகிறீர்களா?''

# 23

நீதிமன்றத்திலிருந்த அத்தனை பேரும் ஒரே வினாடியில் உயிர் துறந்துவிட்ட மாதிரி மரண அமைதி நிலவியது.

அந்தத் திடீர் திருப்பம் நாடக மேடையிலோ வெள்ளித் திரையிலோ நிகழக் கூடியதாக இருந்ததே தவிர, அதிகாரமும், மாண்பும் நிறைந்த ஹைகோர்ட்டில் முளைக்கக் கூடிய வேடிக்கையாகத் தோன்றவில்லை.

எந்தக் கைதியின் விடுதலைக்காக வழக்காடப்படு கிறதோ, அவன், வழக்கு தொடங்கும் வேளையில் சிறையிலிருந்து தப்பி ஓடுவதாவது!

மூளை கிர்ரென்று சுற்ற, நெற்றியில் முத்து முத்தாக வியர்க்க, பொத்தென்று தன் இருக்கையில் விழுந்தான் பத்மனாபன்.

நிசப்தம் அகன்று, கசமுசவென்ற பேச்சு எழுந்ததும், ''உஸ்!'' என்று மேஜையைத் தட்டிவிட்டு, ''நெக்ஸ்ட்!''

என்று உத்தரவிட்டார் கனம் நீதிபதி. பிரமிக்கத்தக்க ஒரு பெரிய விஷயத்தை அவ்வளவு கிண்டலாக, சாமர்த்தியமாக எடுத்து வீசியதில் அவருக்கு அளவற்ற பெருமை. அதைத் தனிமையில் கொஞ்சம் அனுபவித்து மகிழ வேண்டுமென்று எண்ணிணாரோ என்னவோ. அடுத்த அலுவலுக்கான கேஸ்களைக் குமாஸ்தாக்கள் புரட்டிக் கொண்டிருந்த நேரத்தில், தமது ஆசனத்திலிருந்து இறங்கி, மறுபுறமுள்ள சிறு அறைக்குச் சென்று, ஓய்வு நாற்காலியில் ஓய்வு எடுத்துக் கொள்ளலானார்.

நீதிபதியின் தலை மறைந்ததும், அத்தர் புட்டியின் மூடியை அகற்றியதுமே மணம் பரவுகிற மாதிரி, பேச்சுக்களும் பரவின. வெளியேறிக் கொண்டிருந்த போலீஸ் அதிகாரியிடம் மேற்கொண்டு விவரங்கள் கேட்டவாறே பின்தொடர்ந்தார்கள் சிலர். மௌனமாகப் பத்மனாபனைச் சூழ்ந்து கொண்டு நின்றனர் சிலர்.

பத்மனாபனுக்கு எதுவும் தெரியாது. அவன் இந்த உலகத்தில் இல்லை.

விழியை உயர்த்தவும் தைரியம் இல்லாமலிருந்த அவனை நிமிர்ந்து நோக்கச் செய்த குரல், அவனுடைய முன்னாள் சீனியருடயது.

''பத்மனாபன், எழுந்திரு, எழுந்திரு. கேஸென்றால் இப்படித்தான் ஆயிரம். அனுபவம் ஆக, ஆக உனக்குத் தெரியும். அடுத்த வேலையைப் பார்,'' என்று தான் ஆறுதல் கூறுவது அடுத்தவருக்குக் கேட்டுவிடாமல், மெல்லச் சொன்னார் பப்ளிக் ப்ராசிக்யூட்டர். வெற்றியின் மமதையைச் சிறிதும் காட்டிக்கொள்ளாமல், அவர் பேசிய விதம் பத்மனாபனின் உள்ளத்தில் ஓரளவு நெகிழ்வை ஏற்படுத்தியது. மெல்ல எழுந்து கொண்டான். கருப்பு அங்கியைக் களைந்து நாற்காலி மீது வைத்தான்.

பின்னால் நின்றிருந்த யாரோ ஒருவரிடம் - அவர் தனது குமாஸ்தாதானா என்றுகூடக் கவனித்துக் கொள்ளாமல் - ''பேப்பர்களையெல்லாம் கட்டி வீட்டுக்கு அனுப்பிவிடுங்கள்,'' என்று கூறிவிட்டு, நீதிமன்றத்தை விட்டு வெளியே வந்தான்.

சூழ்நிலையைப் பற்றிய சிந்தனைகள் எதுவுமின்றி, சைனா பஜாரைக் கடந்து, பாய்க் கடையைத் தாண்டி, ரயில்வே கட்டிடத்தையும் ஜெனரல் ஆஸ்பத்திரியையும் பார்த்தவாறே ஐலண்டு மைதானத்தின் விளிம்பு வழியே நடக்கலானான்.

யாரோ தன் பெயரைச் சொல்லிக் கூப்பிடுகிற மாதிரி அடிக்கடி செவியில் விழுந்தும் பத்மனாபன் திரும்பிப் பார்க்கவில்லை. கூப்பிடுவது யாராயிருக்கக் கூடும் என்று அவனுக்கு ஓரளவு புரிந்திருந்ததோ? அந்த முகத்தைச் சந்திக்க அவன் அஞ்சினானோ?

ஒரு சமயம் மாயாவே தன் அண்ணனுடன் சேர்ந்து துரோகம் இழைத்து விட்டதாகத் தோன்றியது அவனுக்கு. இன்னொரு சமயம், தப்பியோடிய கைதி தன்னையும் மாயாவையும் வஞ்சித்துவிட்டதாக எண்ணினான்.

மூர்த்தி! குறித்த நேரத்தில் வெடிக்கிற வெடிகுண்டு போல, என்ன காரியம் செய்துவிட்டான்!

அருணின் மூலமாகவும், அவ்வப்போது காதில் விழுந்த பேச்சுக்களிலிருந்தும் மூர்த்தி அப்படியொன்றும் நிரபராதியல்ல என்று அவன் அறிந்துதான் இருந்தான். வக்கீலென்ற தொழிலைக் காட்டிலும், மாயாவின் காதலன் என்ற ஸ்தானம்தான் இவ்வளவு தூரத்துக்குப் பொறுப்பேற்கும்படி செய்தது. அந்தப் பொறுப்பை வெற்றிகரமாக முடிக்கும் முன்னால் இப்படியொரு அவமானமா!

ரோஷம் தாங்காமல் குமைந்தபோது அவன் நெஞ்சு எரிந்தது. சீ! எத்தனை தீராத அவமானம்...!

''சாமி! ஆசுபத்திரிக்கு எப்படிங்க வழி?'' என்று ஒரு கிழவன் வழிமறித்துக் கேட்டான் பத்மனாபனை.

அவன் கையிலிருந்த மருந்துச் சீட்டைப் படித்து, திருவல்லிக்கேணி மருத்துவமனைக்கு வழி சொல்லி அனுப்பினான் பத்மனாபன்.

சட்டென அவன் நடை துரிதப்பட்டது.

கல்யாணி! எப்படி இருக்கிறாயோ நீ!

வேகமாக நடக்கலானான் பத்மனாபன், புதிய நினைவு வரப்பெற்றவனாக.

''கல்யாணி! நீ இட்ட சாபம்தான் என்னை இப்படி வாட்டுகிறதா?'' பத்மனாபன் உடல் விதிர்த்தான். ஆனால் கல்யாணிக்குச் சாபமிடத் தெரியாதே! நான் என்ன தவறு இழைத்திருந்தாலும் வஞ்சம் தீர்க்க அறியாதவளாயிற்றே அவள்? நட்ட நடுக் கோர்ட்டிலே இப்படி நேர வேண்டு மென்று அவளா விரும்பியிருப்பாள்? ஒரு நாளும் மாட்டாள்..

அருண் இருப்பானா இன்னும்? கல்யாணி என்ன இப்படியெல்லாம் அமளி பண்ணிவிட்டாள்? நிஜமாகவே அவளுக்கு அத்தனை கோளாறா உடம்பில்? எனக்குத் தெரியாமலா? இல்லை, என்னைக் கவர்வதற்காகக் கையாளுகிற தந்திரமா?

நூறுநூறு குழப்பங்களால் மனம் அலைபட, ஓட்டமும் நடையுமாக ஆஸ்பத்திரிக்குள் நுழைந்தான் பத்மனாபன். வெய்யிலினால் கொட்டிய வியர்வையின் ஈரத்தின் மீது சாலையின் புழுதி படிந்திருக்க, செம் பட்டையாகத் தலை பறக்க, கண்கள் சிவந்து கதகதக்க, அருண் காலையில் உட்கார்ந்திருந்த இடத்தில் இப்போது

காணாத தவிப்புடன், நர்ஸ் ஒருத்தியைப் பிடித்து, ''இங்கே இருந்தவரை... எங்கே காணோம்? கல்யாணி என்ற பேஷண்ட்டுக்கு.. .'' என்று படபடத்தான்.

பத்மனாபனின் தோற்றத்தையும் ஆவேசத்தையும் கண்டு பயந்தே போன அந்த நர்ஸ், மெல்ல நினைவு படுத்திக் கொண்டவளாக, ''அவங்களா? உள்ளே இருக்கிறாங்க. இப்படியே நேராய்ப் போங்கள்,'' என்று வழி காட்டிவிட்டு விரைந்தாள்.

சட்டென்று உள்ளே நுழைந்துவிடவில்லை பத்மனாபன்.

கதவின் திரைச் சீலையைப் பற்றியபடி, நர்ஸின் தோளுக்கு மேலாக எட்டிப் பார்த்தான்.

இன்னும் கண் திறக்காமலேதான் படுத்திருந்தாள் கல்யாணி. ரத்தச் சோகையினால் அவளுடைய சிற்ப வதனம் வெளிர் மஞ்சளாக வெளிறியிருந்ததே தவிர, வாழ்வுக்கும் சாவுக்குமாக அவள் போராடிக் கொண்டிருக்கிறாள் என்பதற்கான எந்த அவஸ்தையையும் முகம் வெளிப்படுத்தவில்லை.

சிலைகூட அருணைப்போல் அசையாமல் இருக்காது. அவன் சிரம் குனிந்திருந்தது. கைகள் இணைந்து மடியில் தங்கியிருந்தன. அவன் கண்கள் தாழ்ந்திருந்தன. மௌனமான தியானத்திலோ பிரார்த்தனையிலோ அவன் ஈடுபட்டிருப்பது போலத் தோன்றியது.

வாசலில் பத்மனாபன் வந்து நிற்பதை அவன் உணர்ந் திருக்க வேண்டும், தலையைத் திருப்பிப் பார்த்தான்.

பத்மனாபனுக்கு, அந்தப் பார்வை, தீப்பந்தத்தை எறிந்த மாதிரி இருந்தது.

அவனை வாவென்று கூப்பிடவில்லை அருண். காற்றெல்லாம் துயரமும் சோகமுமாக நிறைந்திருந்த அந்த நேரத்தில், உள்ளத்தின் பளுவைப் பகிர்ந்து கொள்ளக்கூடிய நண்பனை அவன் ஏற்கவில்லை. அழவில்லை. அணைத்துக்கொண்டு விம்மவில்லை. தோளில் சாய்ந்து தன் வேதனையைக் கொட்டவில்லை.

அடையாளம் தெரியாதவனைப் போல முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

பத்மனாபன் மெதுவே நடந்து உள்ளே வந்து, கட்டிலுக்கு இன்னொரு புறத்திலிருந்த நாற்காலியில் அமர்ந்துகொண்டான். அருணிடமிருந்து வெறுப்பின் உஷ்ணத்தைத் தவிர வேறெதுவும் வராதெனப் புரிந்து கொண்டவனாக, தள்ளி நின்றிருந்த நர்ஸை ஜாடையில் கேட்டான், ''எப்படி இருக்கிறது?'' என்று.

நர்ஸ் கைக்கடியாரத்தைப் பார்த்தாள், ''ஒன்றரை மணி நேரம் தாண்ட வேண்டும்.''

பத்மனாபனுக்கு அப்போதுதான் நிலைமையின் கடுமை உறைத்ததோ? ''கல்யாணி!'' என்று அடி இருதயத்திலிருந்து கூவியவனாக, குனிந்து அவளுடைய கைகளை அழுத்தமாகப் பற்றினான்.

நர்ஸ் முன்னே வந்து அவன் கையை விலக்கி, ''தொடாதீர்கள்,'' என்று எச்சரிக்கை செய்துவிட்டு நகர்ந்தாள்.

ஆனால், பத்மனாபனின் உணர்ச்சி நிறைந்த அழைப்பு, எந்தப் பிரிவையும் தடுத்து நிறுத்தக் கூடியதாய் இருந்தது.

கல்யாணியின் இமைகள் மெல்ல அசைந்தன. அதற்காகவே காத்திருந்த மாதிரி நோக்கியவாறிருந்த அருண் சட்டென்று ஆவலுடன் அவள் முகத்தருகே

குனிந்தான். பத்மனாபனும் எழுந்து கொண்டு அவள் தலைமாட்டில் நின்றான்.

நர்ஸ் விரைந்து வந்து பார்த்துவிட்டு, நாடியைப் பரிசோதித்த பின், அபிப்பிராயமேதும் சொல்லாமலே தன்னிடத்துக்குத் திரும்பினாள்.

மிக லேசாக அசையத் தொடங்கிய கல்யாணியின் இமைகள், மெல்லத் திறந்து கொண்டன. முழுதும் திறக்கும் முன்பே, விழி நகர்த்தி இரு பக்கமும் நிற்கும் இருவரையும் கண்டுகொண்டாள். நோயினால் வெடித்திருந்த மெல்லிய அதரத்தில் நோஞ்சலான சிரிப்பொன்று வந்துகொண்டது - உலர்ந்த ஆரஞ்சு சுளையின் மீது அமர்ந்த ஈ போல.

''கல்யாணி!'' என்று கிசுகிசுப்பான குரலில் அழைத்த வண்ணம் பத்மனாபன் குனிந்தான்.

''எங்களை - என்னைத் தெரிகிறதா?'' என்று அருண் கேட்டான்.

புன்னகை சற்றே விரிந்த மாதிரி இருந்தது. உதடுகள் அசைந்தாற்போல தோன்றின. இரண்டு பேரின் காதுகளும் அவள் வாய்க்கருகே நெருங்கின. அடுத்த கணம்-

வலுக்கட்டாயமாகத் துயரத்தைத் தள்ளிவிட்டு, ''ஹாஹாஹா'' என்று அருணும் பத்மனாபனும் சிரித்தார்கள்.

''மாடினிக்கு டிக்கெட் கிடைக்க வில்லையென்று என்னை வேடிக்கை பார்க்க வந்தீர்களா இரண்டு பேருமாய்?''- உயிர் போகும் பிரயாசையுடன் கல்யாணி சொன்னது இதுதான்.

அருண் பதிலளித்தான்.

''உன்னையும் அழைத்துக் கொண்டு போகலாமென்று வந்தோம். டிரஸ் செய்து கொள்ள எத்தனை

நேரமாகும்?'' என்று சிரித்தவாறு கேட்டான் அவன். உள்ளுக்குள் அவனை எதுவோ அச்சுறுத்திக் கொண்டிருந்தது. அருண்! வாழ்வின் கடைசி வினாடியிலே கூட என்னடா விளையாட்டு? நீ பாதி விளையாடி, பத்மனாபன் பாதி விளையாடி அவள் உயிரைக் குடித்தாயிற்று. போதுமே.... போலியான கண்ணாமூச்சியில் தான் கல்யாணி புதைபடவேண்டுமா கடைசியில்?

அவர்களுடைய சிரிப்பும், பேச்சும் நர்ஸுக்கு அதிர்ச்சியைத் தந்திருக்க வேண்டும். கவலையுடன் மீண்டும் வந்து பார்த்து, இருவரையும் விலக்கி வைத்தாள்.

கல்யாணியின் கைகள் இப்போது அசைந்தன. விரல்கள் இரண்டு புறமும் திரும்பி, கிட்டே வருமாறு அழைத்தன. அருணும் பத்மனாபனும் நெருங்கிய போது, கண்ணாலும், கையாலும் சாடை காட்டினாள் கல்யாணி.

நண்பர்கள் இருவரின் கைகளும் அவள் முன்னிலையில், அவளாலேயே பிணைக்கப்பட்டன. ''சண்டை... ஊஹூம்!'' என்று திணறினாள்.

கணத்துக்கும் குறைவான நேரம், கல்யாணியின் கட்டாயத்துக்காக பத்மனாபனின் கையைப் பிடித்துக் கொண்டிருந்த அருண், அவள் பார்வை நகர்ந்ததும் வெடுக்கென்று உதறிவிட்டான் தாளமுடியாத ஆத்திரத்துடன்.

வெடுக்கென்று கல்யாணியின் பூவுடலும் ஒருமுறை வெட்டிக்கொண்டது.

ஆஸ்பத்திரிக் கட்டிடத்தை இடித்து விழவைக்கிற மாதிரி, ''கல்யாணி!'' என்று அலறினான் பத்மனாபன்.

''கல்யாணி! கல்யாணி!'' அருண் அவள் காலை அசைத்தான். தோளை உலுக்கினான். இமையைப் பிரித்தான். தலையைக் கலைத்தான்.

நர்ஸ், அருகில் வந்து பரிசோதித்தாள்.

தூய்மையான வெள்ளைத் துணி கொண்டு, தூய்மை யானதோர் ஆன்மா இருந்த இடத்தைப் போர்த்தி, ''ஸாரி,'' என்றாள்.

முகத்தில் ஓங்கி அறைந்து கொண்டு மறுபுறம் திரும்பிய அருணை நர்ஸின் கேள்வி திகைக்க வைத்தது.

''அந்தப் பெண் வெளியிலேயே நிற்கிறதே, இப்போ தாவது உள்ளே வரச்சொல்லவா?'' என்று வினவினாள் நர்ஸ்.

''பெண்ணா? எந்தப் பெண்?''

''எனக்குத் தெரியாது. அவருக்குப் பின்னாலேயே வந்தது. அப்போ பிடித்து அறைக்கு வெளியேதான் நின்று கொண்டிருக்கிறது'' என்றாள் நர்ஸ்.

அருண் வெளியே ஓடிப் பார்த்தான்.

பேயடித்தாற்போன்ற அலங்கோலத்துடன் நிலைப் படிக்கு மறுபுறம் நின்றிருந்தாள் மாயா.

''கல்யாணி! என் கல்யாணி!''என்று கதறிக் கதறிப் புரண்டு புரண்டு பத்மனாபன் அழுவதைக் கண் கொட்டாமல் பார்த்தவாறு - ஆனால் சுழலும் மின்விசிறிக்கு அடியில் சிக்கிக் கொண்ட பஞ்சு போல உள்ளங்கால் முதல் உச்சந் தலைவரை நடுக்கமெடுக்க - சுவரில் சாய்ந்தவாறு நின்றிருந்தாள்

டாக்டருக்காகவும் மற்றச் சிப்பந்திகளுக்காகவும் அடுத்த சடங்குகளுக்காகவும் நர்ஸ் பரபரப்படைந்து கொண்டிருந்த வேளையில், அருண் ஆடாமல் அசை யாமல் மாயாவையே நோக்கினான். அவன் உதடுகள் குரூரமான புன்னகையுடன் கோணிக் கொள்ள, குடி காரனின் கொலைச் சிரிப்பு கண்ணில் தாண்டவமாடியது.

''திருப்தியாச்சா, மிஸ் மாயா?'' என்று பல்லின் இடுக்கு வழியாக உறுமினான்.

''என்ன... என்ன கேட்கிறீர்கள்?'' வெடித்து வந்து கொண்டிருந்த அழுகைக்கு அவள் புறங்கையால் அணை போட்டாள்.

''அடப்பாவமே! புரியவில்லையா? இறந்திருப்பவள் யாரென்று தெரியாதா உனக்கு? அடாடா! வெற்றி விழாக் கொண்டாடம்மா! வீட்டுக்குப் போய் விருந்து வைத்து, பால் பாயாசம் பண்ணி...''

''உஸ்! என்ன கலாட்டா இங்கே?'' என்று அவனைக் கண்டித்துவிட்டுச் சென்றார் ஒரு டாக்டர்.

ஆனால் பத்மனாபனின் ஆவேசம் அடங்கவில்லை.

''இறந்தது கல்யாணி! பத்மனாபனின் சொந்த, தாலி கட்டிய மனைவி! நீங்கள் இரண்டு பேருமாய் எமன் வாயிலே தள்ளிவிட்ட தர்மபத்தினி! போதுமா?''

இரு கைகளாலும் முகத்தைப் பொத்திக் கொண்டாள் மாயா. விம்மலையும் கேவலையும் விரட்டத் தெரியாதவளாக, குலுங்கிக் குலுங்கி அழுது கொண்டே நோயாளிகளின் மீதும் கதவுகளின் மீதும் டாக்டர்களின் மீதும் மருந்து குப்பிகளின் மீதும் வெள்ளை யூனிபாரங்களின் மீதும் ஸ்டெதாஸ்கோப்புகளின் மீதும் முட்டி மோதிக் கொண்டு தன்னை மறந்தவளாக வெறிபிடித்து ஓடினாள்.

அவள் செல்வதையே பல நிமிடங்களுக்குப் பார்த்துக் கொண்டிருந்த பின்னர் அருண் உள்ளே திரும்பினான்.

தலையைக் குனிந்து, உதட்டைக் கடித்துக் கொண்டு டாக்டர்களும் நர்சுகளும் சூழ்ந்து நிற்க, அன்னப் பறவை போல வெளுத்து, மெலிந்து, தீனமாகக் கிடக்கும் கல்யாணியின் சடலத்தின் மீது அவன் பார்வை சென்றது.

உதடுகள் லேசாய் திறந்திருக்க, கண்கள் சற்றே மூடி யிருக்க - கல்யாணி! நீ இறக்கமாட்டாய்! உன்னால் இறக்க முடியாது, எப்படி முடியும்?

கைக்குட்டையினால் வாயைப் பொத்திக் கொண்டு, தொண்டை கமறக் கமறப் பத்மனாபன் விம்மும் ஓசை பின்னணியில் வட்டமிட்டுக் கொண்டேயிருந்தது.

துக்கத்தைக் காட்டிலும் வெறுப்பும் சினமுமே அதிகமாக ஆட்டுவிக்க, மரமென்று நின்றிருந்த அருணை, திடீரென்று ஓடிவந்து கட்டிக் கொண்டான் பத்மனாபன்.

''அருண்! இப்படி செய்துவிட்டாளே பாவி! அருண்!'' என்று அலறியவனை ஆங்காரமாக அப்பால் தள்ளினான் அருண்.

''சீ! நிறுத்துடா ராஸ்கல்!'' என்று நெருப்பெனச் சீறி வெடித்தன சொற்கள் அவனிடமிருந்து. ''நாடகமா ஆடுகிறாய், செய்வதையெல்லாம் செய்துவிட்டு! கல்யாணியை - என் கல்யாணியை- இந்தக் கதிக்குக் கொண்டு வந்தவனே நீதானடா அயோக்கியா! கண்ணீர் விடுகிறான் கண்ணீர்! கல்யாணியைத் தகனம் செய்யக் கூட உனக்கு யோக்கியதையோ உரிமையோ கிடையாது! நான் செய்கிறேன் அதைத் தொட்டுத் தாலி கட்டின தோஷத்துக்காக, கூட வேண்டுமானால் சுடுகாடு வரையில் வா!''

''ப்ளீஸ்! ப்ளீஸ்! இது ஆஸ்பத்திரி,'' என்று மற்ற வர்கள் அதட்டியும் கெஞ்சியும் சமாதானப்படுத்தினார்கள் அருணை.

பத்மனாபன் விக்கித்துப் போனான்.

உயிரைக் கொடுக்கும் நண்பனாயிருந்தவன், உயிரைக் குடிக்கும் பகைவனாக மாறிவிட்ட உண்மை அப்போது தான் அவனுக்கு உறைத்தது.

# 24

தூரத்தில் எரிந்து கொண்டிருந்தது. புறப்பட்டு விட்ட ஆன்மாவுக்கு வழியனுப்பச் சென்றாற்போல் தீயின் நாக்குகள் ஆகாயத்தை நோக்கி எழும்பி எழும்பி மறைந்தன.

வாய்விட்டு அழுவதை வலுக்கட்டாயமாகத் தடுத்திருந்ததால், அருணின் கண்கள் ஜிவுஜிவுவென எரிச்சல் தந்து கொண்டிருந்தன. உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டிருந்ததால் கைகளும், கால்களும் சுரணையற்று, மரக்கட்டை போல் இயங்கின.

கிருஷ்ணாம்பேட்டை மயானத்தின் கிணற்று நீரை மொண்டு மொண்டு குளித்துக் கொண்டிருந்தான் அவன். கல்யாணியின் சிதை, அந்தி இருட்டுக்குச் சிவப்பு வண்ணம் பூசிக் கொண்டிருந்தது. வழுவழுப்பான சாம்பல் கலந்த மணல் தரை ஈரத்தினால் சொதசொதப் பேறி வழுக்கிக் கொண்டிருந்தது.

பத்மனாபனின் பக்கம் அருண் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. சோகத்தின் அழுத்தம் சற்று அகன்ற போது, கல்யாணி என்பது இனிமேல் ஓர் இனிய நினைவே யன்றி, சதையும் ரத்தமும் ஆசைகளும் ஏமாற்றங்களும் நிறைந்த உருவமல்ல என்பது உணர்வில் உறைத்த பிறகு – அவன் எல்லாச் சடங்குகளினின்றும் விலகிக் கொண்டு, எவனுக்கு உரிமையோ அவனுக்கு இடத்தைக் கொடுத்துவிட்டான்.

அவனுடனும் பத்மனாபனுடனும் சேர்ந்து படித்த வர்கள், சில வக்கீல்கள், பல ஜூனியர்கள், நாலைந்து குமாஸ்தாக்கள் ஆகியோர்கள் வந்திருந்தார்கள் கல்யாணியின் கடைசி யாத்திரையின் போது. ஆனால்

இரண்டு நண்பர்களுக்கும் இடையே எழுந்துவிட்ட பெரும் மலையை எவரும் கவனிக்கவில்லை. ஒருவரிட மிருந்து ஒருவர் விலகி நிற்பதைக்கூட, துயரத்தால் ஊமையாகியிருப்பதாகப் பொருள் செய்து கொண்டார்கள்.

"அருண், பத்மனாபனுக்கு நீதானப்பா ஆறுதலும், தைரியமும் சொல்ல வேண்டும்," என்றார் ஒரு வக்கீல், கிருஷ்ணாம்பேட்டைக்குப் போய்க் கொண்டிருந்த சமயத்தில்.

அருண் பேசாதிருந்தான்.

"பாவம், பத்மனாபன் சுயநினைவிலே இல்லை. என்னவோ கேட்டால் என்னவோ பதில் சொல்கிறான்–"

"உமக்குத் தெரிந்தது அவ்வளவுதான். கல்யாணியை விழுங்கியாகிவிட்டது. அடுத்த திட்டத்தைப் பற்றிய யோசனையில் இருக்கிறானாக்கும் அவன்!" என்று ஆத்திரத்துடன் பதிலளிக்க நினைத்தான் அருண். அசந்தர்ப்பமான வேளையில், தன்னால் ரகளை எதுவும் நிகழக்கூடாது என்பதற்காக வாயைப் பொத்திக் கொண்டான்.

ஆனாலும், "பாவம் பத்மனாபன், மனைவி மேல் உயிர்," என்று யாராவது அடிக்கடி சொல்லி அவனைக் குத்தி விட்டுக் கொண்டேயிருந்தார்கள்.

"பத்மனாபனும் பணத்தைத் தண்ணீராய்த்தான் செலவழித்தார். அந்த அம்மாளுக்குக் கொடுத்து வைக்க வில்லை" என்று சிலர் பேசிக் கொண்டிருப்பது அவன் காதில் விழுந்தது.

சட்டக்கல்லூரியில் அவர்களுக்குப் பேராசிரியராக இருந்த ஒருவர், "அருண், இனிமேல் பத்மனாபனை நீதான் கவனித்துக் கொள்ள வேண்டும். இப்படியே ஒண்டியாயிருக்கும்படி விட்டுவிடாதே. சிறு வயது...."

என்றெல்லாம் சுற்றி வளைத்து என்னென்னவோ சொன்னார். வெகு நேரம் கழித்துத்தான் அருண் புரிந்து கொண்டான் அந்தப் பேச்சின் உள்ளர்த்தத்தை. அந்தப் பேராசிரியருக்கு அரை டஜன் பெண் குழந்தைகள் என்று அந்த நாளில் மாணவர்கள் பரிகாசம் செய்தது நினைவுக்கு வந்தது. ''இரண்டாம் தாரத்தைப் பற்றி நீங்கள் கவலைப் படவேண்டாம். பத்மனாபனுக்குத் தெரியும்'' என்று அருண் மனத்துக்குள் நினைத்துக் கொண்டான்.

''செம்பை இப்படிக் கொடுங்கள்,'' என்று யாரோ அருணிடம் கைநீட்டினார்கள். சுப்ரீம் கோர்ட் லாயர் சேஷாசலத்தின் குமாஸ்தா அவர் என்று தெரிந்தது.

''ரொம்பச் சிலீரென்று இருக்கிறது தண்ணீர்,'' என்றவாறு குளிக்கத் தொடங்கியவர், ''பத்மனாபனுக்கு இப்படி ஒரே நாளில் இரண்டு ஷாக் ஏற்பட்டிருக்க வேண்டாம்,'' என்றார்.

யாருடைய பேச்சிலும் கவனம் செலுத்தாமலேயே இருந்து வந்த அருண், இப்போது சிறிது திகைப்புடன், ''இரண்டு ஷாக்கா? என்ன இரண்டு?'' என்று கேட்டான்.

''கேஸ் வேறே இன்று போய் விட்டதில்லையா, பாவம்?''

''கேஸா? எந்தக் கேஸ்?''

''உங்களுக்கு விஷயமே தெரியாது போலிருக்கிறது. சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்துகொள்ள...''

அருணுக்கு நினைவு வந்தது. மூர்த்தியின் கேஸைப் பெரிதாக நினைத்துத்தானே சாகக் கிடக்கிற கல்யாணியைக் கூட விட்டுவிட்டு ஓடினான்? அந்தக் கேஸ் கோவிந்தாவா?

அசுரத்தனமான மகிழ்ச்சி பிறந்தது அவன் உள்ளத்தில்.

''அப்பீலுக்கு அனுமதி கிடையாது என்று தள்ளி விட்டார்களா?'' என்று கேட்டான்.

''அட ராமா! அதைவிட மோசம் ஐயா!'' என்ற குமாஸ்தா, வருத்தத்துக்கு அறிகுறியாக முழு நீளம் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டார்.

அருணின் திகைப்பு அதிகரித்தது.

''ஏன், கொடுத்த தண்டனையே போதாது என்று ஜட்ஜ் சொல்லி வைத்தாரா?''

''அது பரவாயில்லையே?''

''பின்னே?''

''அந்தப் பிள்ளையாண்டானுக்கு இனிமேல் தண்டனையே கிடையாது! சுப்ரீம் கோர்ட், அது இது என்று செலவு வைக்காமல் பண்ணிவிட்டான், போலும்!''

''அதாவது?''

அருணின் ஆவலை எவ்வளவு முடியுமோ அவ்வளவு அதிகரிக்க வைத்த திருப்தியுடன், ''அந்தப் பையன் மூர்த்தி ஜெயிலிலிருந்து தப்பி ஓடிவிட்டான், நேற்று ராத்திரி!'' என்றார் அவர்.

''என்னது?''

''ஆமாம், ஆமாம். பத்மனாபன் இந்தப் பக்கம் கேஸை ஆர்க்யூ பண்ண எழுந்து கொள்கிறார். அந்தப் பக்கம் ஜட்ஜ் சொல்கிறார், ''ஏனய்யா மடத்தனமாய் ஓடிப் போனவனுக்காக வழக்காடுகிறீர்'' என்று. பத்மனாபனுக்கு, பாவம் ஒரே அவமானம் நடுக் கோர்ட்டில்–''

சிலையாய் நின்றான் அருண் ஒரு வினாடி, தான் கேட்டதையெல்லாம் நம்பமுடியாமல். அடுத்த கணம், ஆங்காரமான சிரிப்பு வெடித்துக் கொண்டு வந்தது.

திரும்பிப் பார்த்தான். தூரத்தில் சிதையினருகே கடைசிச் சடங்குகளை முடித்தவாறு இரண்டு மூன்று பேருக்கு மத்தியில் நின்றிருந்த பத்மனாபன் கண்ணில் பட்டான்.

தலை துவட்டிக் கொண்டிருந்த துவாலையை தூர எறிந்துவிட்டு விடுவிடுவென அவனருகில் ஓடினான் அருண். முரட்டுத்தனமாகப் பத்மனாபனின் கையை வெடுக்கென்று இழுத்து, சடசடவென்று குலுக்கினான். ''கங்கிராஜுலேஷன்ஸ் பத்மனாபன்! கங்கிராஜுலேஷன்ஸ்!'' என்றான்.

''அருண்!'' பத்மனாபனின் குரலில் அதிர்ச்சியும், பார்வையில் பரிதாபமும் தெரிந்தன.

''புரியவில்லையா? கேஸ் விஷயமப்பா. கோர்ட்டிலே பிய்த்துவிட்டாயாமே பிய்த்து!''

பத்மனாபனின் சிரம் நிமிர்ந்தபோது கண்கள் பனித்தன. ''அருண், நீ கூடவா...''

''சே! சே! நானானால் என்ன வேறொருத்தரானால் என்ன? கங்கிராஜுலேட் பண்ண வேண்டியதுதானே? அடடா! கல்யாணியின் ஆசீர்வாதம் என்னமாய்க் கை மேலேயே பலித்துவருகிறது பார்த்தாயா பத்மனாபன்! பலே, பலே! இனிமேல் பாரேன் பத்மனாபா, இதே போல் அடுத்தடுத்துப் பிரமாதம் பிரமாதமாய் வெற்றிகள் வந்து கொண்டேயிருக்கும்! ஹா! ஹா!''

வெறி பிடித்தவன் போலச் சிரித்துக் கொண்டே இடு காட்டை விட்டு வெளியே வந்தான் அருண். பார்பர்ஸ் பிரிட்ஜ் அருகில் ஒரு ஆட்டோ ரிக்ஷா நின்றிருந்தது. ஏறிக் கொண்டான்.

இந்தச் செய்தியை உடனே இன்னொருவரிடம் தெரிவிக்க வேண்டுமென்று அவனுடைய உடலும் உள்ளமும் பறந்தன.

''நுங்கம்பாக்கத்துக்கு ஓட்டு,'' என்றான் அருண்.

''என்னங்க நீங்க! இப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் போயிட்டீங்க? எஜமான் தவியாய்த் தவிச்சிட்டாரு,'' என்று காவல்காரன் வரவேற்றான் ஆட்டோவில் இருந்து அருண் இறங்கியதுமே.

வெராந்தாவில் நின்று கொண்டிருந்த சமையல்காரர், ''ஒரு வார்த்தை எங்கேயிருந்தாவது டெலிபோன் பண்ணக்கூடாதோ? அருண் எங்கே, அருண் எங்கே என்று வாய் ஓயவில்லை பெரியவருக்கு,''என்று தெரிவித்தார்.

இரண்டு நாளாய் ராஜரத்தினத்துக்கு ஒரு தகவலும் தெரிவிக்காதிருந்தது தவறுதான் என்று அருணுக்கும் தோன்றியது.

பங்களாவின் படியில் ஏக்கத்துடன் உட்கார்ந்திருந்த லல்லி, ஓடிவந்து அருணைக் கட்டிக் கொண்டாள். அவளைத் தூக்கியெடுத்து முத்தமிட்டபோது, கையை வீசியதும் பறந்தோடுகிற காக்கைக் கூட்டத்தைப்போல அவன் மனச் சுமையெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்தன. குழந்தையின் கறுத்த சுருள் கேசத்தினுள் விரல்களால் துழாவியபோது, ஓர் இதமான கரம் தன் மனப் புண்ணுக்கு மருந்திடுவதுபோல் உணர்ந்தான்.

லல்லியின் உதடு பிதுங்கியிருந்தது. அவள் கோபமாய் இருக்கிறாளாம்!

''புரிகிறது, புரிகிறது. இனிமேல் உன்கிட்டே சொல்லிக் கொள்ளாமல் போக மாட்டேன். சரிதானே?'' என்று அவளைச் சமாதானப்படுத்தியவாறு ராஜரத்தினத்தின் அறைக்குள் நுழைந்தான். பங்களாவின் பல பகுதியில் விளக்குகள் அணைக்கப்பட்டுவிட்டன.

தடித்த அட்டை போட்ட தேவாரப் புத்தகம் அவர் கையிலிருந்தது. அருணின் வரவினால் ஏற்பட்ட மகிழ்ச்சி, பிறந்த வினாடியே பறந்து, முகத்தில் வியப்பு பரவியது. ''என்ன இது கோலம்?'' என்று அருணின் உடம்பைச் சுட்டிக் காட்டி வினவினார், சாடையில்.

பிறகுதான் அருண், தான் எத்தகைய அலங்கோலத் துடன் ஆட்டோ ரிக்ஷாவில் பயணம் செய்து வந்திருக் கிறோம் என்பதை உணர்ந்தான். சிலுப்பிக் கொண்டு நிற்கும் ஈரத்தலை, நனைந்திருக்கும் வேட்டி, சட்டை, அவற்றிலே படிந்திருக்கும் அகல அகலமான மண் கறைகள்.

''என் சகோதரி போன்ற ஒருத்தி இறந்துவிட்டாள்'' என்றபடி குழந்தையைக் கீழே இறக்கிவிட்டான். ''வக்கீல் பத்மனாபனின் மனைவி.''

ராஜரத்தினத்தின் பரந்த முகத்தில் வருத்தமும் அதிர்ச்சியும் தெரிந்தன. அனுதாபத்துக்கு அறிகுறியாக ஒரு கனைப்புப் பிறந்தது அவரது தொண்டையில்.

''உங்களுக்கு ஒரு சமாசாரம் சொல்வதற்காக ஓடிவந்தேன்,'' என்றான் அருண் பேச்சை மாற்றி.

''என்ன?''

லாயரின் குமாஸ்தா தனக்கு ஆவலூட்டியது போலவே தானும் செய்ய எண்ணினான் அருண். ''உங்கள் மாப்பிள்ளை... மூர்த்தி...''

ராஜரத்தினத்தின் புருவங்கள் லேசாய் உயர்ந்தன.

''சுப்ரீம் கோர்ட் வரையில் அப்பீலுக்குப் போவதாய் இருந்தார் இல்லையா?''

''ஆமாம்.''

''அதற்கு அவசியமில்லை.''

ராஜரத்தினம் வியப்புற்றதாகத் தெரியவில்லை. தலையை மெல்ல அசைத்ததோடு சரி. குழந்தை லல்லியைத் தன் மடியில் உட்கார்த்தி வைத்துக் கொண்டார்.

''மூர்த்தி ஜெயிலிலிருந்து தப்பி ஓடிவிட்டானாம்.''

''ஆ!'' என்று ராஜரத்தினம் குதித்தெழுந்தாரா ஆச்சரியத்துடன்?

இல்லை.

அவருடைய உதட்டில் புன்னகையொன்று தவழ்ந்து கொண்டிருந்தது. ''எனக்குத் தெரியும்,'' என்பது அதற்குப் பொருள்.

''உங்களுக்குத் தெரியுமா? எப்படி? எப்படித் தெரியும்?'' நெருங்கி நின்று அருண் வினவினான்.

அவருடைய புன்சிரிப்பு மறையவில்லை. வரவரப் பெரிதாகிக் கொண்டிருந்தது.

திடீரென்று அருண் புரிந்து கொண்ட ான்.

ராஜரத்தினம் அடிக்கடி சந்தித்துப் பேசிய ரௌடிகள் - அவரிடம் பணம் வாங்கிக்கொண்டு சென்ற பேர்வழிகள் - அவன் மனக்கண்ணில் எழுந்தார்கள். பத்மனாபனை அடித்து மடக்குவதற்காக அவர் ஆள் அமர்த்துகிறார் என்று நினைத்தது தப்பு. பத்மனாபனுக்கும் அந்த ரவுடிகளுக்கும் சம்பந்தமேயில்லை. அவர்களுடைய உதவியைக் கொண்டு ராஜரத்தினம்....

அவரது தோளை உலுக்கினான் அருண் பதற்றத்துடன், ''நீங்கள்... நீங்கள்தான் மூர்த்தி சிறையிலிருந்து தப்புவதற்கு ஏற்பாடு பண்ணியிருக்கிறீர்கள்! அப்படித் தானே?''

ராஜரத்தினம் சிரித்துக் கொண்டே பேசாமல் இருந்தார். ஆனால் அருணின் கூற்றை மறுக்கவில்லை.

''உண்டா இல்லையா? சொல்லுங்கள். மூர்த்தி தப்ப முடிந்தது உங்களால்தான். பழைய கேடிகள் சிலரைப் பணம் கொடுத்து அமர்த்தி, அவன் ஜெயிலிலிருந்து தப்புவதற்கு வசதி செய்திருக்கிறீர்கள்?''

ராஜரத்தினம் அவனை மெச்சுவது போல் முதுகில் தட்டிக் கொடுத்தார். அவன் சொன்னதை ஒப்புக் கொண்டு விட்டாரென்று தெரிந்தது.

''எதற்காக அப்படி செய்தீர்கள்?'' என்று தன்னை மறந்து சினம் காட்டினான் அருண். ''பச்சை அயோக்கியன். நன்றி கெட்டவன். உங்கள் பெண்ணுக்குத் துரோகம் விளைவித்த சண்டாளன். எத்தனையோ குடும்பங்களின் வாயில் மண்ணைப் போட்டு, பணத்தை ஏப்பமிட்ட மோசடிக்காரன். அவன் மீது இரட்டிப்பு வஞ்சம் தீர்த்துக் கொள்ள வேண்டிய நீங்கள் – தீர்க்கப் போவதாக இரவும் பகலும் உறுமிக் கொண்டிருந்த நீங்கள் – ஏன் இப்படி மாறிப் போனீர்கள்? எதற்காக அவனுடைய குற்றங்களையெல்லாம் மறந்து, மன்னித்து, சட்டப்படி அவனுக்குக் கிடைத்திருக்கிற தண்டனையிலிருந்தும் தப்ப வைத்தீர்கள்? சொல்லுங்கள.''

சொல்லவில்லை ராஜரத்தினம். தலையைக் குனிந்து கொண்டார். மேலேயுள்ள முரட்டுக் கிளை, கீழே பூத்திருக்கும் மலரைத் தொட்டு அசைப்பது போல, மடியில் அமர்ந்திருந்த லல்லியை மெல்லத் தடவிக் கொண்டிருந்தன அவருடைய வலுவான கரங்கள்.

அதைப் பார்த்தவாறிருந்த அருண், படபடப்புக் குறைந்தவனாய்த் தானாகவே ஊகித்துக் கொண்டான். லல்லியின் மீதுள்ள பாசம் அவர் கண்ணை மறைத்து விட்டதுபோலும். எப்படியும் நாளைக்கு இந்தக் குழந்தைக்கு ஒரு பாதுகாப்பு வேண்டுமே என்பதால், ஜன்மப் பகைவனாகத் திகழ்பவனையும் சமாதானம் செய்து அணைத்துக்கொள்ள விரும்புகிறார் போலும்.

ராஜரத்தினத்தின்மீது கோபத்துக்குப் பதில் இரக்கம் ஏற்பட்டது. ஒரு பெருமூச்சுடன் அறையை விட்டு வெளியே வந்தான்.

தோட்டத்தில் கொட்டிக்கிடந்த நீல விளக்கின் ஒளி, அவன் உள்ளத்துக்கு இதம் தரவில்லை. இருட்டிலும் வெளிச்சத்திலுமாக மெல்ல ஆடிய செடிகள் அவன் சிந்தனையை வேறு திசைக்குத் திருப்பின.

ஆக, மூர்த்தி தப்பிவிட்டான். எவனுடைய மோசடித் தனத்தால் தகாத காதலும், அகால மரணமும் நிகழ்ந் தனவோ அவன் வெளியுலகில் சவடாலாகத் திரிகிறான்.

''அந்த மாயாவைப் பார்க்க வேண்டும்!'' என்று அருணின் இதயம் உறுமிற்று.

அண்ணன் நிரபராதி என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்து இரண்டு குடும்பங்களுக்கு உலை வைத்தாளே மகராசி, அவள் திருமுகத்தைப் பார்க்க வேண்டும். பார்த்து, 'தாயே, புண்ணியவதி! நிரபராதி அண்ணனைப் பாாத்தாயா அம்மா? ஜெயிலிலிருந்து தப்பியோடிய குற்றமற்ற சகோதரனைக் கண்குளிரத் தரிசித்தாயா தாயே?' என்று கேட்கவேண்டும்.

முழந்தாளைக் கட்டிக்கொண்டு மாயா உட்கார்ந் திருந்தாள், தன் வீட்டின் பின் கட்டு அறையில்.

அவளுக்குப் பக்கத்திலிருந்த அரிக்கன் விளக்கு, வெளிச்சத்தை அதிகப்படியாகவே சிந்துவதாகத் தோன்றியதோ? அதைச் சிறிது பண்ணினாள்.

நிமிடத்துக்கொரு முறை அவள் பார்வை கொல்லைப் புறத்தை நோக்கித் தாவும். அங்கே அவள் எதிர்பார்த்தது நிகழாததால், முழந்தாளுக்கிடையே மீண்டும் முகத்தைப் புதைத்துக் கொள்வாள்.

கண்ணைச் சிறிது மூடியதும் ஆயிரம் குழப்பங்கள் மிதந்து வரும். நீதிமன்றத்தில் கிடைத்த அதிர்ச்சி, பத்மனாபனின் பித்துப் பிடித்த நடை, தான் பின் தொடர்ந்து சென்ற வேதனை, ஆஸ்பத்திரி, அலறல்கள், மரணம், பத்மனாபன் ஏற்கனவே மணமானவன் என்ற பயங்கரமான உண்மை – இத்தனையும் மாறி மாறி அவள் நினைவில் வந்தன.

விரல்களை முறுக்கிக் கொண்டாள், குழப்பங்களின் கனம் தாங்க மாட்டாமல். தாழம்பூக் காட்டில் தலை தெறிக்க ஓடுவதுபோல உடம்பின் எல்லாப் பகுதிகளிலும் சுருக் சுருக்கென்று ஊசிகள் குத்தின. துணையற்றவளாக, பலமற்றவளாகத் தவித்தாள் மாயா.

அவ்வளவுக்கும் நடுவில், அடுத்தாற்போல் செய்ய வேண்டிய காரியமொன்று அவள் உள்ளத்தில் இருந்து நழுவி விடாமல் தீர்மானமாக நிலைத்திருந்தது.

ஏதோ சத்தம்.

காதுகள் கூர்மையாகின. கண்கள் அதிக சக்தி பெற்று இருட்டைத் துளைத்துத் தேடின.

அவள் எதிர்பார்த்ததுதான்.

தோட்டத்துச் சுவரேறிக் குதித்து வருகிறது ஓர் உருவம்.

அரிக்கன் விளக்கின் கண்ணாடியைத் தூக்கி, வாயால் ஊதி அணைத்தாள் மாயா. பிறகு ஓசையின்றி எழுந்து கொண்டு அறையை விட்டு வெளியே வந்து, வீட்டின் பின்புறத்தை அடைந்தாள்.

"வா, அண்ணா. நீ வருவாயென்று நான் காத்திருக்கிறேன்," என்றாள் அமைதி கெடாத குரலில்.

# 25

காம்பவுண்டு சுவரை ஒட்டினாற் போன்ற ஈரமான சதுப்பில், தென்னை மரத்தின் மீதிருந்து கீற்றுக்கள் வழியாகக் கூறுபோட்டு விழும் நிலவின் ஒளியில், அண்ணனும் தங்கையும் ஒருவர் முகத்தையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

அமைதி கோலோச்சிற்று சில வினாடிகளுக்கு. தாடியும் மீசையும் முள்ளத்திருந்தனவே தவிர, கைதி யுடைகளை நீக்கி வேறு ஆடைகள் அணிந்திருந்தான் மூர்த்தி.

''அண்ணா! மூர்த்தியண்ணா!'' என்று தொண்டைக் கமறக் கூவிக்கொண்டு மூர்த்தியின் மார்பில் சாய்ந்தாள் மாயா.

''சீ, சீ! அசடு!'' என்று அவள் விழி நீரைந் துடைத் தெறிந்தான் மூர்த்தி. அவள் முதுகில் செல்லமாகத் தட்டியபடி, ''ரொம்ப இளைத்துவிட்டாயே மாயா! இந்தப் பாவி அண்ணனால் உனக்கு ஏற்பட்ட கவலைகளும் கஷ்டங்களும்தான் காரணம், இல்லையா?'' என்றாள்.

''ஐயையோ! அப்படிச் சொல்லாதே அண்ணா,'' என்று அவன் வாயைப் பொத்தினாள் மாயா. ''உனக்காக நான் எத்தனை கஷ்டங்களை வேண்டுமானாலும் ஏற்றுப் பொறுத்துக் கொள்ளத் தயார். ஆனால் நீ மட்டும் இந்த மாதிரி... இந்த மாதிரி... எதிர்பாராத காரியங்களை யெல்லாம் செய்யக்கூடாது!''

''நரகம் மாயா! அந்த ஜெயில் நரகத்தைப் பொறுத்துக் கொள்ள என்னால் முடியவேயில்லை, அதனால்தான் தப்பியோடி வந்துவிட்டேன்,'' என்றான் மூர்த்தி. ''இங்கே உன்னை எப்படி எழுப்புவது, நீ ஆச்சரியத்துடன்

கூச்சலிட்டு விட்டால் என்ன செய்வது என்றெல்லாம் பயந்து குழம்பிக் கொண்டு வந்தேன். நீ எனக்காகவே காத்திருக்கிறாய்! போலீஸ் வந்து விசாரித்தார்களா?''

''இல்லை, காலையிலேயே எனக்குத் தெரிந்து விட்டது,'' என்று சுருக்கமாகச் சொன்னாள் மாயா. ''ஆனால் நிச்சயமாய் இந்த வீட்டின் மீது ஒரு கண் வைத்துத்தான் இருப்பார்கள்.''

''உடனே இங்கே வரக்கூடாதென்றுதான் நானும் நினைத்தேன். முடியவில்லை. உன்னையும் அப்பா அம்மாவையும் பார்க்காமலிருக்க முடியவில்லை மாயா. அம்மா ரொம்பப் புலம்பி விட்டாளா? அப்பா...''

''எல்லாரும் சௌக்கியம்,'' என்று பேச்சை முடித் தாள் மாயா. ''இங்கே நீ தாமதிக்கிற ஒவ்வொரு நிமிடமும் ஆபத்து. வா போகலாம்.''

பின்புறத்துச் சிறு கதவைத் திறந்தாள் மாயா, மீண்டும் அவன் சுவரேறிக் குதிக்க வேண்டிய அவசிய மில்லாமல்.

''மாயா! எங்கே கூப்பிடுகிறாய்?''

''போய்க்கொண்டே பேசலாம், வா.'' மாயா, கதவுக்கு மறுபுறம் சென்று புடவையின் தலைப்பினால் தலைக்கு முக்காடிட்டுக் கொண்டாள்.

''எல்லா ஏற்பாடுகளும் நீயே செய்து வைத்திருப் பாய் போலிருக்கிறதே!'' என்று தங்கையைப் பாராட்டிய வண்ணம், கதவைச் சாத்திவிட்டு வந்த மூர்த்தி அவளுடன் சேர்ந்து கொண்டான்.

வீட்டைச் சுற்றிக் கொண்டு வந்தபோது பெரிய சாலை எதிர்ப்பட்டது. மரங்களடர்ந்த நடைபாதையில், ஓசையின்றி நடக்கலானார்கள் இருவரும். ஒரே ஒரு சைக்கிள் ரிக்ஷாக்காரன்தான் அந்தப் பதுங்கிய உருவங்

களைக் கவனித்து, ''வண்டி வேணுமாம்மா?'' என்று கேட்டுவிட்டு நகர்ந்தான். வேறே நடமாட்டத்தைக் காணோம்.

''ஏதோ ஏற்பாடு செய்துதான் வைத்திருக்கிறாய் இல்லையா?'' என்று மீண்டும் உத்திரவாதம் கேட்டான் மூர்த்தி.

''ஊம்.''

''நான் என்ன பிளான் பண்ணியிருந்தேன், சொல்லட்டுமா? கொஞ்சகாலத்துக்கு இந்த மதறாசை விட்டு வெளியூர் போய் இருப்புது. தன்னாலே இரண்டு மூன்று மாதத்தில் போலீஸ் வேட்டையெல்லாம் ஓய்ந்து விடும். வடக்கே சில சினேகிதர்கள் இருக்கிறார்கள். அவர்கள் மூலமாய் நல்ல வேலை ஏதாவது தேடிக் கொண்டு, உங்களையெல்லாம் அழைத்துக் கொண்டு விடுவது, எப்படி!''

''ஓ.''

''ஏதோ நம்பிக்கை இல்லாதமாதிரி தலையாட்டு கிறாய். பரவாயில்லை. நாம் இப்படியே போய்க் கொண்டிருந்தால்?''

''வாயேன், சொல்கிறேன்.''

''வீட்டிலேயே உன்னிடம் கேட்க வேண்டுமென்று நினைத்தேன். மாயா, எனக்கு ஆயிரம் ரூபாய், குறைந்த பட்சம் ஐந்நூறு ரூபாய், தேவை உடனடியாய்.''

மாயா மௌனமாக நடந்து கொண்டிருந்தாள்.

''ரொக்கமாய் இல்லாவிட்டால், நகை நட்டாகக் கொடுத்தாலும் போதும். நான் ஏதாவது பண்ணிக் கொள்கிறேன். வெளியூரில் எப்படிப் பணம் இல்லாமல் காலத்தை ஓட்டுவது?''

''ஆமாம், ஆமாம்.''

''அப்படியானால் நான் இங்கேயே இருக்கிறேன். நீ போய்... மாயா! அதோ–''

சட்டென இரண்டடி பின்வாங்கினான் மூர்த்தி.

''என்ன அண்ணா?''

''அதோ வெளிச்சம் தெரிகிறது பார்!''

''ஆமாம்.''

''போலீஸ் ஸ்டேஷன் அது.''

''இருக்கட்டுமே?''

''மாயா! எப்படி அதைத் தாண்டிக் கொண்டு போவது! வா, திரும்பிடலாம்.''

''தாண்ட வேண்டாம். நாம் அங்கேதான் போகிறோம். அங்கேதான் நுழையப் போகிறோம்.''

மூர்த்தியின் முகம் வெளிறிற்று. ''எங்கே? போலீஸ் ஸ்டேஷனுக்கா?''

''ஆமாம்.''

முரட்டுத்தனமாக அவள் தோளைக் குலுக்கி, ''உனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா?'' என்று கத்தினான் மூர்த்தி மூச்சு வாங்கும் அடித்தொண்டையில்.

''இல்லை, அண்ணா, சுத்தமான புத்தி சுவாதீனத்துடன்தான் பேசுகிறேன், செய்கிறேன். ஜெயிலிலிருந்து நீ தப்பி வந்தது பெரும் தப்பு. போலீஸ் ஸ்டேஷனில் போய் நீயாகவே சரணடைந்துவிடு. அதற்காகத்தான் அழைத்து வந்தேன்.''

அவள் பேச்சையும், முகபாவத்தையும் குரலின் கண்டிப்பையும் நம்ப மாட்டாதவனாக, வெறித்து நோக்கிய வண்ணம் நின்றான் மூர்த்தி.

''ஆமாம், அண்ணா! என் அருமை அண்ணன், குற்றவாளியைப்போல இருளில் பதுங்கி வெளிப்படு

வதை நான் விரும்பவில்லை. அதற்கு இடம் கொடுக்கவும் மாட்டேன்!''

''தூ! விடு!'' என்று தங்கை பற்றியிருந்த கரங்களை உதறி விடுவித்துக் கொண்டான் மூர்த்தி.

மாயா ஆவேசத்துடன் சொன்னாள், ''நிரபராதி என்ற கௌரவத்துடன், நிமிர்ந்த தலையும், குற்றமற்ற பார்வையும், நேரான நடையுமாக என் அண்ணா வெளி வரவேண்டும். யார் என் அண்ணனின் கரங்களில் விலங்கு பூட்டினார்களோ அவர்களே வருத்தம் தெரிவித்துக் கொண்டு பூட்டைத் திறந்து விட வேண்டும். யார் யாரெல்லாம் என் அண்ணன் சிறைக்குப் போனதும் கை கொட்டிச் சிரித்தார்களோ அவர்களுடைய முகத்திலே நான் காறி உமிழ்கிற மாதிரி, என் அண்ணன் வெற்றி மதர்ப்புடன் வீட்டுக்குத் திரும்பி வர வேண்டும். அதற்காகத்தான் அண்ணா இந்த மாயா கண்ணீரை விழுங்கிக் கொண்டு சிரிப்பைத் தவழ விட்டபடி போராடுகிறாள்! அதற்காகத்தான் லட்சம் இன்னல்கள் விளைந்தாலும் சரியென்று வளைந்து கொடுக்காமல் விடாப்பிடியாக நிற்கிறாள்! அதைக் கெடுத்து விடாதே அண்ணா! குலைத்து விடாதே! நீ நிரபராதி என்ற பெயரோடுதான் வெளியே வரவேண்டும்! அதிகார பூர்வமாக, முறைப்படி சிறைக் கதவுகள் திறந்த பிறகுதான் நீ வரவேண்டும்! அதற்காக என் உயிரையே பணயம் வைத்துப் போராடுவேன்! நம்பு!''

வைத்த விழி வாங்காமல் அவளையே நோக்கிய மூர்த்தி, அவளது ஆவேசத்தைக் கண்டு சற்றே பயந்தவனாகச் சொன்னான்: ''மாயா! நீ என்னென்னவோ பைத்தியக்காரக் கனவுகள் காண்கிறாய்! நீ நினைக்கிற மாதிரியான கௌரவமான விடுதலை எனக்கு ஒரு நாளும் கிடைக்கப் போவதில்லை!''

''ஏன்? ஏன் அண்ணா, ஏன்?''

''ஏனா? உன் அண்ணன் நிரபராதியே அல்ல! குற்றவாளி! மோசடிக்காரன்! கோர்ட்டிலே வாசிக்கப் பட்ட அத்தனை குற்றங்களையும் செய்தவன்! போதுமா? அப்பறம்?''

மாயா சிரித்தாள். ''நான் நம்ப மாட்டேன் அண்ணா, நம்பவே மாட்டேன்!''

''என்னது! நானே சொன்னால் கூடவா?''

''நீ சொல்வதால்தான் நம்ப மாட்டேன்! உனக்குப் பயம் ஏற்பட்டுவிட்டது! சிறையின் கருங்கல் சுவர்கள் உன் நம்பிக்கையைப் பொடிப்பபடியாக நொறுக்கி விட்டன! தர்மத்திலே நம்பிக்கை, சத்தியத்திலே நம்பிக்கை, நியாயத்திலும் நீதியிலும் நம்பிக்கை, நேர்மைதான் கடைசியிலே வெல்லும் என்ற நியதி யிலே நம்பிக்கை – அத்தனையையும் இழந்து விட்டாய் நீ. அதனால்தான் இப்படிப் பேசுகிறாய்! பயப்படாதே, அண்ணா! மனம் தளராதே. நான் இருக்கிறேன். நம்பிக்கை இழக்கவே இழக்காதே!''

''மாயா! உன்னை மாற்ற இனி ஆண்டவனாலும் முடியாது! நான் போகிறேன்!'' என்று திரும்பினான் மூர்த்தி, வரவரத் தங்கையின் குரல் அவளை அறியாம லேயே உரத்துக் கொண்டிருப்பதை உணர்ந்து.

''நில் அண்ணா! நீ போகக் கூடாது! போலீசில் சரணடையத்தான் வேண்டும்!''

''முடியாது!''

''நீ மறுத்தால் நானே போலீசைக் கூப்பிடுவேன்.''

மூர்த்தி விரைந்து செல்லத் தொடங்கினான்.

''போலீஸ்! போ-''

இரண்டாம் முறை குரல் கொடுக்கவில்லை மாயா. அவள் வாயை மிருகத்தனமாக அடைத்து, கழுத்தை ஒடித்துத் திருப்பி, நடுச் சாலையிலே ஆங்காரமாகத் தள்ளினான் மூர்த்தி.

அவளுடைய அலறல் கேட்டு, போலீஸ் ஸ்டேஷனி லிருந்து இரண்டொருவர் வெளியே வந்து எட்டிப் பார்ப்பதற்குள், மூர்த்தி சாலையின் இன்னொரு கோடியைக் கடந்து தலைதெறிக்க ஓடிக்கொண்டிருந் தான்.

இடிந்த மசூதியின் சுவருக்குப் பின்னால் புகை கக்கிக் கொண்டிருந்தது சிம்னி விளக்கு.

விடிகாலை நாலு மணி ஆகியபோதிலும் பக்கிரியின் ரங்காட்டக் குழு கலையக் காணோம். அப்போதுதான் சுவாரசியமான கட்டத்தை எட்டிக் கொண்டிருந்தது.

தடதடவென்று யாரோ ஓடிவரும் சத்தம்.

சரேலென்று சீட்டுக்களைக் கிழித்துப் பாய்க்கடியில் தள்ளிவிட்டு, படுத்துக் கொண்டு தூங்குவது போல் பாசாங்கு செய்யத் தொடங்கினார்கள் ஐந்து பேரும்.

அவர்கள் பயந்தபடி போலீஸ் பட்டாளம் எதுவும் வந்துவிடவில்லை. வேகமாக வந்த காலடியோசை இப்போது பதுங்கிப் பதுங்கிக் கேட்கத் தொடங்கியது.

''பக்கிரி! பக்கிரி!'' – பாம்பு சீறுவது போல் தாழ்ந்து, ஆனால் அழுத்தம் ஒலித்த குரலைக் கேட்டதும் எல்லா தலைகளும் சட்டென்று வெளியே நீட்டின.

''வா தொரை!'' என்று கிண்டலாக வரவேற்றான் பக்கிரி. ''நீ எந்தப் பட்டணத்துக்கு ஓடினாலும் கடைசி யாய் இங்கேதான் வந்து விழுவாய் என்று தெரியாதா எனக்கு?''

மூர்த்தி, ஓடிவந்த வேகத்தில் மூச்சு இரைக்க, ''உன்கிட்டே சொல்லிக்காமல் போனது தப்புதான்'' என்று முனகினான்.

பக்கிரியின் மற்ற சகாக்களுக்கு மூர்த்தியையும் தெரியவில்லை. அவர்கள் பேசிக் கொண்டதும் விளங்க வில்லை.

''கேள் அண்ணாத்தை, நியாயத்தை!'' என்று பக்கிரி விளக்கலானான் தோழர்களுக்கு. ''இந்தத் தொரையை ஜெயிலிலிருந்து தப்பிக்க வைச்சு, தன்கிட்டே அழைச்சிட்டு வரணும்னு ஒரு பெரிய மனுசன் ஏற்பாடு பண்ணியிருந் தான். நான் ராயபுரம் மஸ்தான் கையிலே சொல்லி வைச்சு, எல்லா வேலைகளையும் பக்காவா முடிச்சிட்டு இங்கே அழைச்சிட்டு வந்தேன். அட, அப்பாலே அந்தப் பெரியவர்கிட்டே அழைச்சிட்டுப் போய், செரமத்துக்குக் கூலியையும் வாங்கிக்கலாம்னு இருக்கிறேன். விடிஞ்சு பார்த்தால் இந்த ஆளைக் காணோம்!''

''பய மவன் கெடுத்தானே!'' என்று இரக்கம் தெரி வித்து விட்டு, மூர்த்தியைக் கடுமையாக நோக்கினார்கள் பக்கிரியின் சினேகிதர்கள்.

மூர்த்தியின் குரலில் மன்றாடல் ஒலித்தது: ''பக்கிரி, இப்போது நீ என்ன சொன்னாலும் கேட்கத் தயார். யார் அந்தப் பெரிய மனுஷன்? எதற்காக எனக்கு உதவி பண்ணினான்? அவனிடம் என்னை அழைத்துப் போ. கொஞ்ச நாளைக்கு அவனிடம் தலைமறைவாய் இருக்கிறேன்.''

''கொஞ்ச நாளைக்கு என்ன? உனக்குப் பேரன் பிறக்கிற மட்டும் அங்கே இருந்துக்கலாம். ஒரு ஈ காக்கா கண்டுக்காது,'' என்று உறுதி கூறிய பக்கிரி, ஜாரிலிருந்து ஓர் அழுக்கு நோட்டை எடுத்தான். காகித மொன்று கிழித்து, பென்சில் முனையைப் பல்லால்

கடித்துப் பிடித்துக்கொண்டு, குண்டு குண்டான எழுத்தில் இழுத்து இழுத்து மெல்ல எழுதலானான். ''இந்த விலாசத்தில் போய் இரு. அப்பாலே நான் சென்று கூலி வாங்கிக்கிறேன். ரெண்டு பேரும் சேர்ந்து போக வேணாம்.''

மூர்த்தி ஆவலுடன் எட்டிப் பார்த்தான்.

''ராஜரத்தினம்,'' என்று பக்கிரி எழுதி முடித்ததுமே, ''ஓ! அந்த ஆளா'' என்று வியப்புடன் கூவினான்.

''ஏன்? உனக்குத் தெரியுமா?''

''நன்றாய்! ஊமைதானே?''

''ஆமாம்.''

''விடு கழுதை! அந்த வீட்டுப் படி ஏற மாட்டேன் நான்!''

பக்கிரி அவனை வியப்புடனும், கோபத்துடனும் பார்த்தான். ''ரெண்டு விசயத்தை நீ மறந்திட்டுப் பேசறே, தொரை! நீ இங்கே போகலேன்னு வைச்சுக்க, மறுபடி ஜெயிலுக்குப் போகவேண்டியதுதான். வாங்கின காசுக்கு நான் துரோகம் செய்யலாமா? அதனாலே நானே போலீசுக்குச் சொல்லிவிடுவேன் நீ இருக்கிற இடத்தை!''

மூர்த்தி யோசித்தான்.

''சரி,'' என்று சொல்லி, பக்கிரியிடமிருந்து சீட்டை வாங்கிக் கொண்டு எழுந்தான் மூர்த்தி.

**எ**வ்வளவுக்கெவ்வளவு அவசர அவசரமாக உள்ளே நுழைய மூர்த்தி துடித்தானோ, அவ்வளவுக்கவ்வளவு மூர்க்கமாக அவனைத் தடுத்தான் காவல்காரன்.

தெருவிலே வெளிச்சம் வேகமாய் பரவிக் கொண்டிருந்தது. போக்குவரத்து அதிகப்பட்டுக் கொண்டிருந்தது. தலையை மறைத்துக் கொள்ள மூர்த்தி தவித்தான்.

காவல்காரனும் மூர்த்தியும் செய்து கொண்ட வாக்கு வாதம் உள்ளே பங்களாவுக்கும் எட்டியதுபோலும்.

''என்னப்பா தகராறு அங்கே?'' என்று கேட்டுக் கொண்டே வந்தான் அருண்.

மூர்த்தியைக் கண்டதும் அவன் முகம் சிவந்தது.

''இந்த ஆள்...'' என்று காவல்காரன் சொல்ல, ''நெட்டித் தள்ளு, கழுத்தைப் பிடித்து! மவுண்ட்ரோடிலே போய் விழவேண்டும்!'' என்று அருண் கட்டளை யிட்டான்.

காவல்காரனின் கரம் மூர்த்தியின் கழுத்தின்மீது படியவில்லை.

அதற்குள் வேறொரு கரம் மூர்த்தியின் தோளைப் பற்றி உள்ளே அழைத்துக் கொண்டது.

''சார்! வேண்டாம்! நான் சொல்வதைக் கேளுங்கள்! இவனை வீட்டுக்குள் சேர்க்க வேண்டாம்!''

''எனக்குத் தெரியும். பேசாமல் இரு,''என்ற பொருள் பட ராஜரத்தினம் புன்னகை பூத்தார்.

மனம் புழுங்க, கையைப் பிசைந்து கொண்டு அருண் நிற்கையில் மாமனும் மருமகனும் பங்களாவுக்குள் மறைந்தனர்.

# 26

**மூ**ச்சு இருக்கிறதா, பார்.

இருக்கிறது, சார். தலையிலேதான் காயம்.

ரத்தம் வடிகிறது போலிருக்கிறதே? கைக்குட்டையை எடுத்துக் கட்டு.

டார்ச்சை இப்படிக் காட்டுங்கள், சார்.

இரண்டு பக்கமும் பார்த்துவிட்டோம், சார். ஆசாமி ஏதோ சந்திலே புகுந்துவிட்டானென்று தோன்றுகிறது.

இந்தாம்மா, மெல்ல எழுந்திரு. முடிகிறதா பார்.

நூற்றெட்டு! நீ அந்தப் பக்கம் பிடி. மெதுவாய், மெதுவாய். ஸ்டேஷனுக்குக் கொண்டுபோனால் நன்றாய்ப் பார்க்கலாம்.

– மாயாவுக்குக் கொஞ்சம் கொஞ்சமாய் நினைவு திரும்பி வந்து கொண்டிருந்தது. அடிபட்டு விழுந்து சில நிமிடங்கள்தான் ஆகியிருக்கும் என்பதையும் அவள் ஊகித்துக் கொண்டாள்.

சுற்றிலும், மூன்று நான்கு போலீஸ்காரர்கள், நெடுஞ்சாலையில் விரைந்து கொண்டிருந்த கார்கள் ஒன்றிரண்டு, சற்றுத் தயங்கி நின்றுவிட்டு, விஷயம் புரிந்ததும் எங்கே ஒத்தாசைக்குப் பிடித்துக் கொண்டு விடுவார்களோ என்று பின்னும் வேகமாக ஓடி மறைந்தன.

முதலுதவியாகத் தலையில் கட்டுப் போடப்பட்ட இடத்தை கையால் அழுத்திக் கொண்டு, ''ஒன்றுமில்லை... எனக்கு... நான் வருகிறேன்,'' என்று திரும்ப முயன்றாள் மாயா. ஆனால் நடை தள்ளாடிற்று.

சட்டென்று தாங்கலாக அவளைப் பிடித்துக் கொண்டார் இன்ஸ்பெக்டர். ஏதோ சந்தேகம் வந்தவராக, லேசாக அவள் முகத்தருகே சுவாசம் இழுத்துப் பார்த்தார். சந்தேகப்பட்ட மாதிரி நெடி எதுவும் வரவில்லை.

''எதிர்த்தாற்போல்தான் போலீஸ் ஸ்டேஷன். கொஞ்சம் உட்கார்ந்து ஓய்வெடுத்துக் கொண்டு போகலாம் அம்மா. துணையோடு அனுப்பி வைக்கிறேன்,'' என்றார்.

''வேண்டாம், வேண்டாம்,'' என்று பதறினாள் மாயா.

நரை மீசையுடன் இருந்த ஒரு கான்ஸ்டபிள், ''ஐயா நல்லதுக்குத்தான் சொல்கிறாங்க. எங்ககிட்டேயே நீங்க பயப்படலாமா?'' என்றார்.

அவசரம் காட்டி ஓட முயன்றால் அனாவசியச் சிக்கல்களும் சந்தேகங்களும் கிளம்பிவிடும் என்று மாயாவுக்கும் புரிந்தது. ''சரி... உங்களுக்கு ஏன் சிரமம்...'' என்று அவர்களுடன் புறப்பட்டாள்.

சாலையைக் குறுக்கே தாண்டியதும் போலீஸ் ஸ்டேஷன். வாசற்புறமிருந்த பூந்தொட்டிகள். நீலக் குழாய் விளக்கின் வெளிச்சத்தில் கண்ணயர்ந்திருந்தன. உள்ளேயிருந்து இன்னும் சில போலீஸ்காரர்கள் ஆவலுடன் வந்து மாயாவைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''விலகுங்கள் எல்லாரும்,'' என்று அதட்டி அனுப்பிய இன்ஸ்பெக்டர், விளக்கின் கீழே மாயாவை அமர்த்தி, தலையைப் பரிசோதனை செய்தார். அடிபட்ட இடம் நன்றாய்ப் புடைத்திருந்ததோடு, வலது காதுக்குச் சற்று மேலாக ரத்தக் காயமும் தெரிந்தது.

''இப்படிப் பெஞ்சியில் கொஞ்சம் படுத்திருங்கள்,'' என்று கூறியவர், ''கோபால்! நாலாவது வீட்டில் யாரோ கம்பவுண்டர் இருக்கிறார், இல்லை?'' என்று வினவினார்.

''எனக்கு இப்போது பரவாயில்லை,'' என்று எழுந்திருக்க முயன்றாள் மாயா.

''நோ, நோ. எங்கள் கடமையை நாங்கள் செய்து விடுகிறோம்,'' என்று தடுத்தார் இன்ஸ்பெக்டர். ''கட்டுப் போட்டுக் கொண்ட பிறகு, ஒரு கம்ப்ளெயிண்ட்டும் கொடுங்கள். பதிவு செய்து கொள்கிறேன்.''

திடுக்கிட்டுத் திரும்பினாள் மாயா. ''கம்ப் ளெயிண்ட்டா? எதற்கு?''

இன்ஸ்பெக்டர்தான் அவளைக் காட்டிலும் அதிகமாக ஆச்சரியப்பட்டார்.

''பின்னே வேண்டாமா? யாரோ உங்களை அடித்துத் தாக்கிவிட்டுப் போயிருக்கிறார்களே! கையில் என்ன வைத்திருந்தீர்கள்? என்னென்ன காணோம்? கழுத்தில் காதில் போட்டிருப்பது -'' மலிவான இமிடேஷன் நகைகள் அந்த இடங்களில் மின்னுகின்றன என்பதை இன்ஸ்பெக்டரின் அனுபவப்பட்ட கண்கள் கண்டு கொண்டன.

மாயாவின் தலைசுற்றல் அதிகரித்தது. உடம்பின் வேதனையுடன் உள்ளத்தின் குழப்பமும் சேர்ந்து கொண்டது.

மூர்த்தி அண்ணா... அவன் தோலுரிந்து விட்டது... வேடம் கலைந்து விட்டது. அவனை எப்படி? ஊஹூம். இப்போதில்லை... வேறு வழியில், வேறு சந்தர்ப்பத்தில்.

''இல்லை, இல்லை. யார் என்னைத் தாக்கினார்கள்? எப்போது நான் அப்படிச் சொன்னேன்?'' என்று படபடத்தாள் மாயா.

''நீ சொல்ல வேண்டுமாம்மா? நீ கூச்சல் போட்டாய். வந்து பார்த்தோம். உன் கோலத்தைக் கண்டோம். போதாதா? ஆள் எப்படி இருந்தான்? அடையாளம் காட்டுவாயா?''

''அடையாளமா? ஆள்... ஆள்... இல்லை... ஏதோ மாடு போலிருக்கிறது. ஆமாம். எருமை மாடு! திடீரென்று பின்பக்கமாக வந்து முட்டி தள்ளி...''

இன்ஸ்பெக்டரின் உதடு இறுகியது. புருவங்கள் ஏறியிறங்கின. சினத்தின் சின்னம் பார்வையில் தென் பட்டது.

''ஓகோ.''கைக்கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டு பேசினார். ''மணி ஒன்றே முக்கால். இந்த வேளையில் தனியாக எங்கே போய்க் கொண்டிருந்தாய்? உன் வீடு எங்கே இருக்கிறது?''

''விடுங்கள் என்னை!'' என்று கூவிக் கொண்டு ஒரே பாய்ச்சலாக ஓடிவிட மாயா பரபரத்தாள். ஆனால் அது இன்னும் பெரிய விபரீதங்களில் கொண்டு விடுமே?

அவள் தவித்துக் கொண்டிருக்கையில், தூக்கக் கலக்கமான கண்களைத் துடைத்துக் கொண்டு ஓர் அரை வழுக்கையான நபர் கையில் பாண்டேஜ் துணி, பஞ்சு ஆகியவற்றுடன் உள்ளே நுழைந்தார்.

இன்ஸ்பெக்டரின் வினாக்கள் நின்றன. கம்பவுண்டர் தன் வேலையைச் செய்து முடிக்கும் வரையில்.

ஊசி போட்ட இடத்தின் ஸ்பிரிட் ஈரத்தைத் துடைத்துக் கொண்டபோது மாயா ஒரு முடிவுக்கு வந்திருந்தாள்.

''ரொம்பக் களைப்பாயிருக்கிறது. இதே சாலையில் தான் என் வீடு. தூக்கம் வராததால் கொஞ்சம் உலாவி விட்டு வரலாமென்று புறப்பட்டேன். மாடு மாதிரி தான் இருந்தது. என்னை யாரும் எதற்காகவும் தாக்க வேண்டிய அவசியம் கிடையாது. எதுவும் களவு போகவுமில்லை.''

மடமடவென்று கூறி முடித்துவிட்டு எழுந்து புறப்பட்டுவிட்டாள் மாயா.

''புகார் ஒன்றும் தேவையில்லை?''

''இல்லவேயில்லை.''

''நூற்றெட்டு! ரிக்ஷா ஸ்டேண்டிலே எவனாவது இருந்தால் அழைத்து வா. ஒரு கான்ஸ்டபிளை உங்கள்

வீடு வரை துணைக்கு அனுப்புகிறேன். அனுப்பலாமோ இல்லையோ?''

''கட்டாயம். ரொம்பத் தாங்க்ஸ் சார்,'' என்று புன் முறுவல் செய்ய முயன்றாள் மாயா. உதடு விகாரமாகக் கோணிக் கொண்ட மாதிரி அவளுக்குப் பட்டது.

ரிக்ஷா வந்தது. ஏறிக்கொண்ட போது கடந்த இரண்டு தினங்களின் நிகழ்ச்சிகள் அவள் மனத்தை ஆட்டின. தனக்குள்ளே ஏதோ ஒன்று புரண்டு உருண்டு கொண்டிருப்பதுபோல் உணர்ந்தாள். ஊஞ்சலின் இரண்டு சங்கிலிகளில் ஒன்று பட்டென அறுந்த மாதிரி, வாழ்க்கையில் ஒரு பிடிப்பு கொடூரமாக அறுந்து நொறுங்கியது. தான் தலைகீழாக ஊஞ்சலாடுவது போலிருந்தது.

என்ன இதெல்லாம்? ஜுரமா? ஜன்னியா? அரைத் தூக்கத்தில் காணும் கனவுகளா? உடம்புக்கு என்ன நேரிட்டது? ஏன் இந்த நிலைகொள்ளாத தவிப்பு?

''அதோ அந்த வீடுதான்,'' என்று ரிக்ஷாக்காரனிடம் அடையாளம் காட்டவே, மிகுந்த சிரமத்துக்குள்ளாகி விட்டாள் அவள்.

கதவு தட்டப்படுகிறது. யாரோ வருகிறார்கள்.

''யார்? மாயாவா? அடி பாவி! எங்கேயிருந்து வருகிறாய்? என்னடி இதெல்லாம்?'' என்று அம்மா அலறுவது வேறு ஏதோ ஓர் உலகத்தில் நடப்பதை, வானத்தில் உட்கார்ந்து கொண்டு பார்க்கிற மாதிரி இருந்தது.

ரிக்ஷாவிலிருந்து இறங்கியது - இறக்கப்பட்டது அவளுக்கு நினைவில்லை.

இனி இங்கே வேலையில்லை.

ராஜரத்தினத்தின் பங்களாவில் மட்டுமல்ல, சென்னையிலேயே வேலை இல்லை.

சட்டக் கல்லூரிப் பரீட்சையிலே வெற்றி மாலை சூடினால், 'விருந்து வைக்க மாட்டேனாக்கும்?' என்று உதட்டைச் சுழித்துக் கொண்டு உரிமையோடு சண்டைக்கு வர கல்யாணி இல்லை.

வக்கீலாகி, தொழிலை ஏற்று, கறுப்பக் கவுனுடன் கோர்ட்டுக்குப் புறப்படுகிறபோது, 'என்ன, கிளம்பப் போகிறாயா இல்லையா?' என்று காரில் அமர்ந்தவாறு ஹாரன் அடித்துக் கூப்பிட, பத்மனாபன் என்பவனோ டிருந்த தோழமை போய்விட்டது.

ராஜரத்தினத்தின் அரவணைப்போ, லல்லியின் கொஞ்சலோகூட இனிப்பெறமுடியாது.

படிப்பு வேண்டாம், பரீட்சை வேண்டாம். அன்பைக் கொடுத்து அன்பைப் பெறும் சாதாரண மனிதனாகச் சென்னையில் வாழக்கூட இனி இடமில்லை.

டிரங்குப் பெட்டி வாயைப் பிளந்து கொண்டு கிடந்தது. அருண் ஒவ்வொரு சட்டையாக, பாண்டாக, துண்டுகளும் கைக்குட்டைகளுமாக மடித்து மடித்து அடுக்கிக் கொண்டிருந்தான் அதனுள். வாழ்க்கையின் ஒரு பகுதியை, இன்பமும் துன்பமும் கலந்த ஏராளமான நினைவுகளை, மண்ணுக்குள் அழுத்தி அழுத்தி மூடிப் புதைப்பதுபோன்ற வேதனை ஏற்பட்டுக் கொண்டிருந்தது.

ஹோல்டாலுக்குள் பெரும்பாலான புத்தகங்கள் முதலியன அடங்கிவிட்டன. 'ஸ்விஸ் ஏர்-பாக்'கில் சில்லறைப் பொருள்கள். இந்தப் பெட்டி. மூன்றே மூன்று. 'மூன்று லக்கேஜ்' என்ற தலைப்பில் அவன் வாழ்க்கை வரலாற்றை எழுதி முடித்து முற்றுப்புள்ளி வைத்துவிடலாம்!

நெஞ்சைக் கரிக்க வைத்த சிரிப்புடன் எழுந்து கொண்டான் அருண். ஒரு மாதம் முன்பு, பல உளைச்சல் களுக்கு நடுவே தவித்துக் கொண்டிருந்தபோது வந்த பம்பாய் அண்ணாவின் கடிதம் அவன் நினைவில் எழுந்தது. அவன் சட்டம் படிப்பதை ஆரம்பித்ததி லிருந்தே விரும்பாதவர் அவர். ''வக்கீல் சம்பாத்திய மெல்லாம் அல்லாடி காலம், சீனிவாசய்யங்கார் காலத் தோடு போய்விட்டது. நீ என் மெனக்கெடுகிறாய்? பிளாஸ்டிக் தொழிற்சாலை சின்னதாக ஆரம்பிக்க உத்தேசம். வந்து சேர்,'' என்று பம்பாய் அண்ணா எழுதியிருந்தார்.

மானேஜர் என்கிற பட்டத்தோடு கம்பெனியின் காரில், கம்பெனியின் செலவில் பம்பாயை விலைக்கு வாங்கி இருக்கலாம்.

அருண், தன் அறையை விட்டு வெளியே வந்து, ஜன்னலருகே நின்று கொண்டான்.

ராஜரத்தினத்தின் உறவு இவ்வளவு விரைவில் விட்டுப்போகும் என்று அவன் நினைக்கவேயில்லை.

பாசம்! என்ன இருந்தாலும், மகளின் கணவன். பேத்தியின் தகப்பன். விடமுடியாத உறவு. நாம் யாரோ வழியோடு போகிறவன். நடுவிலே வந்து நடுவிலே பிய்த்துக்கொள்கிறவன்...

மாடி ஜன்னலிலிருந்து பார்த்தபோது பங்களாவின் உட்புறம் தெரிந்தது.

அருண் பார்த்துக் கொண்டே நின்றான்.

புகைக் குழாயுடன் மெல்ல நடந்து போகிறார் ராஜரத்தினம். ஆமாம். அவருடைய தோற்றத்தில் ஒரு தெம்பு தெரியத்தான் தெரிகிறது. உதட்டின் முனைகளில் ஒரு மர்மமான சிரிப்பு.

கிழண்டை மூலையிலிருந்த ஓர் அறையை மூர்த்திக் காக ஒழித்துக் கொடுத்திருப்பது அருணுக்குத் தெரியும். பங்களாவின் மூன்று வேலைக்காரர்களுக்கும், கார் டிரைவருக்கும் கண்டிப்பான உத்தரவுகள் பிறப்பிக்கப் பட்டிருந்தன - இப்படி ஒரு புது ஆள் வந்து தங்கியிருப் பதைப் பற்றி வெளியே மூச்சு விடக்கூடாதென்று. மூர்த்தி அந்த அறையை விட்டு வெளியே தலை நீட்டு வதில்லை. அவனும் எதற்காகவோ காத்துக் கொண்டு தான் இருக்கிறான். எதற்காக? எதற்காக? அதுதான் புரியவில்லை.

அருண், ஒரு திடீர்ப் பீதியினால் உடம்பு சிலிர்க்க, தன் லக்கேஜுகளிடம் திரும்ப நினைத்தான். அதற்குள் கீழே இன்னொரு காட்சியைக் காண நேரிட்டது.

மூர்த்தியின் அறை வாசலில் ராஜரத்தினம் மெல்லச் சென்று நிற்கிறார்.

அறைக்குள்ளே, வாசலுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் மூர்த்தி, அருகேயிருந்த குழந்தை லல்லியைச் சரேலெனத் தாவி அணைத்துக் கொண்டு, முத்தமாரி பெய்கிறான்.

ராஜரத்தினம் பெருமிதத்துடன் உள்ளே சென்று இருவரையும் தொட்டுக்கொண்டு மௌனமாக நிற்கிறார்.

அருண் பல்லைக் கடித்துக்கொண்டான்.

குழந்தையிடம் மூர்த்தி பிரியம் காட்டியது, ராஜ ரத்தினத்தின் வருகையைப் ஓரக்கண்ணால் கவனித்த பிறகுதான். அதை மேலேயிருந்து அருண் கண்டான். காணாமல் மகிழ்ந்து போகிறவர் அந்த அப்பாவி ராஜரத்தினம்.

வெறுப்பும் ஏமாற்றமும் கோபமும் துக்கமும் மாறி மாறி உள்ளத்தைத் துளைக்க, அருண் வெளிப்புற

மாடிப்படி வழியே தோட்டத்தில் இறங்கி, சாலைக்கு வந்தான்.

''இந்தப் பங்களாவிலிருந்து புறப்பட்டுவிட வேண்டும்'' என்ற அவன் தீர்மானம் மேலும் மேலும் உறுதிப்பெற்றது.

ராஜரத்தினத்திடம் விடை பெற்றுக் கொள்ளுமுன் பம்பாய் அண்ணாவுக்கு ஒரு தந்தி அடித்துக் கேட்டுக் கொள்ளவேண்டும், ''இப்போது வரட்டுமா'' என்று.

சமீபத்தில் எங்கேயோ தபாலாபீஸ் இருந்ததே என்று நினைத்தவாறே வீதி வழியே நடக்கலானான் அருண்.

சுள்ளென்று உறைக்கும் வெய்யிலோ கடகடவென்று விரைந்தோடும் போக்குவரத்தோ அவன் நினைவில் படியவில்லை.

சற்றுமுன்பு கண்ட கபட நாடகத்திலேயே அவன் சிந்தை முழுகியிருந்தது.

ராஜரத்தினத்துக்காக, அவர் பார்க்க வேண்டுமென் பதற்காகவே, எந்தக் குப்பை மேட்டில் செத்தாலென்ன என்று விட்டுவிட்ட குழந்தையைத் தூக்கி வைத்துக் கொஞ்சும் கிராதகன் - அவனுடைய நாடகத்திலே மயங்கிக் கிடக்கும் ராஜரத்தினம்-

ஆனால், ராஜரத்தினத்தின் முகத்தில் சதா குடி கொண்டிருக்கும் புன்னகைக்குப் பொருள்?

இனம் விளங்காத திகிலொன்று அருணைப் பிடித்துக் கொண்டது. வெளிப்படையாகத் தெரியும் இந்த அரங்கத்தின் பின்னே வேறொரு பயங்கரமான நாடகம் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. அல்லது அதற்கான ஒத்திகை நடைபெற்றுக் கொண்டிருக்கிறது...

ஆங்காரத்துடன் புஸ்ஸென்று சீறிக் கொண்டிருக்கும் இரண்டு நச்சுப் பாம்புகளைக் கண்ட மாதிரி, ராஜ ரத்தினத்தையும் மூர்த்தியையும் பற்றி நினைக்கும் போது அருணின் தேகம் படபடத்தது. சிவப்புக் கட்டிடமும் தபால் கூண்டும் அவன் நடையை நிறுத்தின.

நுழைந்து, ''ஒரு தந்தி பாரம்,'' என்றான், இயந்திரக் குரலில்.

''எனக்கு ஒரு தந்தி எழுதித் தரணுமப்பா,'' என்று ஒரு மூதாட்டியின் பரிதாபமான குரல் அவனைத் திரும்ப வைத்தது.

''நீயாடாப்பா! நீதானா! நல்ல வேளை. அந்த ஏழுமலையான்தான் உன்னை அனுப்பினான். ஒண்டியாய் இப்படித் தவிக்கிறோமே, அவள் அப்பா வேறே கிராமத்திலே போய் உட்கார்ந்து கொண்டிருக்கிறாரே, தந்தி அடிக்கலாமென்றால்கூட உதவிக்கு ஒரு ஈ காக்கையைக் காணோமே என்று தவித்துத் தண்ணீராய் உருகிக் கொண்டிருந்தேன். நீ வந்தாயேடாப்பா! என் வயிற்றில் பால் வார்த்தாய்...''

அருண் கொஞ்சம் கொஞ்சமாகத் தன்னியல்புக்கு வந்தான். யார் இந்த அம்மாள், என்ன உளறுகிறாள் என்றெல்லாம் முதலில் திகைத்தவன், பிறகு தெளி வடைந்து, ''நீங்கள் மாயாவின் அம்மா இல்லை? என்னவோ சொன்னீர்களே, என்ன?'' என்றான்.

''மாயாதான். நான் என்ன செய்வேண்டாப்பா! நாலு நாள் முந்தி, நடுராத்திரியிலே எங்கேயோ வெளியே போய்விட்டு வந்தாள். அது முதல் கண்ணைத் திறக் காமல் கிடக்கிறாள். ஜுரம். நீ வாயேன், கொஞ்சம் வந்து பாரேன், பார்த்து எனக்குத் தைரியம் சொல்லேன்,'' என்று அவன் கைகளைப் பிடித்துக் கொண்டாள் மாயாவின் தாய்.

அருண் குழம்பி நின்றான். பல்வகையான உணர்ச்சிகள் அவனை ஆட்டிப் படைத்தன.

# 27

அண்ணாவுக்குத் தந்தி கொடுப்பதற்காகத் தபால் ஆபீசுக்கு வந்தோம் என்பதே மறந்துவிட்டது அருணுக்கு.

''யோசிக்காதேயப்பா. என்னோடு வா,'' என்று அருணின் கையைப் பிடித்துக் கொண்டாள் மாயாவின் அம்மா.

''கொஞ்சம் இருங்கள்,'' என்று நிதானப்படுத்திக் கொண்டான் அருண்.

''மாயாவின் அப்பா விலாசத்தைச் சொல்லுங்கள் முதலில். தந்தி கொடுக்க வேண்டுமென்றீர்களே?''

''ஆமாம், ஆமாம்,'' என்ற மாயாவின் தாய், இடுப்பிலிருந்து ஒரு கசங்கிப் போன காகிதத் துண்டை எடுத்துத் தந்தாள்.''நாலு நாளாய் ஜுரம் என்று வெறுமே கடுதாசி போடு, போதும். தந்தி அடித்தால் அவர் பயப்படுவார். அத்தோடு, நீதான் இப்போது துணைக்கு வந்துவிட்டாயே?''

அவளுடைய கூற்றை மறுத்துக் கொண்டிருக்க வில்லை அருண். ஒரு கார்டு வாங்கி, நாலு வரி எழுதித் தபாலில் சேர்ப்பித்தான். பிறகு புறப்பட்டான்.

வீட்டை அடைந்தபோது, பயந்த அளவுக்கு மாயா படுத்த படுக்கையாகக் கிடக்கவில்லை என்று புரிந்தது.

''நீங்கள் ரொம்பக் காபராகிவாகி விட்டீர்கள்,'' என்று மாயாவின் அம்மாவைக் கடிந்துவிட்டு, அயர்ந்த உறக்கத்திலிருந்த மாயாவின் அருகே ஒரு நாற்காலியைப் போட்டுக் கொண்டு அமர்ந்தான் அருண்.

நான்கு நாட்களுக்குள் இரண்டுமுறை நோய்ப் படுக்கையைப் பார்க்கும் அனுபவம் ஏற்பட்டது குறித்து அவனுக்கே வெறுப்பாயிருந்தது. ஆனால் முந்தையதைப் போலவே இந்த இரண்டாவதன் முடிவும் ஏற்பட்டு விட்டால்...

எண்ணிப் பார்க்கவே ஏன் கஷ்டமாயிருக்கிறது? அருண் தன்னைத் தானே கடிந்து கொண்டான். இவள் கல்யாணியா? அல்ல. பின்னே இவளுக்கு என்ன நேர்ந்தாலென்ன? எதற்காக மனஞ் சஞ்சலம் கொள்ள வேண்டும்?

பக்கத்து முக்காலியின் மீது வைக்கப்பட்டிருந்த மருந்துக் குப்பிகளை எடுத்துப் பார்வையிட்டான். தனது அரைகுறை ஞானத்தைக் கொண்டு, அவை சரியான மருந்துகள்தான் என்பதையும் கண்டுகொண்டான். டாக்டருடைய பெயரும் அவன் கேள்விப்பட்ட ஒன்று தான்.

''டைபாயிடாக மாறிவிடக்கூடாது. அதுதான் பயமாயிருக்கிறது என்று டாக்டர் சொல்லியிருக்கிறார்.'' மாயாவின் தாய் குரல் நடுங்கக் கூறினாள்.

''அப்படியெல்லாம் ஆகாது. கவலைப்படாதீர்கள்,'' என்று அருண் தைரியம் சொல்லிவிட்டு, மீண்டும் தன்னைத் திட்டிக் கொண்டான். ஏன் ஆகக்கூடாது? ஏன் விபரீதமாகத் திரும்பி, விபரீதமாக மடியக்கூடாது? இவள் என் எதிரிதானே? என் கல்யாணி பிடி சாம்ப லானதும் குலுங்கும் மலர்க்காடு குப்பை மேடாக ஆனதும் இந்த மாயாவினால்தானே?

''என்னமோப்பா, நீ பேசுவதைக் கேட்கக் கேட்க எனக்கு வயிற்றிலே பால் வார்த்த மாதிரி இருக்கிறது. நாலு நாளோ, பத்து நாளோ இங்கேயே நீ இருந்தால்

தான் அவளும் பிழைத்து எழுந்திருப்பாள். நானும் தைரியமாயிருப்பேன்,'' என்றாள் மாயாவின் தாய்.

என்ன விசித்திரமான அழைப்பு? பதிலேதும் சொல்லாமல் அமர்ந்திருந்தான் அருண். ''எழுந்திருந்து ஓடு, இங்கே ஒரு வேலையும் இல்லை உனக்கு'' என்று உள்ளத்தின் ஒரு பகுதி விரட்டிக் கொண்டிருந்தது. கால்களுக்கு விலங்கிட்டாற்போல வேறோர் சக்தி அவனைத் தடுத்து நிறுத்திக்கொண்டிருந்தது.

மேடும் குழியுமான ரஸ்தாவில் செல்லும் வாகனம் போல எழும்புவதும் அடங்குவதுமாயிருக்கும் மாயாவின் நோய்வாய்ப்பட்ட உடம்பையே கவனித்துக் கொண் டிருந்தான் அவன். முத்து முத்தாக வியர்த்திருந்தது அவளது வெளிறிய முகத்தில். எண்ணெயையும் சீப்பையும் காணாத கூந்தல் தேங்காய் நார் போல் செம்பட்டையாயும் முறுக்கேறியும் காணப்பட்டது. இமைகள் கனத்து அழுந்தியிருந்தன.

எத்தனை தூசியின் நடுவில் கிடந்தாலும் மாண்பு குன்றாத மாணிக்கம் மாதிரி அவ்வளவு நோயின் கடுமையிலும் மாயாவின் அழகும் இளமையும் தனித்து ஒளி வீசின. செதுக்கினாற் போன்ற நாசி, ரோஜா இதழ் போன்ற விழி, சிமிழ் போன்ற மோவாய். ஆம். மாயாவின் வனப்பு குறைந்துவிடவில்லை. பூவைப் பனி மூடுவது மாதிரி காய்ச்சல் அவளைப் போர்த்தி யிருந்தது. அவ்வளவுதான்.

பார்க்கப் பார்க்க அருணின் உள்ளத்தில் கிளர்ச்சியும் புரட்சியும் உண்டாகத் தொடங்கின. அவளை முதன் முதல் நீதிமன்றத்தில் சந்தித்ததும், கார் விற்பனைக்காக அவளுடன் கூடச் சுற்றியதும் நினைவில் எழுந்தன. துணிச்சலும் தீவிரமுமில்லாத காரணத்தால் கோட்டை விட்டுவிட்ட காதலை எண்ணிப் புழுங்கினான் அவன்.

அருண் நிமிர்ந்து அமர்ந்தான். கோட்டை விட்டு விட்டதாக ஏன் எண்ண வேண்டும்?

அன்று பத்மனாபன் இவளுக்கு வேண்டியவனாய் இருந்தான். நெருங்கிப் பழகினான், சந்தர்ப்பம், காரண மாக. இன்று மூர்த்தி ஜெயிலிலிருந்து தப்பிய பிறகு நிலைமையே வேறாகிவிட்டது. இனி–

நெஞ்சில் நெகிழ்ச்சியும் கண்களில் ஆசையுமாக, அருண் மாயாவையே நோக்கியவாறிருந்தான்.

மாயா மெதுவாய்ப் புரண்டாள் படுக்கையில். சட்டென்று குனிந்தான் அருண் அவள் முகத்தருகே.

"ஏதாவது சாப்பிடுகிறாளா கேளப்பா. கண் விழித்ததும் ஆகாரம் கொடுக்கச் சொன்னார் டாக்டர்," என்று மாயாவின் அம்மா பரபரத்தாள்.

''மாயா!'' தன் குரல்தானா அது? அருணினால் நம்ப முடியவில்லை, அந்தக் குழைவான, இதமான குரல் அவனையும் அறியாமல் வெளிப்பட்டது. ''மாயா! இதோ பார். கண்ணைத் திற.''

அவள் திறந்தாள். இரண்டு மூன்று முறை அறையின் நாலு பக்கங்களையும் சுழன்று பார்த்த பின்னர், பார்வை அருண் மீது நின்றது. முதலில் திகைப்பு, பிறகு அச்சம், பின்னர் ஆறுதல், கடைசியில் கெஞ்சல் – என்று உணர்ச்சிகள் மாறி மாறித் தென்பட்டன.

அருண் இன்னும் தாழக் குழைந்தான்.

''மாயா! என்னைத் தெரிகிறதா? அருண்!''

"ஊம்." அவள் உதடுகள் மெல்ல அசைந்து புன்னகை யால் விரிந்தன. தலையையும் லேசாகச் சாய்த்துக் கொண்டாள் அவன் பக்கமாக.

அருணின் இதயம் படபடத்தது. மாயா தன்னைப் புன்சிரிப்புடன், கனிந்த இதயத்துடன் நோக்குவது இதுவே முதல் தடவை.

''மாயா! ஏதாவது சாப்பிடு. என்ன கொண்டு வரட்டும்?''

''ஹார்லிக்ஸ்.''

''இதோ கொண்டு வருகிறேனடி, என் செல்லமே!'' என்று சொல்லிவிட்டு, சமையல் கட்டுக்கு விரைந்தாள் மாயாவின் அம்மா.

''பாவம், உன் அம்மா ரொம்பப் பயந்துவிட்டாள். நான் வந்துதான் தைரியம் சொன்னேன்.''

அவளுடைய இளநகை பின்னும் விரிந்தது. ''எனக்கும் என் வீட்டுக்கும் எப்போதும் நீங்கள்தான் துணையாயிருக்கிறீர்கள்.''

''எல்லாம் உனக்காக'' தன்னை மீறிச் சொல்லி விட்டான் அருண்.

அந்தப் பண்பற்ற பேச்சினால் அவள் திடுக்கிட்டிருப்பாளோ? முகத்தைக் கூர்ந்து கவனித்தான். இல்லை. மாயா பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. அவள் புன்னகையும் அப்படியே இருந்தது.

உள்ளேயிருந்து பானம் வந்தது. மாயா எழுந்திருக்க முயன்றாள்.

''வேண்டாம், வேண்டாம். அப்படியே இரு. உடம்பை அலட்டிக் கொள்ளாதே'' என்று தடுத்தான் அருண்.

''ஹார்லிக்ஸ் குடிக்கத்தானே?''

பரவாயில்லை. அப்படியே இரு'' மாயாவின் அம்மாவிடமிருந்து டம்ளர்களை வாங்கிக் கொண்டவன், சூட்டை ஆற்றினான். பார்வை அவள்மீது அடிக்கடி

பாய்ந்ததால், பானம் சிந்தியது. குறும்புச் சிரிப்புடன் சமாளித்துக்கொண்டு, டம்ளரை வாயால் ஊதினான்.

பானம் பதமானதும் அவள் அதரம் நோக்கிக் குனிந்து, ''வாயைத் திற,'' என்றான்.

வெளேரென்ற பற்கள் வெளித்தெரிய, காய்ந்த உதடுகளைத் திறந்தாள் மாயா.

''கொஞ்சம் கொஞ்சமாய் ஊற்றுகிறேன். என்ன?'' என்று அவள் விழிகளைச் சந்தித்த வண்ணமே வினவி, டம்ளரை அவள் உதட்டில் வைத்தான்.

இரண்டு மடக்கு விழுங்கியதும் மாயா கண்ணால் சைகை செய்தாள், இன்னும் குனிந்து வருமாறு.

''என்ன, மாயா?''

''எனக்காக ... நீங்கள் ... ஒரு உதவி...''

''என்ன சொல். கட்டாயம் செய்கிறேன். என்ன மாயா?''

அவள் கண்கள் அரை வினாடி காலம் அவன் மீதே தயங்கி நின்றன. பின்னர், ''உங்கள் சிநேகிதர்...'' என்று மறுபடி தயங்கினாள்.

அருணின் முகத்தில் குழப்பம் பரவிற்று. ''எந்த சிநேகிதர்?''

''வக்கீல் பத்மனாபன்...''

''அவனுக்கு என்ன?''

''அவரைப் பார்க்கவேண்டும். உடனே பார்க்க வேண்டும். அவரிடம் சொல்லி அழைத்து வாருங்கள், என்ன?'' ஒரே மூச்சில் படபடப்பாகப் பேசியதால் களைப்பு அவள் கண்களைச் செருகச் செய்தது.

நடுத் தூக்கத்தில் அடித்தெழுப்பப்பட்டவன் போல் அருண் விழித்துக் கொண்டான்.

ஒரு நிமிடம் அவனுக்கு இந்த உலகம் மறந்தது. மறு நிமிடம், அர்த்தமற்ற பித்துக்குளித்தனமான கனவை அசலென நம்பினோமே என்ற வெட்கமும், அந்த மாயைக்குள் தன்னைச் சிக்கவைத்த பெண்ணிடம் கோபமும் பொங்கியெழுந்தன. போதையேறினாற் போன்று இத்தனை நேரம் ஆட்டுவித்துக் கொண்டிருந்த கிறுகிறுப்பு விலகி, தன்னிலை அடைந்தவனாக உணர்ந்தான்.

முரட்டுத்தனமாக விருட்டென்று எழுந்தவன், வேகமாக எதிரே வந்து கொண்டிருந்த மாயாவின் அம்மாவையும் கவனியாமல் மோதிய வண்ணம் வாசலுக்கு நடந்தான்.

மாயா, ''அவரைக் கூப்பிடு அம்மா! கூப்பிடு!'' என்று தன் தாயிடம் அவசரம் அவசரமாகக் கதறுவது காதில் விழுந்தும், அவன் நடை தயங்கவில்லை. வேகம் அதிகப்பட்டது.

அவமானத்தால் அவன் மனம் துடித்தது.

''முட்டாள்தனமான மயக்கத்தில் கிடந்ததற்குச் சரியான அடி கொடுத்து விட்டாள் மாயா. கல்யாணியைக் கொன்ற கொலைகாரியிடம் அரை நிமிடம் பல்லை இளித்துக் கொண்டிருந்தேனே, அதற்குப் பலமான தண்டனை கிடைத்துவிட்டது!'' என்று நினைத்துக் கொண்டான் அவன்.

மாயாவிடமும் பத்மனாபனிடமும் இருந்த வெஞ் சினம் முன்னைக் காட்டிலும் இரண்டு மடங்கு அதிக மாயிற்று.

''கல்யாணி போய்விட்டதால், இடையூறு அகன்று விட்டதென்றா நினைத்திருக்கிறீர்கள்? ஆயிரம் கல்யாணி போனாலும் இந்த ஒரு அருண் இருப்பான். மறக்காதே,

மாயா, மறக்கவே மறக்காதே'' என்று கறுவிக்கொண்டே நடையைத் துரிதப்படுத்தினான். 'அதற்காகவாவது இந்தப் பட்டணத்தை விட்டு போகாமலேயிருப்பேன். உங்கள் ஆசைகளைத் தகர்க்கும் இந்தக் கடப்பாரை நகரவே நகராது வேறிடத்துக்கு...'

எப்படி வழி கண்டோம், எப்படி வந்தோம் என்பதே தெரியாமல் மீண்டும் நுங்கம்பாக்கம் பங்களாவுக்கே திரும்பினான் அருண்.

என்ன பரபரப்பு அங்கே?

வாசல் காப்போன் ஓடிவந்து, ''சாமி, குழந்தையை எங்காச்சும் பார்த்தீங்களா?'' என்றான் பதைபதைப் போடு.

''யார்? லல்லியையா? இல்லையே? எங்கே அவள்?''

உள்ளேயிருந்து வேறு சிலரும் ஓடிவந்து, அவனைச் சூழ்ந்துகொண்டு, ''இந்த ஐயாவும் பார்க்கலையாமே? ஐயையோ!'' என்று பதறினார்கள்.

''என்ன நடந்தது? எப்போது முதல் காணோம்? சொல்லுங்கள், அப்புறம் புலம்பலாம்,'' என்று அருண் அதட்டினான் கோபத்துடன்.

''பெரிய ஐயாவோடு மெரினாவுக்குப் போச்சுங்க காரிலே. செனேட் கட்டிடத்தண்டை காரை நிறுத்திக்கும் படி டிரைவர்கிட்டே சொல்லிவிட்டு, லல்லியைக் கையைப் பிடிச்சு ஐயா அழைச்சிட்டுப் போனாராம். எவனோ வித்தைக்காரன் கூட்டம் போட்டிருந்தானாம். பார்த்துக்கிட்டு நின்னாராம். அஞ்சு நிமிஷம். திரும்பிப் பாாத்தால் லல்லியைக் காணலியாம். குய்யோ முறை யோன்னு அலறிக்கிட்டு, பாவம், யாரண்டையும் சட்டுனு சொல்லவும் முடியாமே தவிச்சுப் போய்...

ஊரெல்லாம் தேடியாச்சு. போலீஸ் ஸ்டேஷனிலே புகார் கொடுத்திட்டு இப்பத்தான் வந்தாரு. பார்க்கவே கண்ணராவியாய் இருக்குதுங்க...''

அதிர்ச்சியினால் பேசும் சக்தியைக்கூட இழந்தவனாகப் பங்களாவுக்குள் பாய்ந்தான் அருண். பலவிதமான சந்தேகங்கள் அவன் மனத்தில் முளைவிட்டிருந்தன.

அருண் மாயாவின் வீட்டில் இருந்த அதே நேரம்.

திருவல்லிக்கேணியில் பல இல்லங்களில், பல உள்ளங்கள், பல உணர்ச்சிகளில் ஈடுபட்டிருந்த போதிலும், ஒன்றே ஒன்று மட்டும் தனித்ததான ஒரு வேதனையில் சிக்கித் தவித்துக் கொண்டிருந்தது.

தூசி! தூசி! தூசி! சுவரிலும் தூசி, புத்தகத்திலும் தூசி, அகத்திலும் புறத்திலும் தூசியைத் தவிர வேறில்லை.

வெறுப்புடன் நகைத்துக் கொண்டிருந்தான் பத்மனாபன்.

காலையில், மேஜைக்கருகே கொண்டு வந்திருந்த டம்ளர் தண்ணீரில் மெல்லிய தூசிப் படலம் படிந்திருந்தது. குடிக்க வாயருகே கொண்டு சென்றவன் கோபமாக வீசியெறிந்தான்.

டம்ளர், டங்கென்று அழுது புலம்பியது, முற்றத்துக் கருங்கல் தரையிடம்.

மேஜைமீது காலை நீட்டிக் கொண்டு, ''வாட்டர்!'' என்று கத்திய காலம் நினைவுக்கு வந்தது பத்மனாபனுக்கு. 'ஊம்! திறவுங்கள் வாயை! அம்மாடி! எவ்வளவு பெரிய வாய்! பயமாயிருக்கிறது! கொஞ்சம் மூடிக் கொள்ளுங்கள்!' என்று கிண்டலுடன் கொஞ்சிக் கொண்டு தண்ணீரை ஊற்றும் வளையல் அணிந்த அந்தப் பொற் கரங்கள் இப்போதும் சப்திப்பது போல் இருந்தது.

*''ஏய்! சரியாய்... ஊ... அஸ்க்! அஸ்க்! கழுதை! கண்ணில்லை? வேண்டுமென்றே தானே மூக்கிலே ஊற்றினாய் தண்ணீரை? தூ, தூ!'' என்று கைக்குட்டை யால் முகத்தைத் துடைத்தவண்ணம் அடுக்கடுக்காய்த் தும்மியதை எண்ணியதும் இப்போதுகூடத் தும்மல் வந்து விட்டது.*

*கல்யாணி! தண்ணீரையல்ல, ஒரேயடியாய் அக்கினித் திராவகத்தையே ஊற்றிவிட்டுப் போய்விட்டாய்! போ, போ! எனக்குத் தெரியும் உன் பின்னாலேயே வர!*

*''சார்! சார்!''*

*''யாரையா அது?'' என்று சள்ளென்று எரிந்து விழுந்தவன் வாசலை அடைந்தான்.*

*''வக்கீலையா...'' என்று தயங்கினார், பழைய துண்டொன்றைக் கழுத்தைச் சுற்றிப் போட்டுக் கொண் டிருந்த ஓர் ஒல்லி மனிதர்.*

*''எந்த ஐயாவும் இல்லை!''*

*''ஏன் சார் இவ்வளவு கோபிக்கிறீங்க? ஒரு பெடிஷன் எழுதித் தரணும். வாசல்லே போர்டு போட்டிருக்குதே என்று கூப்பிட்டேன்.''*

*கூப்பிட்டவர் போய்விட்டார்.*

*எரிச்சலும் ஆத்திரமுமாக, அந்தப் பலகையை வெடுக்கென்று பறித்தான்.*

*பத்மனாபன் பி.ஏ.பி.எல். – அட்வகேட்! பி.ஏ.பி.எல். பத்மனாபன்! அட்வகேட் பத்மனாபன்! அவரைக்காய் பத்மனாபன்! கெட்ட கேட்டுக்குப் பேர் வேறே!*

*கதவை அறைந்து சாத்தித் தாளிட்டுக் கொண்டவன், கண்ணில் நீர் தளும்ப அந்தப் பலகையை மடியில் வைத்துக் கொண்டு உட்கார்ந்தான்.*

இந்தப் பலகையை வாசலில் மாட்டிய அன்று எத்தனை வேடிக்கை! அமளி! கலாட்டா! ஆணியும் சுத்தியும் எடுத்துத் தந்தவள் கல்யாணிதான். ''தெருவெல்லாம் சிரிக்கிறார்கள், உங்கள் போர்டை நீங்களே மாட்டிக் கொள்வதைப் பார்த்து!'' என்கிறாள் கல்யாணி.

''என் போர்டை மாட்டாமல் பின்னே வேறு யார் போர்டைப் போய் மாட்டுவேன்?'' என்கிறான் பத்மனாபன்.

''போதும். இப்படி என்னிடம் கொடுங்கள்,'' வலுக்கட்டாயமாகப் பறித்துக் கொண்டவள், தானே சுத்தியலால் ஓர் அடி போடுகிறாள். ''ஊ!'' என்று மறுகணம் கட்டை விரலைச் சப்புகிறாள்.

''விரல் சப்பும் இருபது வயதுக் குழந்தையைப் பார்த்து இப்போது தெருவே சிரிக்கிறது.''

கல்யாணி நாணத்தோடு ஓடுகிறாள் உள்ளே...

இன்று பலகைதான் மிஞ்சியிருக்கிறது. வெறும் காய்ந்த மரம். உயிரில்லாத உலர்ந்த மரம்.

நானும்தான் என்று எண்ணிக்கொண்டான் பத்மனாபன்.

எதற்காக, யாருக்காக, என்ன லட்சியத்தோடு இனி வாழ்க்கையை ஓட்டுவது?

வாசலில் மறுபடி ஏதோ சப்தம்.

''யாரது?'' என்று உறுமினான் அவன். பதில் குரல் வரவில்லை. ஆனால் கதவைப் பொத் பொத்தென்று மெல்லத் தட்டுகிறார்கள் யாரோ. தட்டக்கூட இல்லை. தேய்க்கிற மாதிரி ஓசை.

''யார்?'' என்று கத்தினான்.

விசும்பிய மாதிரி ஒரு சப்தம்.

குழந்தையின் ஓசை.

வியப்புடன் பத்மனாபன் எழுந்தான் .

# 28

''நிஜம்தானா சார் நான் கேள்விப்பட்டது?'' என்று படபடத்தவாறு ராஜரத்தினத்தின் அறைக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தான் அருண்.

கட்டில் மீது சப்பணம் கட்டி அமர்ந்திருந்த ராஜ ரத்தினம் அவனை நிமிர்ந்து ஒரு முறை பார்த்துவிட்டுத் தலை குனிந்தார்... ஆழம் காணமுடியாத சோகத்தை அவரது விழிகள் காட்ட, கைகள் ஒரு செலுலாய்ட் பொம்மையை உருட்டிக் கொண்டிருந்தன. நேற்றைய வரையிலும் குழந்தை லல்லியுடன் உண்டு உறங்கி, அவளுக்குத் தோழியாக விளங்கிய பொம்மை அது என்று கண்டு கொண்டபோது அருணுக்கும் கண் கலங்கியது. தன் பதற்றத்தை அடக்கிக் கொண்டு மெதுவே உள்ளே சென்று, கட்டிலில் அவர் அருகே உட்கார்ந்து கொண்டான்.

''நீங்கள் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போயிருக்கும் போது குழந்தை எப்படி சார் காணாமல் போவாள்?'' என்று திகைப்புடன் அவன் கேட்டதற்கு ராஜரத்தினம் மறுமொழி கொடுக்கவில்லை. தனக்கும் அதுதான் அதிசயமாயிருக்கிறது என்று தெரிவிக்கும் வகையில் பரிதாபமாக விழிகளைச் சுழற்றினார்.

''போலீஸில் எழுதிவைத்து விட்டீர்களல்லவா?''

ராஜரத்தினம் ஆமென்று தலையசைத்தார்.

''இதுவரை தகவல் எதுவும் கிடைக்கவில்லை?''

ஊஹூம்.

''நாளைக் காலை தினசரிப் பத்திரிகைகளில் விளம்பரம் கொடுக்கலாம். நான் முன்பு எடுத்த போட்டோக்கூட ஒன்று என்னிடம் இருக்கிறது.''

வேண்டாமென்று அவன் கைகளைப் பரபரப்பாக பிடித்துத் தடுத்தார் ராஜரத்தினம். முதல் தடவையாகப் பாக்கெட் புத்தகத்தை எடுத்து, ''வெளியே சொல்ல முடியாத பல சங்கடம். அமளி வேண்டாம்,'' என்று எழுதிக் காட்டினார்.

அருண் அவரை உற்று நோக்கினான். எஃகில் செய்த சிலை மாதிரி உறுதியும் இரும்புத்தனமும் நிறைந்த அந்த மனிதருக்குள்ளே மென்மையான எண்ணங்களும் ஓட முடியுமா? பல கஷ்டங்களை அவர் தானாகவே வரவழைத்துக் கொண்டு தவிக்கிறார் என்று அருணுக்குத் தோன்றியது.

''நீங்கள் வரவர ரொம்ப மர்மமாய் மாறிவிட்டீர்கள்,'' என்றான் குற்றம் சாட்டும் தோரணையில். ''குழந்தைக்கு எத்தனை நகைகள் போட்டிருந்தோம்! கொலைக்கஞ்சாத எந்தப் பாவி என்ன செய்திருப்பானோ...''

அருண் பேசிக் கொண்டிருந்தபோதே அறைக் கதவு லேசாகத் திறந்து கொண்டது. உள்ளே வரலாமோ கூடாதோ என்று தயங்கியவன் போல ஒரு நிமிடம் நின்ற மூர்த்தி, அடுத்த நிமிடம் தன் துயரத்தைக் கட்டுப்படுத்தவே முடியாதவன் போன்று ஓட்டமாய் ஓடி வந்தான். ''மாமா! என்ன மாமா இது! லல்லியைக் காணோமாமே? சொல்லுங்கள் மாமா! என் உயிரே போய்விட்ட மாதிரி இருக்கிறது.... கம்மென்று உட்கார்ந்திருக்கிறீர்கள்?'' என்று ஓவெனக் கூச்சல் இட்டவனாக ராஜரத்தினத்தின் தோளைப் பிடித்து உலுக்கு உலுக்கென்று உலுக்கினான்.

அருண்தான் அருவருப்புடன் விலகி நின்றானே தவிர, ராஜரத்தினம் மருமகனை அன்புடன் அணைத்துக் கொண்டார். அவன் தோளைப் பரிவுடன் தடவிக் கொடுக்கக் கொடுக்க, அவருடைய கண்கள் மளமளவென்று நீரைக் கொட்டின.

அருணுக்கோ ஆத்திரம் ஆத்திரமாய் வந்து கொண்டிருந்தது. எவ்வளவு அறிவாளியான ராஜரத்தினம் எவ்வளவு அப்பாவித்தனமாக ஏமாந்து கொண்டிருக்கிறார் இந்த மோசடியில்!

மூர்த்தியின் புலம்பல் மேலும் மேலும் அதிகரித்தது. ''மாமா! லல்லி இல்லாத வீட்டிலே இப்படி அடைபட்டுக் கிடப்பதைக் காட்டிலும், செத்தாலும் பரவாயில்லை, ஜெயிலுக்குப் போனாலும் பாதகமில்லை மாமா! அட, கடவுளே! முன் மாதிரியே எனக்கு மிருகத்தனமான மனசை மறுபடி கொடுத்துவிடேன். செய்த பாவத்துக்கெல்லாம் வருத்தப்பட்டு புத்தி திருந்தி, என் குழந்தையோடு எப்படியோ காலத்தை ஓட்டி விடுவதென்று இருக்கிற சமயம் பார்த்து இப்படிச் சோதனை கொடுக்கிறாயே, நியாயமா?''

ஊஹூம், இப்படியெல்லாம் அசடு மாதிரி பிதற்றக் கூடாது. என்ன ஆகிவிட்டது இப்போது? எங்கேயோ கூட்டத்தில் தவறிவிட்டாள் குழந்தை. யாராவது பார்த்துப் போலீஸ் ஸ்டேஷனில் கொண்டு போய் ஒப்படைப்பார்கள். தன்னாலே வந்து விடுவாள் பார், பொழுது விடிவதற்குள்.

—இவ்வளவையும் ஜாடையில் கூற முயன்று கொண்டிருந்தார் ராஜரத்தினம்.

"என்னை விடுங்கள் மாமா, வெளியே. அதுவே போதும். நான் இந்தப் பட்டணம் பூரா சல்லடை போட்டுச் சலித்து என் செல்லத்தைக் கொண்டு வரவில்லை என்றால் என் பெயர் மூர்த்தியே இல்லை!'' என்று ஆவேசத்துடன் சூளுரைத்தான் ராஜரத்தினத்தின் மருமகன்.

அருணுக்கு அடக்க மாட்டாதபடி ஆகிவிட்டது. ஓரடி முன்னே வந்து, ''மூர்த்தி! குழந்தையோடு சார் வெளியே போயிருந்தபோது தாங்கள் எங்கே இருந்தீர்கள்?'' என்று குறுக்கு விசாரணை செய்தான்.

மூர்த்தியின் திகைப்பு வெளிப்படையாகத் தெரிந்தது. ''ஏன்? ஏன்? என் அறையிலேயேதான் இருந்தேன். வேறு எங்கேயும் நகரக் கூடாதென்று மாமாதான் ரொம்பக் கண்டிப்பாய்க் கட்டுப்பாடு போட்டிருக்கிறாரே!''

''அதனாலென்ன? மற்றவர்கள் கண்ணில் மண்ணைத் தூவி விட்டு வெளியே புறப்படுவது தங்களுக்கு ஒரு அரிய பெரிய வேலையா என்ன?''

''உஸ்!'' என்று ராஜரத்தினம் கண்டித்தார் அருணை.

மூர்த்தி தடுமாறினான். ''நீங்கள்... நீங்கள்... என்ன நினைக்கிறீர்கள்?''

''நினைப்பதென்ன, தங்களுக்குத் தெரியாததா? குழந்தையோடு இவர் வெளியேறினதும் தாங்களும் பின்தொடர்ந்து சென்றிருப்பீர்களோ என்றுதான் கேட்டேன். லல்லியிடம் தங்களுக்குள்ள அலாதியான அபாரமான அமோகமான பிரியம்தான் உலகம் அறிந்த தாயிற்றே! அதனால் தாங்களே குழந்தையை...''

ராஜரத்தினம் கோபமாக உறுமினார் அருணை நோக்கி. மூர்த்தி சீறவுமில்லை, சினம் காட்டவுமில்லை. அவமானத் தாலும் வருத்தத்தாலும் தாங்கொணாத அடிபட்டவன் போல உடம்பை ஒரு சாணாகக் குறுக்கிக் கொண்டான். தலையை இரு கைகளாலும் பற்றிக் கொண்டு, ''என் விதி இது. யாரைச் சொல்ல முடியும்? நியாயம்தான் என் மீது எல்லாரும் சந்தேகப்படுவது,'' என்று தொண்டை அடைக்க அடைக்க விசும்பத் தொடங்கினான்.

கட்டிலிலிருந்து கோபமாக எழுந்து கொண்டார் ராஜரத்தினம். அருணை விரைந்து நெருங்கி, முரட்டுத் தனமாகத் தள்ளினார் வாசலை நோக்கி. அவர் கைகள் ஆவேசமாய்க் கதவைத் திறந்தன. விரல்கள் வாசல் புறத்தைச் சுட்டிக் காட்டி, ''போ வெளியே!'' என்று ஆங்காரத்துடன் சொல்லின.

''வேண்டாம் மாமா, வேண்டாம்!'' என்று பாய்ந்தோடி வந்து குறுக்கே நின்றான் மூர்த்தி. ''எனக்காக உங்களுக்குள் சண்டை வேண்டாம். நான் போய்விடுகிறேன் இந்த வீட்டை விட்டே. எனக்காக மிஸ்டர் அருணைப் பகைக்காதீர்கள். எப்படியும் என்னைக் காட்டிலும் இவர் தான் உங்களுக்கு உற்றவர். இவருடைய நல்ல இதயமும் நாணயமும் விசுவாசமும் எனக்கு ஒரு நாளும் வராது.''

அருணுக்கு ரத்தம் கொதிக்கத் தொடங்கியது. ''ரொம்ப நன்றி மிஸ்டர் மூர்த்தி. தங்களிடமிருந்து ஒரு நற்சாட்சிப் பத்திரம் கிடைக்க நான் எத்தனை பாக்கியம் பண்ணியிருக்க வேண்டும்!''

''ஊம்!'' என்று ராஜரத்தினம் கர்ஜித்தார். கோபத் தினால் அவருடைய ஆறடி சரீரம் தடதடவென்று ஆடிக் கொண்டிருந்தது.

''பொறுங்கள் ராஜரத்தினம் சார். நான் உங்களைப் பற்றி எப்படியெல்லாமோ அதிசயப் பட்டுக்கொண் டிருந்தேன். கடைசியில், கண்ணை மறைக்கிற அசட்டுப் பாசம் கொண்ட சாதாரண மனிதர்தான் என்று நிரூபித்து விட்டீர்கள். ஒருவேளை இந்த மூர்த்தியின் வேடம் கலைந்த பிறகு உங்களுக்கு அஞ்ஞானம் விலகி மன உறுதி ஏற்படுமோ என்னவோ!''

''நீ எனக்குப் புத்தி சொல்லத் தேவையில்லை. போ வெளியே என்றால் போ வெளியே!'' என்றுதான் ராஜரத்தினம் சொன்னார் போலும். அதற்கேற்ற கைகளும் உறுமல்களும் அவரிடமிருந்து வெடித்துப் பீரிட்டன. அந்த உணர்ச்சிக் கொந்தளிப்பில் அவருடைய விழிகள் சிவந்து கொதித்தன. உதடுகள் அனல் வீசின. தலையின் ஒவ்வொரு ரோமமும் குத்திட்டு நிற்க, மார்பைச் சரேலெனக் கையால் அழுத்திப் பிடித்துக்கொண்டு கட்டிலுக்குத் திரும்பினார் அவர். தலையணையின் மீது டொாத்தென்று சாய்ந்தார்.

''மாமா!'' என்று ஓடிச் சென்று அவரை மார்பில் சாய்த்துக் கொண்டான் மூர்த்தி.

அருண் நிதானத்துக்கு வந்தான்.

''ஏன்தான் இப்படிப் பதறினீர்களோ? டாக்டர் என்ன சொல்லியிருக்கிறார், நினைவில்லை?'' என்றவாறு மருந்துகள் வைத்திருந்த அலமாரியை அணுகினான். ராஜரத்தினத்துக்கு அடிக்கடி நெஞ்சு வலி வருவதும், அதற்காக டாக்டர் பிரத்தியேகமான மாத்திரைகள் தந்திருப்பதும் அவன் அறிவான்.

''நீ எடுக்க வேண்டாம்!'' என்று தடுக்கும் வகையில் பயங்கரமாகக் கூச்சலிட்டார் ராஜரத்தினம்.

அருண் பிரமித்து நின்றான்.

மருமகனின் மார்பிலிருந்து விலகிப் படுக்கையில் சாய்ந்து கொண்டார் ராஜரத்தினம். கனிவுடன் மூர்த்தியை நோக்கி, ''நீ போய் எடுத்து வா மருந்தை,'' என்று ஜாடை காட்டினார். பிறகு அருணைப் பார்க்கவும் பிடிக்காதவர் போல முகத்தைத் திருப்பிக் கொண்டார்.

ஊமை, ராஜரத்தினம் மட்டும் அல்ல, அருணும்தான். தன் செவிகளையும் கண்களையும் நம்ப மாட்டாத வனாகச் சிலையாகி நின்றான் பல வினாடிகள். அவன் ஒருவன் அங்கே இருப்பதையே கவனியாத மாதிரி, ராஜரத்தினம் அருந்துவதும், மின்விசிறி சுழற்றப்படுவதும், ஜன்னல்கள் திறக்கப்படுவதுமாகப் பல காரியங்கள் தானாகவே நடைபெற்றன.

அருண் நிதானத்துக்கு வந்தான். அடிக்கும் கட்டுப் படாமல் அன்புக்கும் தலைவணங்காமல் முரண்டு பிடிக்கும் குழந்தையைக் கண்டு தாய் பிரமிப்பது போல, ராஜரத்தினத்தின் மனப்போக்கைப் புரிந்து கொள்ளாத குழப்பத்துடன் மெல்ல விலகி வெளியே வந்து கதவைச் சாத்திவிட்டு நடந்தான் அடிமேலடி வைத்து.

''மாமா, என்னால் உங்களுக்கு எத்தனை தொல்லை!'' என்று மூர்த்தி தன்னை நொந்து கொள்ளத் தொடங்கினான் அறைக்குள்ளே.

''சே! அவன் கிடக்கிறான் கழுதை! விடு!'' என்று சொல்வது போல அலட்சியமாகக் கையை வீசினார் ராஜரத்தினம். அவருடைய தேகத்தில் படபடப்பு சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டிருந்தது. கையை ஊன்றி எழுந்து உட்கார்ந்தவர், நிதானமாகப் பக்கத்து முக்காலியிலிருந்து புகைக் குழாயையும் லைட்டரையும் எடுத்தார்.

சட்டென அவற்றைப் பறித்தான் மூர்த்தி. ''எனக்கு ஒன்றும் தெரியாதென்று நினைக்காதீர்கள். நெஞ்சு வலி இருப்பதால் சிகரெட் பிடிக்கக் கூடாதென்று டாக்டர் சொல்லியிருக்கிறார் இல்லையா?''

''ஆமாம்... உனக்கெப்படித் தெரியும்?'' என்று கேட்கும் பாவனையில் அசட்டுச் சிரிப்புடன் விழிகளை உயர்த்தினார் ராஜரத்தினம்.

''சமையல்காரன் சொன்னான். நீங்கள்தான் என்னை நம்பி எதுவும் சொல்வதில்லையே தவிர, நான் உங்களைப் பற்றி ஏதாவது கவலைப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறேன்.''

''இந்த ஒரே ஒரு தரம் '' என்று கெஞ்சி, புகைக் குழாயைப் பெற்றுக் கொண்டார் ராஜரத்தினம். புகை வளையங்கள் அவரை வட்டமிடத் தொடங்கின. பாக்கெட் நோட்டை எடுத்தவர், ''நெஞ்சுவலி மருந்து வேளா வேளைக்கு நீயே எடுத்துக் கொடு. ஆறு மணிக்கு ஒரு மாத்திரை,'' என்று எழுதிக் காட்டினார்.

''காத்துக் கொண்டிருக்கிறேன் மாமா,'' என்று பதிலளித்தான் மூர்த்தி. பிறகு விட்டத்தை நோக்கியபடி மௌனத்தில் ஆழ்ந்தான்.

அவனைத் தொடையில் தட்டினார் ராஜரத்தினம். புருவங்கள் உயர்ந்தன. என்ன யோசனை?

''ஒன்றுமில்லை.'' தயங்கித் தயங்கிப் பேசலானான் மூர்த்தி. ''இப்படியே அதிக நாளைக்கு இந்தச் சென்னை நகரத்தில் ஓட்ட முடியாது.''

அதனால்?

''சென்னை நகரமென்ன, இந்தியாவிலேயே இனி இருக்க முடியாது.''

பின்னே?

''லல்லியும் கிடைத்துவிடட்டும். நான் ஒரு யோசனை பண்ணி வைத்திருக்கிறேன்''

என்ன?

''சிங்கப்பூருக்குப் போய்விடலாமென்று.''

ஆ!

சற்றுப் பின்னடைந்தவராக ராஜரத்தினம் கட்டிலில் சாய்ந்து அமர்ந்தார்.

''ஆமாம் மாமா.'' கவலையுடனும் துடிப்புடனும் அவரது கரங்களைப் பற்றிக் கொண்டான் மூர்த்தி. ''என் குழந்தையுடன் புதிய தேசத்துக்குப் போய் விடுகிறேன். யாரைக் கண்டும் பயப்படத் தேவையில்லாத இடத்தில் என் புதிய வாழ்க்கையை ஆரம்பித்துக் கொள்கிறேன். ஆனால் அதற்கு நீங்கள்தான் உதவி செய்ய வேண்டும்.''

ராஜரத்தினம் பதில் கூறவில்லை. தலை நிமிரவும் இல்லை.

மூர்த்தி தொடர்ந்தான், ''காலூன்றிப் பிழைத்துக் கொள்ள எனக்கு ஒரு வசதி பண்ணிக் கொடுங்கள் போதும். புதிய இடத்தில் ஏதாவது பெரும் பிஸினஸ் பண்ணி, நானும் தங்களைப் போன்ற உழைப்பாளிதான் என்பதை நிரூபித்துக் காட்டுகிறன். ஆனால் பைசாகூட மூலதனம் இல்லாமல், வெறும் கையைக் கொண்டு முழம் போட முடியாதே.''

ஆகவே? ராஜரத்தினம் நிமிர்ந்து நோக்கினார்.

''ஐம்பதாயிரம் ரூபாய் கொடுங்கள். ரகசியமாகக் கப்பலேறிவிடுகிறேன் வெளிநாட்டுக்கு.''

ஹூம். ஒரு பெருமூச்சுடன் முகத்தைத் திருப்பிக் கொண்டார் ராஜரத்தினம்.

''ஏன் மாமா? என்மீது உங்களுக்கு நம்பிக்கை பிறக்கவில்லையா?''

அப்படியில்லை, இல்லவேயில்லை என்று தலையைப் பலமாக ஆட்டி மறுத்தார் ராஜரத்தினம்.

''பின்னே? ஐம்பதாயிரம் ரூபாய் உங்களுக்கு ஒரு பொருட்டா?''

''ஆமாம்.'' ராஜரத்தினத்தின் சிரம் மேலும் கீழு மாக அசைந்தது. பென்சில் நோட்டின் மீது ஓடியது. ''இப்போது எனக்கு ரொம்ப நெருக்கடி. ஐந்து லட்சம் ரூபாய் முடங்கிக் கிடக்கிறது. நாளொன்றுக்குப் பத்தாயிரம் ரூபாய் நஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.''

அவரை நம்ப இயலாதவனாக, விழிகளை அசைக்காது நோக்கினான் மூர்த்தி.

ஆனால் ராஜரத்தினம் மேற்கொண்டு அதைப் பற்றிப் பேச விரும்பவில்லை. கைக்கடியாரத்தைச் சுட்டிக்காட்டி, அவனை முதுகில் தட்டிப் பரிவுடன் அனுப்பினார்.

மூர்த்தி, கைகளைப் பின்புறம் கட்டிக் கொண்டு சிந்தனையுடன் வெளியேறினான் மெதுவாக.

கூர்ந்து கவனித்தார் ராஜரத்தினம், காலடியோசை மறைகிறதா என்று.

அடுத்த கணம் அவர் சுறுசுறுப்படைந்தார். கட்டிலில் இருந்து குதித்தெழுந்தார். தலையணைக்கடியிலிருந்து கொத்துச் சாவியை எடுத்தவர், பெட்டகத்தின் அருகில் சென்று உட்கார்ந்து கொண்டார். திறந்தார்.

பசித்தவனின் வயிறு போலக் காய்ந்து வெறுமையாகக் கிடக்கவில்லை பெட்டகம்.

கள்ளமற்ற குழந்தையின் சிரிப்பைப் போல நிறைவுடன் பிரகாசித்தது.

கட்டுக் கட்டான கரென்ஸி நோட்டுக்களையும், கொத்துக் கொத்தான விலையுயர்ந்த ஆபரணங்களையும் ஆசையுடன் எடுத்துத் தன் பக்கத்திலே பரப்பி வைத்துக் கொண்டார். ரூபாய் நாணயங்களும் நகைகளும் பல முறை நழுவித் தரையில் விழுந்து கலீர் கலீரென்ற ஓசைகளை எழுப்பின.

எண்ணற்ற செல்வத்தின் திரட்சியிலே முக்குளித்துக் கொண்டிருந்த ராஜரத்தினம் இந்த உலகத்தையே மறந்திருக்க வேண்டும்.

இல்லாவிட்டால், அறையின் கதவு மெல்லத் திறக்கப்படுவதை அவர் கவனித்திருக்க மாட்டாரா? விழிகள் தெறித்து விடும்போன்ற பிரமிப்புடன் தன் மருமகன் மூர்த்தி அந்தச் செல்வக் கொழிப்பைக் கவனித்துக் கொண்டிருப்பதை அறிந்திருக்க மாட்டாரா?

# 29

''ஊமைதான் நான். ஆனால் எனக்குப் பல செவிகள் உண்டு. ஆகவே உன்னைப் பற்றி முழுக்க முழுக்கத் தெரிந்து வைத்திருக்கிறேன்''

என்ன, ஏது, எதற்காக என்றெல்லாம் கேட்காமல் நான் ஒப்படைக்கும் பொறுப்பை ஏற்றுக்கொள். இறந்து போன என் மனைவியின் பெயரால் உன்னைக் கேட்டுக் கொண்டு இதைத் தருகிறேன். மறுக்காதே.

உனக்குச் செலவில்லாமல் சிரமமில்லாமல் இருக்க எல்லா ஏற்பாடுகளும் செய்து வைத்திருக்கிறேன். வெகு விரைவில் உனக்குத் தெரியவரும்.

இந்த உலகத்தில் எனக்கு வேண்டியவர்களென்று அதிகம் பேர் கிடையாது. நான் அறிந்தவரையில், இரண்டு பேர்தான் நம்பிக்கைக்கு உகந்த நல்லவர்களாக இருக்கிறார்கள். ஒருவன் அருண், மற்றவன் நீ. ஆனால் அருண் உணர்ச்சி வசப்படுகிறவன். இளம் பிராயத்தின் ஆத்திரங்களுக்கும் அவசரங்களுக்கும் இரையாகிறவன். நல்லவனானாலும் அவனை நம்புவதற்கில்லை. நீ, ஆழமுள்ள இதயம் படைத்தவன். எதிலும் நிதானம் தவறவிடாதவன். காதல் விவகாரம் ஒன்றில் தவிர. (இப்படி எழுதுவதற்காகக் கோபிக்காதே. அதில் சிறிது அவசரப்பட்டுத்தான் விட்டாய். இனிப் பரவாயில்லை.) ஆகவேதான், அருணைக்காட்டிலும் நீயே தகுந்தவனென்று உன்னிடம் ஒப்படைத்தேன்.

"நான் ஒண்டிக்கட்டை; என்னால் எப்படி முடியும்?" என்று சொல்லாதே. வாழ்க்கையை விரைவிலேயே ஆழத்துடனும் அஸ்திவாரத்துடனும் அமைத்துக் கொள்வாய் நீ. எனக்குத் தெரியும். அந்தச் சந்தர்ப்பத்தில், இந்தப் பொறுப்பு உன் மகிழ்ச்சியை இன்னும் அதிகரிக்கும். முக்கியமாக, மூர்த்தியின் வழக்கினால் உனக்கு ஏற்பட்ட அதிர்ச்சியையும் அவமானத்தையும் மறந்து, புதிய ஏட்டை நீ புரட்டுவாய். அறிவேன்.

கூடுமானவரையில் இந்த விஷயத்தை வெளியிடாமலே இரு – எனது ஏஜெண்ட் உன்னிடம் வந்து மற்ற விவரங்கள் தெரிவிக்கும் வரையில். ஒப்படைத்ததை மறுத்து என்னிடம் திரும்பவும் திருப்பாதே.

உனக்குக் கடவுள் எல்லா நலன்களும் அருள்வாராக."

அன்புடன்

ராஜரத்தினம்.

பத்மனாபன் கடிதத்தை ஒரு முறைக்கு இருமுறை வாசித்தான். உடம்பில் பரபரப்பும் சிந்தனையில் சுறுசுறுப்பும் ஏற்பட்டன. வாழ்க்கையின் கடைசி அத்தியாயத்தை முடித்துவிட்டதாக எண்ணி, உத்திரத்தைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த போது முற்றுப் புள்ளி அரைப்புள்ளியானது என்ன விந்தை! கையைச் சிறு துரும்பும் இல்லாமல் கழுவிக் கொண்டு விட்ட தாகக் கருதியிருக்கையில் கனக்கக் கனக்க ஒரு பொறுப்பு வந்து சேர்ந்தது என்ன வேடிக்கை!

குனிந்து பார்த்தான்.

அந்தப் 'பொறுப்பு,' இரண்டு முழங்காலையும் இரண்டு கைகளால் கட்டிக் கொண்டு, மோவாயை முழங்கால்மீது பதித்துக் கொண்டு அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தது.

பார்க்கப் பார்க்க, சாந்தமானதோர் உணர்வு மெல்ல மெல்லப் பத்மனாபனின் இதயத்தில் படியத் தொடங் கியது, பாலின் மீது ஆடை படிவது போல். அதனுடைய பிதுக்கிய உதடு, கண்ணில் தென்பட்ட கபடமற்ற சினம், ரோஷத்துடன் திருப்பிக் கொள்ளும் தலை, முசுட்டுத் தனமாகப் பின்னிக் கொள்ளும் கை விரல்கள் - இந்தப் பாவங்களைக் காணக் காணப் பத்மனாபனுக்குச் சிரிப்புப் பொத்துக்கொண்டு வந்தது.

''கோபமா என்கிட்டே?'' என்றான் கொஞ்சலாக.

அது பதிலளிக்கவில்லை. உதட்டைச் சுழித்து 'அழகு' காட்டிவிட்டு, இன்னொரு பக்கமாகத் திரும்பிக் கொண்டது.

''கழுதை!'' என்று செல்லமாகத் திட்டிவிட்டு, ஆட்டுக் குட்டியைத் தூக்குவதுபோல் அள்ளி எடுத்துக் கொண்டு உள்ளே விரைந்தான் பத்மனாபன். கட்டில் மீது பொத்தென்று உட்கார்த்தி வைத்துவிட்டு, ''நீயும் என்னோடு பேசவேண்டாம். நானும் உன்னோடு பேச

வில்லை, போ!'' என்று சொல்லி, தானும் எதிர்ப்புற மாகத் திரும்பி உட்கார்ந்து கொண்டான்.

இரண்டு நிமிடம் ஓடியது.

சின்னஞ்சிறிய பாதங்கள் மெத்தையில் குழிகள் ஏற்படுத்த அது மெதுவே எழுந்து நடந்து வந்து, பத்மனாபனின் கழுத்தைக் கட்டிக் கொண்டது. கையில் அணிந்திருந்த வளையல்கள் பத்மனாபனின் கழுத்தையும் மோவாயையும் உரசியபோது அது உறுத்தலாயில்லை. உலகத்திலேயே மிகச் சக்தி வாய்ந்த ஔடதமாகத் தேகத்தைப் புல்லரிக்கப் பண்ணியது.

''நானும் நீயும் ப்ரண்ட்ஸ்'' என்று அறிவிப்பது போல அவன் மடியில் அமர்ந்தது அது.

''சமர்த்து'' என்று பாராட்டினான் பத்மனாபன். முன்பின் தெரியாத தன்னிடம், முதல் சந்திப்பிலேயே ஒட்டிக் கொண்டது குறித்து அவனுக்கு உள்ளூரப் பெருமை. தன் முகராசியாய்த்தான் இருக்க வேண்டும்! அதன் தலையைக் கோதிக்கொண்டே, ''உன் பேரென்ன?'' என்றான்.

''ளள்ளி.''

''லல்லி! அடேயப்பா! அந்தக் கால்த்தில் சக்கைப் போடு போட்ட மகா பெரிய ஸ்டாராயிற்றே நீ! ஆகா!'' என்று குழந்தையைத் தன் எதிரே எழுப்பி நிறுத்தி வைத்துக் கொண்டு பேசினான் பத்மனாபன். ''ஏம்மா, நீங்க ஏன் கல்யாணத்துக்கப்புறம் படங்களில் நடிக்காமல் இருந்துட்டீங்க?''

லல்லிக்கு அதன் பொருள் விளங்கவில்லையே தவிர, ஏதோ விளையாட்டாய்ப் பேசுகிறானென்னு புரிந்ததால் கன்னம் குழியக் குழியப் புன்னகை பூத்தாள்.

''யாரோடு வந்தாய் நீ?''

''தாத்தா.''

''எங்கே அவர்?''

''போயித்தார்.''

''சாப்பிட்டுவிட்டாயா நீ?''

''ஊஹூம்.''

பத்மனாபன் அறையைச் சுற்றும் முற்றும் பார்த்தான். அலமாரியில், எப்போதோ வாங்கி வைத்திருந்த பிஸ்கெட் பாக்கெட் பாதி பிரிந்து கிடந்தது. அதிலிருந்து இரண்டு பிஸ்கெட்டுகளை எடுத்து, எறும்பை ஓட்டிவிட்டுக் குழந்தையிடம் கொடுத்தான்.

''உனக்கு?'' என்று கேட்ட லல்லி, ஒன்றை அவன் வாயிலேயே போட்டாள்.

பசி என்ற ஒன்றை நீண்ட நாட்களுக்குப்பின் உணர்ந்தான் பத்மனாபன். பொய்யான வெறுப்புகளும், எரிச்சல்களும் விடைபெற்றுக் கொண்டதால், உடம்பையும் அதைப் பேண வேண்டிய அவசியத்தையும் முதன் முறையாக நினைவுபடுத்திக் கொண்டான்.

''லல்லி, உனக்குச் சமைக்கத் தெரியுமோ?''

''ஓ,'' என்று பலமாகத் தலையாட்டினாள் குழந்தை.

''எதிலே சமைப்பாய்?''

''சொப்பிலே.''

கடகடவென்று சிரித்தவாறு லல்லியைத் தூக்கித் தோளில் சாத்திக் கொண்டவன், சமையலறையை அடைந்து விளக்கைப் போட்டான்.

அண்டை அயலெல்லாம் அயர்ந்து உறங்கிவிட்ட அந்த நேரத்தில், அந்த ஒரு வீட்டில் மட்டும் கடபடா வென்று ஓசைகள் கேட்கலாயின.

''மாமி! அந்தக் கிழங்கை நன்றாய்த் தண்ணீரிலே அலசிக் கழுவி வையுங்கள். நான் உலை வைக்கிறேன்,'' என்றான் பத்மனாபன்.

''தெரியாது மாமா!'' என்று கைவிரித்தாள்.

''ஐயய்ய! மாமி சாமர்த்தியம் அவ்வளவுதானா? பூ! பூ! பூ!'' என்றான் பத்மனாபன். ''சரி, மாமி. இன்றைக்கு ஒரு நாள் மட்டும் நான் செய்வதைக் கவனித்து வைத்துக் கொள்ளுங்கள். நாளையிலிருந்து நீங்கள்தான் பண்ணணும். அதுவும் நான் கோர்ட்டுக்குப் புறப்படு வதற்குள்ளே, இரண்டு கூட்டு, மூன்று கறி, நாலு பச்சடி, ஒரு அவியல், ஒரு துவையல், அப்பளம், பாயாசம், வடை, மோர்க்குழம்பு, மைசூர் ரசம் - இத்தனையும் பண்ணணுமாக்கும்!''

''ங்கம்மாடி!'' என்று மோவாயைத் தோளில் இடித்துக் கொண்டு. தன் அகன்ற விழிகளைப் பிரமிப் புடன் சுழற்றினாள் லல்லி.

''ங்கம்மாடியாவது ஆத்தாடியாவது? நான் பொல்லாத மாமாவாக்கும்! ஹூக்கும்!'' என்று சொன்னபடி பத்மனாபன் அரிசியைக் களைந்து போட்டு உலை வைத்தான். இன்னொரு ஸ்டவ்வையும் மூட்டி, உருளைக் கிழங்கை வேகப் போட்டான். கல்யாணி செய்யும் போது கண்ணால் பார்த்துப் பார்த்து ஏற்பட்டிருந்த - ஆனால் ஒருமுறைகூடச் செய்து பார்க்காத - பழக்கம், அவனைத் தயக்கமின்றி இயக்கிற்று.

''ரசம் வைக்கிறதிலே மட்டும் இந்த ஐயா முன்னாலே யாரும் நின்னுக்க முடியாது! தெரியுமா லல்லி!''

பதில் இல்லை.

திரும்பிப் பார்த்தான்.

வெறும் தரையில், புழுதியோடு புழுதியாக, கையே தலையணையாக்கிக் கொண்டு கண்ணயர்ந்திருந்தது அந்தக் கோடீசுவரன் வீட்டுக் குழந்தை.

சாதம் கொதித்தது; கிழங்கு கொந்தளித்தது. அமைதி படிந்த உள்ளத்துடன், லல்லியனருகில் உட்கார்ந்து

அதன் தலையைத் தன் மடிமீது வைத்துக் கொண்டான் பத்மனாபன்.

கடந்த அறுபது நிமிடங்களுக்குள் தன் வாழ்வில் ஏற்பட்டுவிட்ட நம்பற்கரிய புரட்சி, எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் திகைக்க வைத்தது அவனை.

தற்கொலையை நோக்கித் தாவிக் கொண்டிருந்த மனத்துடன் தன் அறைக்குள்ளே அடைந்து கிடந்தது; வாசலில் யாரோ கதவைத் தட்டுவது போலச் சத்தம் கேட்டது; ஒரு குழந்தையின் விசும்பல் மாதிரி ஓசை வந்தது; திடுக்கிட்டு வாசலை அடைந்தபோது, கையில் ஒரு கடித உறையுடன் இந்தக் குழந்தை கண்ணைக் கசக்கிக் கொண்டு நின்றது; வேறு ஈ காக்கையைத் தெருவில் காணாதது – அவ்வளவும் பத்மனாபனுடைய நினைவில் சுழன்றன.

என்ன விசித்திர நிகழ்ச்சிகள்!

மூர்த்தியின் அப்பீலுக்காகக் கோர்ட்டில் வாதாடுவதற்கு முன்பே, அவனைப் பற்றிய தகவல்கள அரைகுறையாக அவனுக்கு எட்டியிருந்தன. திடீரெனத் தப்பியோடித் தன்னைக் காலைவாரி விடுவானென்றுதான் பத்மனாபன் எதிர்பார்க்கவில்லையே தவிர, மற்றபடி மூர்த்தியைப் பத்தரை மாற்றுத் தங்கம் என்று அவன் ஒருநாளும் எண்ணியது கிடையாது.

ராஜரத்தினத்தைப் பற்றியும் மூர்த்தியைப் பற்றியும் அவனுடைய முந்திய வாழ்க்கையைப் பற்றியும் அருணும் கல்யாணியும் அவ்வப்போது சொன்னவை இப்போது உதிரி உதிரியாக நினைவில் எழுந்தன. மரத்தடியில் உதிர்ந்து கிடக்கும் பூக்களைப் பொறுக்கிச் சரம் கட்டுவதுபோல, துண்டு துண்டான தகவல்களைப் பத்மனாபன் ஒன்று கூட்டிப் பார்த்தான். வழக்கறிஞனான அவனுக்கு உண்மையை ஊகிக்க அதிக நேரம் பிடிக்கவில்லை.

தப்பியோடியுள்ள மூர்த்தியினால் தனக்குத் தீங்கு நேரும் என்று ராஜரத்தினம் கருதுகிறார். குறைந்தபட்சம் இந்தக் குழந்தையாவது பாதுகாப்பாக இருக்கட்டும் என்று தன்னைத் தேடி வந்து ஒப்படைத்துவிட்டுப் போயிருக்கிறார். பேச முடியாத சங்கடத்தோடு, மறுத்து விடுவோமோ என்ற பயமும் சேர, தன்னை நேரில் சந்திக்காமலே சென்று விட்டார். ஆனால் நிச்சயம், கடிதத்தைப் படித்து முடித்து, குழந்தையை உள்ளே அழைத்துச் செல்கிறேனா என்பதை எங்கேயோ நின்று பார்த்து நிச்சயப்படுத்திக் கொண்டுதான் போயிருப்பார்...

ஆனால் இந்தப் பொறுப்பை அவர் ஒப்படைத்தது எப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில்! ராஜரத்தினம் என்ன, மனத்தத்துவம் அறிந்த மேதையா! எந்த மனநிலையில் யாருக்கு எது தேவை என்பதை அறிந்தவர் போலல்லவா இந்தக் குழந்தையைக் கொண்டுவந்து இங்கே விட்டு விட்டுப் போனார்! சுவாசிக்கின்ற ஒவ்வொரு மூச்சும் உபயோகமற்ற போலி மூச்சு என்று உள்ளம் வெறுத்து நிராசையில் முழுகிக்கொண்டிருந்த நேரம் பார்த்து, இருட்டறையில் வெந்து கொண்டிருந்தவனைத் தென்றல் தவழும் சோலையில் கொண்டு விட்ட மாதிரி, வாழ்வில் ஒரு பிடிப்பைக் கொடுத்துவிட்டாரே!

யோசிக்கையில், ராஜரத்தினம் காப்பாற்றியது லல்லி என்ற பேத்தியை அல்ல, பத்மனாபன் என்ற இந்தப் பைத்தியத்தைத்தான் என்று புலப்பட்டது. பேத்திக்கு நல்லது செய்வது நியாயம். ஆனால் தன்னிடம் எதற்காகப் பரிவு காட்ட வேண்டும்?...

''லல்லி, லல்லி! எழுந்திரு. கொஞ்சம் சாப்பிட்டு விட்டுத் தூங்கலாம்,'' என்று எழுப்பினான் பத்மனாபன். நாளைக் காலையைப் பற்றி, பகலைப் பற்றி, மாலையையும் இரவையும் பற்றி, அடுத்த நாளையும் அதற்கடுத்த நாளையும் பற்றி அவன் எண்ணங்கள் ஓடலாயின.

பத்மனாபன் – அட்வகேட் பத்மனாபன் – எதிர்காலத்தைக் குறித்துச் சிந்திக்கலானான்.

நுங்கம்பாக்கம் பங்களாவில் கண நேரம்கூடத் தங்கப் பிடிக்கவில்லை அருணுக்கு.

''ஊமையாய் இருந்ததோடல்லாமல் அறிவையும் பார்வையையும் கூட இழந்து விட்ட மனிதரிடம் நமக்கு இடமில்லை,'' என்று தீர்மானித்துக் கொண்டவனாக அறையை விட்டு வெளியே வந்து, மெல்லத் தோட்டத்தின் வழியே நடந்து கேட்டைச் சமீபித்தான்.

''கோன் ஹை?'' என்ற உறுமலுடன் பக்கத்து மரக் கொட்டிலிலிருந்து பாய்ந்து வந்தான் காவல்கார கூர்க்கா. பளீரென்று வீசிய டார்ச் வெளிச்சம் அருணின் கண்ணைக் கூச வைத்தது.

''ஓ, சாப். நீங்க?'' என்று அசட்டுச் சிரிப்புடன் கூறிய காவல்காரன் கதவைத் திறந்து வழிவிட்டான்.

ஆரம்ப முதலே அவன் அங்கே வேலைக்கு இருப்பது அருணுக்குத் தெரியும். நம்பகமானவன்தான் வேண்டும் என்று ராஜரத்தினம் பெங்களூரிலிருந்தே அழைத்து வந்திருந்தார் அந்த இரவுக் காவல்காரனை. அழுத்தமும் நிதானமும் உள்ள அவன், கொஞ்ச நாளாக ஏன் முள் மீது நிற்கிற மாதிரி பதற்றமும் அவசரமுமாகக் காணப் படுகிறான் என்று அருணுக்குப் புலப்படவில்லை. எஜமானருக்குத் துரோகம் இழைத்து, மூர்த்திக்கு உதவு வதற்கு எதாவது சதி செய்து கொண்டிருக்கிறானோ என்றுகூடச் சந்தேகம் ஏற்பட்டது.

ஏற இறங்க அந்தக் கூர்க்காவை ஆழம் பார்த்து விட்டு, சாலையில் நடக்கலானான் அருண். திரும்பி நோக்கிய போது பங்களா மாடியில் விளக்கு எரிவது தெரிந்தது.

அருண் பெருமூச்செறிந்தான்.

எத்தனை வெளிச்சம் இருந்தென்ன! இருட்டில் பெருச்சாளியும் ஆந்தையும் நுழைவதுபோல அந்த மாளிகைக்குள் சனியனும் துரதிருஷ்டமும் சதியும் புரட்டும் புகுந்துவிட்டன. இனி அதை ஆண்டவன்தான் காப்பாற்ற வேண்டும்.

பங்களாவை மீண்டுமொருமுறை நோக்கி, ஆத்திரத் துடன் காறியுமிழ்ந்து விட்டு, வேகமாக நடந்தான் அருண். ஆண்டவன்! ஆண்டவனுக்கு வேறு எத்தனையோ வேலைகள். அக்கிரமக்காரனும் அயோக்கியக்காரனும், பஞ்சமா பாதகங்களைச் செய்பவனும் சுகித்துச் சந்தோஷமாயிருக்கும்படி செய்யவே அவனுக்கு நேர மில்லை. கேவலம் நல்லவர்கள், தூய்மையான உள்ளம் கொண்டிருந்தவர்கள், பொய்ம்மையைக் கண்டு பொங்கி எழுட'வர்கள் – இவர்களையெல்லாம் எப்படிக் கவனிப்பான்! அங்கே இருள் அடைய வேண்டியதுதான். அந்தக் குடும்பங்கள் இடிந்து குட்டிச் சுவராகி நாசமாக வேண்டியதுதான்...

உள்ளுக்குள் முளைத்த ஆத்திரத்தின் வெறி, பொங்கிப் பொங்கி மேலே வர வர, அருணும் தன்னை மறந்தான். வேறொருவன் என்ன வருவது, நீதியையும் நியாயத்தையும் நிலைநாட்ட? இரண்டு கை, இரண்டு கால், திடகாத்திரமான உடம்பு, கூர்மையான பார்வை, அதைவிடக் கூர்மையான மூளை இத்தனையும் கொண்ட நாம் இருக்க, உருவமும் உள்ளமும் இல்லாத ஏதோ ஒரு சக்தியை உதவிக்கு அழைப்பானேன்?

மூர்த்திக்கு முதலில் வேட்டு வைக்க வேண்டும். அதையும், அவனைப் பளிங்கிலே ஆன பழுதற்ற பிறவி என்று நினைத்திருக்கிறாளே ஒரு அகங்காரி, அவள் மூலமே வைக்க வேண்டும்.

திட்டமிட்டு முடிந்தபோது அருண் சேத்துப்பட்டு மேம்பாலத்தின் வழியே நடந்து கொண்டிருந்தான். விளக்குகள் ஒளிவெள்ளத்தைப் பாய்ச்சின.

சட்டைப் பையிலிருந்து பேனாவை எடுத்தான். டயரியிலிருந்து ஒரு காகிதத்தைக் கிழித்தான்.

பாலத்தின் கைப்பிடிச் சுவரில், ஒரு விளக்கினடியில் உட்கார்ந்து, வேண்டுமென்றே குண்டு குண்டான கையெழுத்தில் எழுதலானான்:

மாயாவுக்கு,

உன் அண்ணன் மூர்த்தி ஜெயிலிலிருந்து தப்பிவந்த பிறகாவது உனக்குக் கண் திறந்திருக்கும். அப்படியும் திறக்கவில்லையென்றால், இதோ சில புதிய தகவல்கள்:

உன் அண்ணன் ஒரு பெண்ணை மணந்துகொண்டு, கொடுமைப்படுத்தியவன். துடிக்கத் துடிக்கச் சாகடித்தவன். அவள் மூலம் அவனுக்கு ஒரு பெண் குழந்தையும் உண்டு. வெட்கம் கெட்டவனான உன் அண்ணன், இப்போது நுங்கம்பாக்கத்தில், ஹைரோடில் உள்ள 'சுவர்ணா' என்ற மாளிகையில், மாமனாருடன் ஆனந்தமாக வாழ்ந்து கொண்டிருப்பதைப் போய்ப் பார்.

நியாயம் நீதி என்பதில் உனக்கு ஏதேனும் நம்பிக்கை இருக்குமானால் அவனைப் போலீஸில் ஒப்படை, பார்க்கலாம்.

**ஒரு நண்பன்**

எழுதி முடித்த பிறகு, சிறிது தயக்கம் ஏற்பட்டது அருணுக்கு. ராஜரத்தினம் வெகுதூரம் கேட்டுக்கொண்டிருந்தார், மூர்த்தியின் ஒளிவிடத்தை வெளியிடக்கூடாதென்று. அதெல்லாம் அப்போது. ராஜரத்தினம் நல்லவராக இருக்கலாம், ஆனால் பாசம் அவர் பார்வையை மறைத்த பிறகு, துணிந்து இந்த ரணச் சிகிச்சையைச் செய்ய வேண்டியதுதான்.

பாலத்தின் மறுபுறத்தில் இறங்கினான் அருண். பூந்தமல்லி நெடுஞ்சாலை, ரிப்பன் வியாபாரி நடை

பாதையில் கொட்டி வைத்த குவியலைப்போல, ஒளியும் இருளும் நிழலுமாய் மாறி மாறிக் காட்சி தந்தது. பல பங்களாக்களின் தோட்டங்கள் கம்மென்று மாம்பூவின் மணத்தைக் காற்றிலே கரைத்து அனுப்பிக் கொண்டிருந்தன.

அருண் நின்றான்.

மாயாவின் வீடு.

கீழறையொன்றில் லேசான வெளிச்சம் கண்ணாடி ஜன்னலில் கசிந்து கொண்டிருந்தது. அதுதான் அனேக மாக மாயாவின் படுக்கையறையாக இருக்கும் என்று ஊகித்தான்.

உள்ளே நுழைவதா? எப்படி நுழைவது?

தயங்கி நின்றபோது, காலில் தட்டுப்பட்ட ஒரு சிறு கல் அவனுக்கு ஒரு யோசனை சொல்லித் தந்தது. காகிதத்தினுள் ஒரு கல்லை வைத்து, பொட்டலமாகக் கட்டினான். சாலையில் எதிர்ச்சாரியில் நின்றவாறே ஜன்னலைக் குறி வைத்தான்.

ஒரு முறை சுற்றும்முற்றும் பார்த்தான். இறுக்க மாகப் பின்னிவிடப்பட்ட கூந்தல் போல, சாலை மோனத்தில் ஆழ்ந்து கிடந்தது. அசைவு எதையும் காணோம்.

வீசியெறிந்தான் பொட்டலத்தை, மாயாவின் அறையை நோக்கி.

டணால் என்ற மோதல் ஓசையும், சில்லென்று கண்ணாடி தெறித்து விழுந்த சப்தமும் அருண் எதிர் பார்த்தவைதான். ஆனால் –

'பிய்ங்!' என்ற அந்த ஊதல் சப்தம்?

தடதடவென்று பல மூலைகளிலிருந்து பல காலடிகள் விரைந்தோடி வருவது கேட்டது.

மறுவினாடி அருண் சிட்டாய்ப் பறந்தான். எங்கே ஓடுகிறோம், எதன் மீது மோதுகிறோம் என்பது தெரியாமல் இருளில் தடுமாறிய வண்ணமே பல தெருக்கள் வழியே பாய்ந்தான் அவன்.

வெகு நேரம் வரையில் ஊதல் ஓசைகளும், காலடிகளும் அவனைத் தொடர்ந்து கொண்டிருந்தன. தற்செயலாக நடுவழியில் கண்ட ஒரு டாக்ஸியைப் பிடித்து, ஏறி ஒண்டிக்கொண்டு, ''ஓட்டு! ஓட்டு!'' என்று பதறினான்.

''எங்கே?'' என்று டாக்ஸி டிரைவர் கேட்ட பிறகுதான் அருணுக்கு நிதானம் பிறந்தது.

''எங்கே போவது? என் இடம் என்று எதை வைத்துக் கொண்டிருக்கிறேன்?''

''தண்டையார்பேட்டை,'' என்று தெரிவித்தான் கடைசியில்.

குளிர்ந்த இரவின் இதமான காற்று டாக்ஸிக்குள் பரவப் பரவ அவன் படபடப்பு அடங்கியது.

''எத்தனை முட்டாள்தனம்!'' என்று தன்னைத்தானே நொந்து கொண்டான். மூர்த்தி சிறையிலிருந்து தப்பியோடிய நாள் முதல், அவனுடைய வீட்டைச் சுற்றிக் கண்காணிப்பு இருக்கத்தானே செய்யும்? அருணையே மூர்த்தி என்று நினைத்துக் கொண்டு அவர்கள் துரத்தியதில் வியப்பில்லை.

வீட்டுக்குள்ளேயும் போய்ப் பார்ப்பார்கள். மாயாவுக்குத் தெரிவிக்கப்பட்டுள்ள தகவலைப் போலீசும் அறிந்து கொள்ளும். மாயா இனி எவ்வளவு எதிர்த்தாலும் பயனில்லை. மூர்த்தியின் சுருக்கை இறுக்கியாகிவிட்டது..

பழைய ஜாகையின் வாசலில் இறங்கிக் கொண்டபோது அருணின் உள்ளத்தை வெறுப்பும் கசப்பும் ஆங்காரமும் நிரப்பியிருந்தன.

வீட்டுக்குள் சென்று யாரையும் எழுப்பவில்லை அருண். கோடை காலத்தில் வழக்கமாகப் படுத்துக் கொள்வது போல வெளித் திண்ணையிலேயே சாய்ந்தான். ஆனால் உறக்கம் கொள்ளவில்லை. விடிகாலை, பால் டிப்போ சைக்கிள்கள் மணியடிக்கத் தொடங்கிய நேரம் எழுந்து கொண்டான்.

நல்லவேளை பர்சும், பர்சில் தேவைக்கு மேலேயே ரொக்கமும் இருந்தன. தங்க சாலை ஓட்டலொன்றில் அறை எடுத்துக் கொண்டு பகல் பொழுதைக் கழித்தான். சாயந்தரம் கணக்கைத் தீர்த்தபிறகு, சென்டிரலை அடைந்தான்.

முதல் வகுப்பு, ரிசர்வேஷன் என்ற பேச்சுக்கே இடமில்லை. கடைசி நிமிடத்தில் புறப்பட்ட புளி மூட்டைப் பிரயாணிகளில் அவனும் ஒருவன்.

ஜாகை மாறுகிற சம்சாரியின் குடும்பம் போல, வண்டிக்குள் பல வகையான இரைச்சல்கள், சந்தடிகள், விசாரணை, கூப்பாடு, சாமான் மோதல்கள், அருணுக்கு எதிரில், இருப்புக் கொள்ளாமல் தவித்துக் கொண்டிருந் தார் ஒரு பெரியவர். ''சினேகிதனுமாச்சு, மண்ணுமாச்சு. வேண்டாமடா என்றேன், கேட்டானா?'' என்று அவர் திட்டிக் கொண்டிருந்தது, மகனைப் போலும்.

மணி, விசில், பரபரப்பு. வண்டி புறப்படும் நேரம்.

''அப்பா! இதோ வந்துவிட்டேன்!'' என்று ஒரு குரல் கொடுத்தவாறே ஒரு இளைஞன் - கல்லூரி மாணவனைப்போல் தோற்றத்தில் இருந்தவன் - இரைக்க இரைக்க ஓடிவந்து ஜன்னல் வழியே தொத்தி வண்டிக்கு உள்ளே குதித்தான்.

''மடையா! இன்னும் ஒரு நிமிஷம் லேட்டாகியிருந் தால் என்ன ஆவது!'' என்று அப்பாக்காரர் திட்டினார்.

''ஏதோ வந்து விட்டான். விடுங்கள்,'' என்று சமாதானம் சொன்னார்கள் பக்கத்தில் இருந்தவர்கள்.

''என்மேல் தப்பில்லை,'' என்று விளக்கினான் பையன். ''அந்தத் தெருவிலே நானும் எப்படியோ வெளியே கிளம்பி ஒரு டாக்ஸி பிடித்து வந்தேனே அதைச் சொல்லுங்கள்! ஒரே போலீஸ் தலை! ஈ காக்கை அந்தண்டை இந்தண்டை நகரக் கூடாதென்று ஜபர்தஸ்து! நான் போயிருந்ததோ, நேர் எதிர்ப் பங்களா! அப்புறம் பின்பக்கம் வழியாய்...''

''என்ன உளறுகிறாய்?'' என்று பெரியவர் கடிந்து கொண்டார் பிள்ளையை.

''நிஜம் அப்பா. நுங்கம்பாக்கத்துக்குப் போய்ப் பாருங்கள்,'' என்றான் அவன்.

அருண் சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்து கொண் டான், நுங்கம்பாக்கம் என்ற சொல் காதில் விழுந்ததும்.

''என்ன தம்பி கலாட்டா?'' என்று ஒரு சாயபு விசாரித்தார் ஆவலாக.

''ஏதோ விஷம் வைத்துக் கொல்லப் பார்த்தார் களாம் ஒரு ஆளை. அவரை ஆஸ்பத்திரிக்கு எடுத்துப் போயிருக்கிறார்கள். காவல்காரன் பிடிக்கப் பார்த்தானாம், வீட்டுக்குள் இருந்த ஒருவனை. அவனும் தப்பி ஓடி விட்டானாம்.''

''யாருக்கு விஷம் கொடுத்தது? எதற்காக?''

''பாவம், அந்த ஆசாமி லட்சாதிபதி. ஆனால் வாய் திறந்து பேச முடியாத ஊமை. விஷத்தால் ஏற்பட்ட மயக்கம் வேறே; ஒன்றுமே சொல்ல முடியவில்லையாம்.''

அருண் சடேரென எழுந்து அந்த இளைஞனைக் குலுக்கி, ''ஊமையா? நுங்கம்பாக்கமா? அவர் பெயர் என்ன ?'' என்று கேட்டான்.

பயந்துபோன அந்த வாலிபன், ''ஏன்?... எனக்குத் தெரியாது. என்னமோ நாகரத்தினமோ ராஜரத்தினமோ சொன்னார்கள்...'' என்றான்.

எக்ஸ்பிரஸ நகரத் தொடங்கியது.

அபாயத்தைப் பொருட்படுத்தாமல் அருண் பிளாட் பாரத்தில் குதித்தான்.

# 30

இன்னொரு கட்டில். இன்னொரு படுக்கை. இன்னொரு மருந்து நெடி. இன்னொரு அன்புக்குரிய பிறவி. இன்னொரு வேதனை. இன்னொரு இரவு.

ஒரே ஒரு வித்தியாசம்.

சற்றுத் தள்ளி ஒரு போலீஸ்காரர் காவல் நின்றிருந்தார்.

அருணுக்கு, உளைச்சல் வயிற்றைப் புரட்டியெடுத்தது. எந்த நிமிடத்திலும் வாந்தியெடுத்துவிடுவோம் என்று பயந்தவனாக, கைக்குடையை வாயில் புதைத்துக் கொண்டிருந்தான். கைபடும் கிட்டத்தில், நெடுஞ்சாண் கிடையாகப் பேச்சற்றுக் கிடந்த அந்தப் பெரிய உருவம், லேசாக மூச்சு மட்டுமே வெளிப்படுத்திக்கொண்டிருந்தது. அதன் விழிகள் மூடிக்கிடந்தன. பரந்த நெற்றியில் முத்து முத்தாக வியர்த்திருந்தது. பலவந்தமாக வயிற்றைக் காலி செய்திருந்தார்களாததால், அந்த அவஸ்தையின் அறிகுறியாகக் கன்னங்கள் சிறிது ஒட்டி, சிவப்பு நிறம் பெற்றிருந்தன.

ராஜரத்தினத்தின் உயிருக்கு, சில மணி நேரங்களைக் கெடு வைத்திருந்தார்கள்.

விஷம், விஷம், விஷம். அதைத் தவிர வேறெதுவும் அருணின் காதில் ஏறவில்லை. ரயில்வண்டியிலிருந்து குதித்து இறங்கியோடி, நுங்கம்பாக்கத்தை அடைந்து, ஏமாந்து, பிறகு போலீஸ் ஸ்டேஷன்களில் விசாரித்து, பெரிய பெரிய அதிகாரிகளைப் பேட்டி கண்டு, ராஜரத்தினத்துக்குத் தான் ஒருவன்தான் வேண்டியவன்

என்பதை நிரூபித்து, தன்னால் சில துப்புகளும் கிடைக்கலாம் என்பதைச் சாடையாக ஆசை காட்டி, ஆஸ்பத்திரியில் கெஞ்சிக் கூத்தாடி அனுமதி பெற்று, கட்டிலை அடைந்த போது–

எந்த விஷயத்தையும் அவனுக்கு விளக்கும் நிலையில் இல்லை ராஜரத்தினம். நர்ஸ் ஒருத்திதான் தெரிவித்தாள். விஷம் உள்ளே போய் வெகு நேரத்துக்குப் பின்னரே சிகிச்சை ஆரம்பமாயிற்றாம். ஆகவே, 50-50 தான் 'சான்ஸ்' என்றாள்.

நெற்றியை இரண்டு விரல்களால் அமுக்கிக்கொண்டு உட்கார்ந்தான் அருண்.

திடீரென்று எங்கிருந்தோ வந்து, தன் உள்ளத்தின் நடுமத்தியை ஆக்கிரமித்துக்கொண்ட இந்த ஊமை, முதலில் அவரிடம் தென்பட்ட மன உறுதி, பிற்பாடு இளக்கமாக மாறிவிட்ட பாசம், சமீப காலமாகக் காணப் பட்ட விசித்திரமான போக்கு, பார்வை, பேச்சு– இவை யெல்லாம் அருணின் மனக் கண் முன்னே மாறி மாறித் தோன்றின. கிட்டத்தட்டத் தந்தையைப் போல மதிப்பை யும் மரியாதையையும் ஈட்டிக் கொண்ட பெரியவர், சிசுவைப்போலப் பலவீனமாகக் கிடப்பதும், எதிர்பாராத விபரீதம் ஒரே இரவுக்குள் நிகழ்ந்து விட்டதும் அருணின் உள்ளத்தைப் பிளந்தன. அருண் தன்னைத் தானே திட்டிக் கொண்டான். வயதானவர்கள் குழந்தை மாதிரி. பாசத் தினால் பலவீனமடைந்தவரைப் பாதுகாக்காமல், கோபித்துக்கொண்டு ஓடியது எத்தனை முட்டாள்தனம்! அவன் பொறுமையுடன் ராஜரத்தினத்துடனேயே தங்கியிருந்தால் இந்த விபத்து நேர்ந்திருக்குமா?

எப்படி நேர்ந்தது இது? யாரால்? எப்போது?- அந்தக் கேள்விகளுக்கு, ஊமை ராஜரத்தினத்தின் உதடுகள் எவ்விதப் பதிலையும் அளிக்கவில்லை.

அறை வாசலில் நின்றிருந்த போலீஸ்காரர் ''யோவ்! சும்மா இருக்கமாட்டே? '' என்று யாரையோ அதட்டிய பிறகுதான், அருண் உற்றுக் கேட்டான். ஆமாம். ஒரு மெல்லிய விம்மல் ஒலி கேட்டது. வெளியே எழுந்து சென்று பார்த்தவன் வியப்புற்றான்.

''சாப்! பெரிய ஐயா இப்படிச் செஞ்சிட்டாங்களே சாப்!'' என்று அருணின் முழங்காலைக் கட்டிக்கொண்டு விம்மியவன், நுங்கம்பாக்கம் பங்களாவின் காவல்கார னான கூர்க்காதான். ''இப்படி ஆகுமென்று தெரிந்திருந் தால் ஐயாவுக்கில்லே காவலாயிருந்திருப்பேன்! அந்தப் பாவியையா கவனிச்சிட்டிருப்பேன்! ''

''உஸ்! உஸ்!'' என்று போலீஸ்காரர் அதட்டினார் கூர்க்காவை. அருண் அவனை எழுப்பி, தோளை அணைத்துக் கொண்டு ஆஸ்பத்திரியின் வெளிவராந்தா வுக்கு அழைத்துச் சென்றான். ''அழாமல் புலம்பாமல் நடந்ததைச் சொல்,'' என்று கண்டிப்பும் பரிவும் கலந்த குரலில் சொன்னான்.

அவன் சொன்ன விவரங்களை அருணினால் நம்ப முடியாததோடு மட்டுமல்ல, அவற்றின் பொருளோ, தலையோ காலோகூட விளங்கவில்லை.

''அந்த மருமகப் பிள்ளை வந்தானே, கொலைகாரன், அன்னைக்கே எசமானர் என்னண்டை சொல்லியிருந் தாங்க– அவன்மேலே ஒரு கண்ணு வைச்சிருக்கும்படி. ஐயா ரூமிலே ஒரு பட்டன் வைச்சு, வாசல்லே இருக்கிற என் ஷெட்டுக்குக் கனெக்ஷன் கொடுத்து, ஒரு சின்ன எலக்ட்ரிக் மணி வைச்சிருந்தாங்க. 'அதை என்னிக் காவது ஒரு நாள் அடிப்பேன். நீ உடனே மூர்த்தியோட அறைக்கு வெளியிலே மறைவாய் நின்னுக்க வேண்டியது. பொறுமையாகக் காத்திட்டிருக்க வேண்டும். மூட்டை முடிச்சோட மூர்த்தி எங்கயாச்சும் கிளம்புவான். கபக்குன்னு பிடிச்சு, ரூமிலே அடைச்சுப் போட்டிட்டு, போலீசுக்குப்

போன் பண்ணிடு. ஆனால் என்ன காரணமாயும் என் ரூமுக்கு வர வேண்டாம். என்னைப் பார்க்கவும் வேண்டாம்' அப்படின்னு சொல்லியிருந்தாரு.''

மூர்த்தியைக் கண்காணிக்க ஏற்பாடு பண்ணியிருந் தாரா ராஜரத்தினம்! அப்படியானால் அவன்மீது பாசம் பொழிந்ததெல்லாம் வேடமா? அது வேடமென்றால், வெகு அக்கறையாக அவனைச் சிறையிலிருந்து தப்பு வித்துத் தன்னோடு வைத்துக் கொண்டதன் பொருள்? பாம்பை விலைக்கு வாங்கி மடியிலும் எதற்காகக் கட்டிக் கொண்டார் ராஜரத்தினம்?

சந்தேகங்களுக்கு விடை கிடைக்காத குழப்பத்துடன், ''சரி அப்புறம்? நேற்று உன் ரூமிலேயிருந்த எலக்ட்ரிக் மணி அடித்ததா?'' என்று வினவினான்.

''ஆமாங்க. விடிகாலை இரண்டு மணி இருக்கும். என் ஷெட்டுக்குள்ளார மணி அடிச்சுது. ரொம்ப லேசான ஓசைதான். உடனே ஓடிப்போய், கவனிக்க ஆரம்பித்தேன். அந்தக் கொலைகாரன், என்னவோ ஐயா ரூமுக்குப் போவதும், தன் ரூமுக்கு வர்றதுமாய் இருந்தான் ரொம்ப நேரம். பணம், நகை நட்டு எல்லாம் எடுத்திட்டு வந்தான், கையிலே அள்ளி. மூணு மணி சுமாருக்கு அதை மூட்டையாய்க் கட்டி, இரண்டு பெரிய பையிலே போட்டுக்கொண்டு கிளம்பினான்.''

''நீ உடனே பிடித்தாயா இல்லையா?''

''நீங்க ஒண்ணு! விடுவேனுங்களா? கபால்னு பாய்ஞ்சு, கழுத்தை ஒரு அமுக்கு அமுக்கி ரூமுக் குள்ளேயே தள்ளி வெளியிலே பூட்டினேன். கீழே ஹாலுக்கு ஓடியாந்து போலீசுக்கு டெலிபோன் பண்ணி னேன். அரை அவரிலே போலீஸ் வண்டி வந்திச்சு.''

''பிடித்துவிட்டார்களா கடைசியிலே? பின்னே தப்பிவிட்டதாக...?''

''ஐயோ, அதுதானுங்களே இல்லை, சாப்?'' என்று கண்ணீர் வடித்தான் கூர்க்கா. ''போலீஸ்காரங்க வந்து ரூமைத் திறந்தப்போ - என் முட்டாள்தனத்தைப் பாருங்க - ஜன்னல் வழியா வெளிப்பக்கம் இறங்கி ஓ!' ட்டான் அந்த அயோக்கியன்! பங்களா பூராவிலேயும் சுத்துச் சுத்தித் தேடினாங்க போலீஸ்காரங்க... அப்போதான் ஒருத்தர் கத்தினாரு, 'என்னப்பா உன் எசமானருக்கு உடம்பு?' அப்படீன்னு. போய்ப் பார்க்கிறோம், உடம் பெல்லாம் நீலம் ஏறி கண்ணுங்கள்ளாம் சொறுகிப் போய், தரையிலே விழுந்து கிடக்கிறார் என் எசமானர்! பாவி விஷம் கொடுத்திட்டு ஓடியிருக்கிறான் சாமி! அது தெரிஞ்சிருந்தால், முன்னாலே ஐயாவையல்ல கவனிச்சிருப்பேன்! பணம் நகை நட்டுங்களா பெரமாதம்! ஐயா நல்லா இருந்தா நிமிசத்திலே லட்சம் ரூபாய் சம்பாதிப்பாருங்களே!''

கூர்க்காவை அப்படியே புலம்பவிட்டுவிட்டு, யோசனையுடன் மெல்லத் திரும்பினான் அருண். ஏதோ ஒரு திட்டத்துடன்தான் ராஜரத்தினம் இத்தனை நாளும் இருந்து வந்திருக்கிறார். அவருடைய கண்ணில் பொருளுடன் தான் மின்னியிருக்கிறது அந்தக் குறும்புத் தனம். ஆனால்... ஆனால்...

அறையை அடைந்தவன் மற்ற எல்லாவற்றையும் மறந்தவனாகச் சரேலெனக் கட்டிலை நெருங்கியமர்ந் தான். காரணம், ராஜரத்தினத்தின் கண்கள் சற்றுத் திறந் திருந்ததே. அருணை அடையாளம் கண்டு கொண்ட பாவமும் அதில் தெரிந்தது.

''சார்! இப்படியெல்லாம் நேர்ந்துவிட்டதே சார்! இவ்வளவு அஜாக்கிரதையாக... அவனை நம்பி.... என்ன விபரீதம்...'' அருணின் குரல் கரகரத்தது. விழியில் நீர் முட்டித் தளும்பியது. கை விரல்கள் அவர் மார்பைத் தொட்டுக் கொண்டு நடுங்கின.

ராஜரத்தினத்தின் முகத்தில் அசாதாரணமான அமைதியும் திருப்தியும் நிலவின. புன்னகை புரிந்தார். அதில் பெருமிதம் தொனித்தது. தலையை மெல்ல அசைத்து அவனைக் கண்டித்தார், அன்போடு. பின்னர் அவர் கண்கள் சுழன்றன.

குறிப்பணர்ந்த அருண், டயரியைப் பிரித்து, பென்சிலையும் இடுக்கினான் அவர் விரல்களில். மெதுவே ஒருக்களித்துக் கொண்டவர், தாளமுடியாத சிரமத்துடன் எழுதினார்:

''ஏன் அழுகிறாய்? எனக்கு வெற்றி. இதை அடையத் தான் பாடுபட்டேன். சந்தோஷப்படு. என் பெண்ணின் ஆத்மா சாந்தியடையும். எனக்கும்தான்.''

''சார்!'' என்று அவர் கையைப் பற்றிக் கொண்டான் அருண். எண்ணற்ற உணர்ச்சிகளும் குழப்பங்களும் அவனைக் கசக்கின. ''வெற்றியா? நீங்களே வரவழைத்தீர் களா? பெண்ணின் ஆத்மா.. அப்படியானால்.. அதாவது..''

ராஜரத்தினம் ''ஆம், ஆம்'' என்று, வினாடிக்கு வினாடி அதிகரிக்கும் ஆனந்தத்துடன் தலையசைத்தார். ஆடி அசைந்து கொஞ்சம் கொஞ்சமாக வேகம் பெறுகிற பம்பரத்தைப் போல, அந்த மகிழ்ச்சிப் பெருக்கு, அவருடைய உடம்பின் எல்லாப் பாகங்களிலும் அணு அணுவாகப் பரவி, புளகாங்கிதத்தை ஏற்படுத்தி, மெய்மறக்க வைத்தது. உள்ளும் புறமுமாய்ப் பரவிய அந்தப் பேரின்பத்தையும் திருப்தியையும் வெற்றியையும் கள்ளாகக் குடித்தவர் போல் கண்களை மூடிக்கொண்டார்.

அந்தச் சில வினாடிக்குள் அருணின் புதிருக்கும் விடை கிடைத்தது. அவனுடைய குழப்பத்தில் தெளிவு பிறந்துவிட்டது. படீரென்று தலையில் அடித்தாற் போல் அந்த உண்மை உதயமானபோது, அருணுக்கு மூச்சுத் திணறியது.

நா இழந்து, உணர்ச்சிகளை வெளிப்படுத்த முடியாமல் கிடக்கும் இந்த ஆறடி சரீரத்துக்குள்ளே பாசமிகுந்த தந்தையும் இருக்கிறான்! பகை வளர்க்கும் அரக்கனும் இருக்கிறான். இருவருக்கும் ஒரே சமயத்தில் வெற்றி கிட்டிவிட்டது. ராஜரத்தினம் திட்டமிட்டுப் பெற்றிருக்கிறார் அந்த வெற்றியை.

ஆம். தன் மகளை வேதனையில் சாக வைத்த அயோக்கியனை, சும்மா விட்டு வைக்க ராஜரத்தினம் விரும்பவில்லை. சிறையிலிருந்து அவனைத் தப்ப வைத்தது அவனைக் காப்பாற்ற அல்ல.

சிறைக்கும் கொடியதான வேறொரு தண்டனையை வாங்கித் தர!

ஆமாம், ஆமாம், ஆமாம் என்று அருணின் உள்ளுணர்வு அடித்துச் சொல்லிற்று இப்போது.

பேராசைக்காரனான மூர்த்தியைப் பிட்டு பிட்டு அளந்து வைத்திருக்கிறார் இந்த ஊமை. திரண்ட செல்வத்தை அவன் கண்முன்னே காட்டி, அதை அடைவதற்கான குறுக்கு வழியையும் தனது நெஞ்சு வலி மருந்து மூலம் அவனுக்குச் சுட்டியிருக்கிறார். அவன் தனக்கு விஷம் கொடுப்பதற்கான சூழ்நிலையை வேண்டுமென்றே வரவழைத்து வைத்திருக்கிறார். தன் மரணத்துக்குத் தானே தாம்பூலம் தந்திருக்கிறார்!

மூர்த்தி ஜெயிலில் சில மாதம் இருந்து விட்டு வந்தால், அது அவன் செய்த பண மோசடிக்குத் தண்டனை. ஒரு பெண்ணுக்கு இழைத்த கொடுமை? அதற்கு நீதி? தன் உயிரையே கொடுத்து மூர்த்தியைக் கொலைகாரனாக்கி, சட்டப்படி அவனைத் தூக்கு மேடைக்கு அனுப்ப வலை பின்னியிருக்கிறார் ராஜரத்தினம்!

பிரவாகமாகப் பொங்கி வந்தது கண்ணீர் அருணுக்கு.

ராஜரத்தினம்! நீங்கள் சாதாரண மனிதரல்ல. சாதாரண மனிதர்கள வஞ்சம் தீர்ப்பதற்காகச் சாதாரண வழிகளைத் தான் கையாளுவார்கள். உயிரையே அந்த வேள்வியில் நெய்யாக்கி ஊற்றும் ஒப்பற்ற தியாகம், இந்த ஊமைச் சரீரம் ஒன்றுக்குத்தான் இருக்கிறது.

''சார்!'' என்று அவர் உடம்பைப் பிடித்துக் குலுக்கினான் அருண்.

ராஜரத்தினம் மீண்டும் நினைவிழந்து விட்டார். வெற்றியுடன் மீளா உறக்கத்தில் ஆழ்ந்துவிட்டாரா?...

ஆனால்... ஆனால்... ராஜரத்தினம் இன்னும் பூரண வெற்றியடையவில்லை! தன் திட்டப்படி கூர்க்கா பிடித்துத் தந்திருப்பான் கொலைகாரனை என்றெண்ணிப் பெருமைப் படுகிறார், பாவம்! அவனோ இதே விநாடி எங்கேயோ ஓண்டிக் கொண்டிருக்கிறான் அவனுக்கே உரிய வெற்றியுடன்.

கூடாது, கூடாது என்று அருணின் உள்ளம் பதற்றப் பட்டது. ராஜரத்தினத்தின் உயிர்த் தியாகம் வீணாகக் கூடாது. அந்தக் கொலைகார மூர்த்தி தப்பக் கூடாது. எங்கே அவனை அனுப்ப ராஜ ரத்தினம் நினைத்தாரோ .அங்கே அவனை அனுப்பித்தானாக வேண்டும்.

அருண் எழுந்து கொண்டான் வேகமாக. ஓர் ஊமையின் கனவைப் பலிக்க வைக்க வேண்டுமென்ற ஒரே ஆதங்கத்துடன் இருளில் பாய்ந்து மறைந்தான்.

தெரு வழியே சென்று கொண்டிருந்தவர்கள் அந்தக் காட்சியைக் கண்டு, நின்று, ரசித்துவிட்டுப் புன்சிரிப் புடன் சென்றார்கள்.

இரண்டு இரண்டரை வயதுப் பெண்குழந்தை, தன்னால் தூக்க முடியாத பெரிய செம்பில் தண்ணீர் ஏந்தி, தலைக்கு மேலே தூக்கிப் பிடித்துக் கொண்டிருந்தது.

''நல்லா! நல்லாத் துடை! '' என்று அது கட்டளை யிட்டுக் கொண்டிருந்தது இருபத்தேழு வயது ஆண் மகனிடம்.

''ரொம்ப விரட்டாதீர்களம்மா! நான்தான் சொன்ன வேலையைச் செய்கிறேனே. தப்பாய்ச் செய்தேனானால் கூலியைக் குறைச்சுக்குங்க.''

கடகடவென்று விழுந்து விழுந்து சிரித்த குழந்தை மடாலென்று செம்பைக் கீழே தவறவிட்டாள். வாசற் படியில் தண்ணீர் வழிந்தோடிற்று. செம்பு தெருவில் உருண்டது.

''அச்சச்சோ! காலிலே பட்டுவிட்டதா?'' என்று குனிந்து பார்த்தான் பத்மனாபன்.

''ஊஹூம்,'' என்றாள் லல்லி.

''போதும் துடைத்தது. பிரமாதமான பாலிஷ்!'' என்று கூறி, கையிலிருந்த ஈரக் கந்தலை மூலையில் தூக்கியெறிந்தான் பத்மனாபன். தெருவில் கிடந்த செம்பை எடுத்துவரும் போது மீண்டுமொருமுறை தான் செய்த வேலையிலேயே அவன் கண்கள் சென்றன.

''பத்மனாபன் பி.ஏ. பி. எல்., அட்வகேட்,'' என்ற பலகை தூசு விலகி, ஈரத்துடன் பளபளத்தது.

''லல்லி! எட்டி நில், எட்டி நில்! எக்கச்சக்கமாகக் கட்சிக்காரர்கள் வந்து குவிவார்கள் இனிமேல்!'' என்று வேடிக்கையாகக் கூறி, குழந்தையை அணைத்துக் கொண்டான்.

அவனுடைய வேடிக்கைப் பேச்சு அவனுக்கே உறுத்தலாயிருந்தது.

'துடைத்தவுடனேயே எந்தக் கறையும் மறைந்து விடுவதில்லை. அதற்கு அவகாசம் தேவை போலும்,' என்று எண்ணிக் கொண்டான். 'இனிமேற்கொண்டு திருவாளர் பத்மனாபன், வழக்கறிஞர் தொழிலை அகககறையுடன் கவனிக்கத் தயார் என்று அறிவித்தவுடனேயே, கையை

விட்டுப் போன சந்தர்ப்பங்களெல்லாம் திரும்பி வந்து தஞ்சமடைந்து விடுமா என்ன? நான்தான் அவற்றைத் தேடி அலையவேண்டும்.'

பகட்டில்லாத வாயில் சேலையைப் போல, அன்றையக் காலைப் பொழுது மென்மையான ரம்மியத் துடன் திகழ்ந்தது.

''வா லல்லி. இப்படிக் கொஞ்சதூரம் வாக் போய் விட்டு வரலாம்,''என்ற சொல்லி, குழந்தையின் சின்ன விரல்களைப் பிடித்துக் கொண்டான்.

கதவைப் பூட்டும்போது, "நெறையப் பேர் வருவாங்கன்னு சொன்னியே?'' என்று கபடமற்ற குழந்தை வினவிற்று.

''வந்தால் காத்திருப்பாங்க,'' என்று பதில் கூறி விட்டு நடக்கலானான் பத்மனாபன்.

கண்மூடித்தனமான திமிரும் எதையும் செய்ய முடியும் என்ற மமதையும் விடைபெற்றுக் கொண்ட நாள் முதல், பத்மனாபனின் நடையில் ஒரு பணிவு பிறந்திருந்தது. குழந்தையோடு குழந்தையாகப் பழகிய சில மணி நேரங்கள், அவனுக்கு வாழ்க்கையின் பூந்தோட்டப் பகுதியைக் காட்டி, மனோபாவத்தில் ஒரு தென்றலை ஏற்படுத்தி யிருந்தன. மெதுவாக நடந்து கொண்டிருந்தான் அவன்.

''ஐய! ஒரே பள்ளம்!'' என்று லல்லி சிணுங்கிய போதுதான், சிந்தனையிலிருந்து விடுபட்டுச் சாலையைக் கவனித்தான்.

அங்கே குழாய்கள் போடுவதற்காக வெட்டப் பட்டிருந்தது. எதிரே ஒரு லாரியும் வந்தது, புழுதியைக் கிளப்பியபடி.

''இப்படிக் கொஞ்சம் ஒதுங்கி நிற்கலாம் வா,'' என்று அருகிலிருந்த பெரிய வீட்டின் நடையோரத்தில் நின்று கொண்டான் பத்மனாபன்.

''நூறு ஆயுசு உனக்கு, வா!'' என்று உள்ளேயிருந்து ஒரு உற்சாகமான குரல் வந்தது. ''இப்போது பத்மனாபன்

இருந்தால் எவ்வளவு உதவியாயிருக்கும் என்று சொல்லிக் கொண்டேயிருந்தேன்! நீயும் வந்து விட்டாய்!''

குரலை இனம் கண்டுகொண்ட அதே அதிர்ச்சியுடன் நிமிர்ந்தபோது, 'டி.ஜி. தாஸ், எம்.ஏ. பி. எல்., பப்ளிக் பிராசிக்யூட்டர்' என்ற பலகையும், நடையை ஒட்டிய ஜன்னல் வழியே, ஹாலில் உட்கார்ந்திருந்த முன்னாள் சீனியரின் உருவமும் தென்பட்டன.

ஓரடிக்கூட நகர இயலாதவனாக நின்றவனை, ''உள்ளே வாப்பா! சும்மா வா!'' என்று தாஸ் இரண்டாம் முறையும் அழைத்தார்.

சிடுசிடுப்பு வரும்போது அந்தக் கோடிக்கும், இன் முகம் வரும்போது இந்தக் கோடிக்குமாக ஆடுகிற மனித ஊஞ்சல் ஒன்று உண்டென்றால் அது திருவாளர் தாஸ்தான் என்பதை பத்மனாபன் அறிவான்.

''நமஸ்காரம் சார். சௌக்கியம்தானே?'' என்று கைகுவித்து, பணிவுடன் அமர்ந்தவன், பக்கத்து நாற் காலியில் லல்லியை உட்கார்த்தி வைத்தான்.

பழைய நண்பர்கள் இரண்டொருவர் புன்சிரிப்புடன் அவனுக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு வெளியே சென்றார்கள்.

''யார்? உன் உறவுக்கார குழந்தையா? ஆமாம். உனக்கும் மனசு ஆறுதலாயிருக்கும்,'' என்று பத்ம னாபனின் முகத்தைப் பாராமலே தன் ஊகங்களை வெளிப்படுத்தியவர், குழந்தையின் பெயர், ''லல்லி'' என்று கேட்டுத் தெரிந்து கொண்டு, ''சமர்த்துப் பாப்பா,'' என்ற பாராட்டையும் தந்துவிட்டு, ''என்ன? எப்படி இருக்கிறாய்? என்னென்னவோ, பாவம் உனக்கு நேர்ந்து விட்டது. முக்கியமாய் உன் மனைவி... சரி, சரி. மற. இனிமேலாவது பொறுப்பாயும் சமர்த்தாயும் நடந்து கொள். அதுதான் வேண்டும்,'' என்று உபதேசித்தார் பிராசிக்யூட்டர்.

தலைகுனிந்து உட்கார்ந்திருந்தான் பத்மனாபன்.

''உனக்குத் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். அந்த மோசடிக் கேஸ் மூர்த்தி, ஜெயிலிலிருந்து தப்பி எங்கே ஒளிந்து கொண்டிருந்தான் தெரியுமோ?''

பத்மனாபன் அக்கறையுடன் நிமிர்ந்து உட்கார்ந்தான். ''அவனுடைய மாமனார் ராஜரத்தினம் என்பவருடன்...''

''ஆமாம். அவருக்கு விஷம் வைத்துக் கொலை செய்ய முயற்சி பண்ணிவிட்டு, நகையும் ரொக்கமும் சுருட்டிக் கொண்டு ஓடிவிட்டான்.'' பிராசிக்யூட்டரின் குரலில் வெற்றி தொனிக்காமல் இல்லை. ''நீ விடுதலைக் காகப் போராடியவன் எப்படிப்பட்ட கிராதகன் என்பதை நீயே பார்த்துக்கொள்'' என்று சொல்லாமல் சொல்லிக் கொண்டிருந்தார் அவர்.

ஆனால் அதிலே செல்லவில்லை பத்மனாபனின் கவனம். ''ராஜரத்தினத்துக்கு?... விஷம் வைத்து...'' என்ற போது அவன் குரலில் படபடப்பு தெரிந்தது.

''ஆமாம். அவர் மரணப் படுக்கையில் கிடக்கிறார். அனேகமாக இன்னேரம்...'' என்று அவர் சொல்லிக் கொண்டிருக்கையில் வீட்டெதிரே ஒரு போலீஸ் ஜீப் வந்து நின்றது. ஆகவே, அளவற்ற இரக்கத்துடன் குழந்தை லல்லியைப் பத்மனாபன் அணைத்துக் கொண்டது ஏன் என்று ஆராயாமல் வாசலில் கவனத்தைச் செலுத்தினார் பிராசிக்யூட்டர் தாஸ்.

டக் டக்கென்ற பூட்ஸ் ஓசையுடன் உள்ளே நுழைந்த போலீஸ் அதிகாரி, ''இந்த வழியாகப் போக வேண்டி யிருந்தது. உள்ளே நுழைந்தேன். ஒரு நல்ல சமாசாரம். ஒரு கெட்ட சமாசாரம்,'' என்றார்.

"கெட்டதை முதலில் சொல்லிவிடுங்கள்," என்றார் தாஸ்.

''அந்த ஊமை மனிதர் இறந்து விட்டார் – ராஜ ரத்தினம் என்பவர்.''

''ராஜரத்தினம் இறந்துவிட்டாரா?'' என்று சட்டென்று எழுந்து கொண்டான் பத்மனாபன். லல்லி இப்போது அவன் நெஞ்சோடு அணைந்திருந்தாள். கண்ணுக்குத் தெரியாத தெய்வத்தைப் போல தன் வாழ்வில் புது மலர்ச்சி ஏற்படுத்தித் தந்த அந்த ஊமை மனிதர் மரித்துவிட்டாரா? பத்மனாபனின் மனம் கனத்தது.

''அடப் பாவமே!... சரி, நல்ல சமாசாரம்?'' என்றார் தாஸ் போலீஸ் அதிகாரியிடம்.

''அந்த ராஸ்கல் பிடிபட்டு விட்டான். விடி காலையில் பங்களாவிலிருந்து ஓடுகிறபோது, அவ னுடைய தங்கையே எதிரில் வந்து மடக்கிவிட்டாள் அவனை. சொந்தத் தங்கையை அடி அடியென்று அடித்துக் கீழே தள்ளிவிட்டு ஓடப் பார்ப்பதற்குள் கூட்டம் சேர்ந்து, பிடித்துவிட்டார்கள் அந்தக் கிரிமினலை. பங்களாவிலிருந்து களவாடிய பொருள்களோடு பிடி பட்டிருக்கிறான். உங்கள் வேலை ரொம்ப சுலபம்!''

பத்மனாபன் செவியில் விழுந்த செய்திகளை நம்ப இயலாதிருந்தது போலவே, பிராசிக்யூட்டர் தாஸும் பிரமிப்படைந்தார். ''யார்? அந்தப் பெண் மாயாவா? கொலைகாரனை – அவள் அண்ணனைப் பிடித்தாளா?'' என்று கேட்டபடி பத்மனாபனைப் பார்த்தார்.

''ஆமாம். பலமான அடியில்லை நல்ல வேளை யாய். வாசலில் ஜீப்பில்தான் உட்கார்ந்திருக்கிறாள். ஆஸ்பத்திரியில் ட்ரீட்மெண்ட் கொடுத்து, அவள் வீட்டுக்கு அழைத்துப் போய்க் கொண்டிருக்கிறேன்.'' போலீஸ் அதிகாரி வாசல் பக்கம் தலைநீட்டி, ''உள்ளே வாம்மா, ஒரு நிமிஷம். பயப்படாமல் வா. வேண்டிய வர்கள்தான்,'' என்றார்.

பத்மனாபன் தலையை நிமிர்த்தவில்லை. ஒரே சமயத்தில் நெருப்பாற்றில் நீந்துவது போலவும், பனிக்கடலில் மிதப்பது போலவும் இருந்தது. சிரிப்பதா,

அழுவதா, விம்மி வெடிப்பதா? ஒன்றுக்கொன்று நேர் எதிரிடையான உணர்ச்சிகளும் எண்ணங்களும் அவனை நாலு பக்கமும் சூழ்ந்து கொண்டன. ''செய்த தவறு களுக்கு, கொண்டிருந்த பிழையான நம்பிக்கைகளுக்கு, தலையாய பிராயச்சித்தம் செய்துவிட்ட மாயா இதோ வந்து கொண்டேயிருக்கிறாள். அவளுடைய தவறுக்கெல்லாம் உடந்தையாயிருந்து, தூண்டிவிட்டு. மறத்தையெல்லாம் அறமாகக் காட்டி, உலகம் தெரியாத பெண்ணைக் குருடாக்கிய நான், எவ்விதக் கழுவாயும் செய்ய வகையற்றவனாக, சுகமாக உட்கார்ந்திருக்கிறேன்...''

மாயாவின் தந்தக் கடைசலான உடம்பு அவனுக்கு பக்கத்தில் வந்து நின்றது. திடுக்கிட்ட திகைப்பினால் அவளது உடலிலேற்படும் விறைப்பு அவனுக்குப் புரிந்தது. புழுதியும், ரத்தக் கறைகளும் பட்ட புடவை, அவளுடைய தியாகத்தைப் பறைசாற்றியது. நிமிரும் துணிவற்று, பத்மனாபன் கட்டையாய் நின்றிருந்தான்.

நாலும் தெரிந்தவர் பிராசிக்யூட்டர். ''நீ செய்தது ரொம்பப் பாராட்ட வேண்டிய காரியம் அம்மா,'' என்றவர் ''நீங்கள் போங்கள் இன்ஸ்பெக்டர், சார். மிஸ்டர் பத்மனாபனும் வேண்டியவர்தான். அவர் கொண்டு போய் விட்டு விடுவார் வீட்டில்,'' என்றார் துணிச்சலாக.

''ஊஹூம்,'' என்று சீனியரை மறுப்பதற்காகத் தலைநிமிர்ந்த பத்மனாபன், கனிவுடனும், பச்சாத் தாபத்துடனும் தன்னை நோக்கும் அந்தப் பெரிய கரிய இரு விழிகளைச் சந்தித்து விட்டான். புடைக்கப் புடைக்கத் தண்ணீர் செல்லும் குழாயில் பொத்தல் ஏற்பட்ட மாதிரி, புதைந்து கிடந்த பழைய நினைவுகள் யாவும் பீரிட்டு அடித்தன அந்த ஒரு பார்வையின் துளைப்பில். ''மாயா! மாயா!'' என்று நெஞ்சம் பிளக்கக் கூவ நினைத்தான். ஆனால் அவன் உதடுகள்தான் துடித்தன.

''இதோ வருகிறேன்,'' என்று வெளியேறினார் பிராசிக்யூட்டர்.

பத்மனாபனை உணர்வுக்குக் கொண்டு வந்தவள், குழந்தை லல்லிதான். அவன் மோவாயைத் தொட்டு, மாயாவைச் சுட்டிக் காட்டி, ''நான்... அவங்ககிட்டே... போகலாமா?'' என்று தயங்கித் தயங்கிக் கேட்டாள்.

''போ, லல்லி. அவங்க... அவங்க...'' முழுசாக மாயாவைப் பார்த்துச் சொன்னான் பத்மனாபன். ''இவங்க உன் அத்தைதான். உன் அப்பாவோட சொந்தத் தங்கை.''

தலைக்கட்டை ஒரு கையால் பற்றிய வண்ணம் அவனையே பார்த்தவாறிருந்த மாயா, அந்த உறவைக் கேட்டதும் திடுக்கிட்டாள், திகைத்தாள். பிராசிக்யூட்டரின் புன்னகை, பத்மனாபனின் சோகம், குழந்தையின் முகச்சாடை - அவை உணர்த்திவிட்டன உண்மைதானென்று.

''ஆமாம். மூர்த்தியின் குழந்தைதான் இவள். ஆனால் அதற்காக இவளை வெறுக்க வேண்டாம்,'' என்றான் பத்மனாபன். ஒரு வினாடி இடைவெளிக்குப் பின், ''என்னையும்தான்.''

மறுவினாடி மாயா வாரி அணைத்துக் கொண்டாள் குழந்தையை.

பிராசிக்யூட்டர் தொண்டையைக் களைத்துக் கொண்டு உள்ளே வந்தார். ''ஏதோ கடவுள் அருளில் எல்லாம் சரியாகிவிட்டது. வேடிக்கை பார், பத்மனாபா. அன்றைக்கு மூர்த்தியை ஜெயிலுக்கு அனுப்பினாய். இப்போது...'' என்று சொல்ல வந்தவர், மாயாவின் உள்ளத்தைப் புண்படுத்த வேண்டாமென்று நினைப்பவர் போல் சட்டென நிறுத்திக் கொண்டார்.

''ஏன் சார் தயங்குகிறீர்கள்? நன்றாகவே சொல்லுங்களேன்,'' என்று அழுத்தமாகப் பேசினாள் மாயா. ''அன்றைக்கு அவனை இவர் ஜெயிலுக்கு அனுப்பினார். அவனையே இன்றைக்குத் தூக்கு மேடைக்கு அனுப்பப் போகிறார்!''

''மாயா!'' என்றான் பத்மனாபன் முதன் முறையாக வாய்விட்டு. அவனையும் அறியாமல் அவன் கரம் அவள் கரத்தைத் தொட்டு ஆறுதல் கூறியது.

இரண்டு கைகளின் சந்திப்பில் ஒரு பொட்டு சூடான நீர் விழுந்தது.

**செ**ன்னையை இரவு சூழ்ந்து வெகு நேரமாகி விட்ட வேளையில், அருண் திருவல்லிக்கேணி வீதிகளில் அரைப் பைத்தியமாக, வெறியனாக நடந்து கொண்டிருந்தான்.

இரவிலும் பகலிலும் அலைச்சல்தான் அவனுக்கு மிச்சமாகியிருந்தது. ராஜரத்தினத்தின் வீட்டில் போலீஸ் காவல். யாரையும் விசாரிக்கவோ உள்ளே நுழையவோ முடியவில்லை.

நிச்சயம், மூர்த்திக்கு அவன் தங்கைக்காரி அடைக் கலம் தந்திருப்பாள் என்றெண்ணி, பூந்தமல்லி சாலைக்குச் சென்றான். நள்ளிரவில் ஏதேதோ கலாட்டா வாக இருந்ததாயும், போலீஸ்காரர்கள் ரோந்து சுற்றிய தாகவும் அவள் வீட்டருகில் பேசிக் கொண்டார்கள். விடிகாலையிலிருந்து அவளையே காணோமென்று எவனோ சொன்னான். தன் துண்டுக் கடிதத்துக்குச் சிறிது பலனும் இருக்கிறதோ ஒரு வேளை.

களைப்பும் வெறுப்பும் கண்ணைச் சுழற்ற, பூந்த மல்லியில் இருந்த ஒரு பூங்காவில், நிழலான ஒரு சிமெட்டிப் பெஞ்சியில் அருண் படுத்தபோது, பல மணி நேரங்களுக்கப்பால்தான் எழுந்திருப்போமென்று எண்ணவில்லை. ஆனால் மாலைப் பொழுது கவிந்து கொண்டிருந்தது அவன் விழித்தபோது. மீண்டும் மாயாவின் வீட்டுப் பக்கமாகச் சென்று அண்டை அயலில் விசாரித்தான். அவளுக்கு என்னவோ அடிதடி காயமாம். திருவல்லிக் கேணியில் எங்கேயோ தங்கியிருக்கிறாளாம். அவள் அம்மாவும் புறப்பட்டுப் போயிருக்கிறாளாம், துணையாக.

திருவல்லிக்கேணி – மாயா!

அருணின் உடம்பில் சூடேறத் தொடங்கியது. எதற்கும் துணிந்த ஒரு மாயக்காரி, கிரிமினல் அண்ணன், வழக்கம் போல அவர்களைப் பாதுகாக்க ஒரு மானங்

கெட்ட வக்கீல், இந்தத் துரோகக் கும்பலுக்குத் துணை போகும் ஒரு இளிச்சவாய்த் தாய்க்காரி! தூ, தூ! காயமாம் அடிதடியாம்! எல்லாம் வேஷம்!

கட்டாயம் பத்மனாபனின் வீட்டில்தான் மூர்த்தி தஞ்சம் புகுந்திருப்பான் என்று தானாகவே கணக் கிட்டுக் கொண்டான் அருண். இரவு ஊரடங்கும் நேரம் பார்த்து அவன் திருவல்லிக்கேணியில் விரைந்தபோது, கொலையாளியின் ஆயுதம்தான் அருணிடம் இல்லையே தவிர, கொலையாளியின் உள்ளம், வெறி, கட்டுக்கடங் காத ஆவேசம் அத்தனையும் இருந்தன. ராஜரத்தினத்தை வஞ்சித்துவிட்ட மூர்த்தி மட்டுமின்றி, கல்யாணியை வஞ்சித்துவிட்ட பத்மனாபனும், இவ்வளவுக்கும் காரணமான அந்த மாயாவும் தன் கையில் பொடிப் பொடியாகிக் கொண்டிருப்பதைப் போன்ற ஆத்திரம் நிமிடத்துக்கு நிமிடம் அதிகரித்து, அவன் விரல்களை முறுக்கேறப் பண்ணிற்று.

பத்மனாபனின் வீட்டு நடையில் நின்றபோது, அவன் தன்னை மறந்துதான் இருந்தான். நடைக்கருகே யுள்ள அறையில் மாயாவின் அம்மா உறக்கத்தில் ஆழ்ந் திருப்பதும், உள்ளே ஹாலில் இரண்டு உருவங்கள் நெருங்கி அமர்ந்திருப்பதையும் கண்டபோது அவன் கண்கள் ஏறக்குறையக் குருடாகிவிட்டன.

வினாடிக்கும் குறைவான காலம்தான். அதில் தவறியிருந்தால் என்ன நேர்ந்திருக்குமோ!

ஒரு சிறு அகல் விளக்கின் மங்கிய வெளிச்சம், சுவரில் மாட்டியிருந்த கல்யாணியின் படத்தை அருணின் கண்ணுக்குக் காட்டிற்று. பூமாலை சூடப்பெற்றிருந்த அந்தச் சட்டங்களுக்குள்ளிருந்து, மனிதன் விதித்துக் கொள்ளும் நல்லதும் பொல்லாததுமான நாலாயிரம் சட்டங்களிலிருந்து விடுபட்ட தனிப் பிறவியான கல்யாணி அருணை நோக்கிச் சிரிக்கிறாள். ''என்ன அருண் சார்! சே, சே! வெறும் கையுடனா வந்திருக்கிறீர்கள்? கத்தி கபடா, துப்பாக்கி கிப்பாக்கி..? பூ! '' என்கிறாள்.

அருணின் படபடப்பு சிறிது ஓய்ந்தது. கூர்ந்து கவனித்தான் கீழே.

பத்மனாபன் மெல்லப் பேசுகிறான். ''கல்யாணி! ராஜரத்தினம் என்னிடம் ஒப்படைத்த இந்தப் பொறுப்பைக் கவனமாய்க் காப்பாற்ற நீதான் எப் போதும் எனக்கு வழிகாட்ட வேண்டும் கல்யாணி!'' என்கிறான்.

என்ன பொறுப்பு? அவன் மடியில் தலைவைத்து, மாயாவின் மடியில் கால் வைத்து உறங்கிக் கொண்டிருப்பது—

குழந்தை லல்லி அல்லவா, அதை ராஜரத்தினம் ஒப்படைத்தாரா!

அருண், மேலும் ஓரடி பின்னடைந்தான்.

''அக்கா!'' என்று உறவு கூறி அழைக்கிறாள் மாயா. ''நீங்கள் இருக்கும்போது இவர் செய்த காரியம், தெரிந்து செய்த துரோகம், அக்கிரமமானது. அதற்குத் தகுந்த தண்டனையை அனுபவித்து விட்டார். நான் செய்தது, தெரியாமல் பண்ணிய துரோகம். என் வயதின் கோளாறு அது. நானும் வேண்டிய மட்டும் அனுபவித்து விட்டேன். கடைசிக் கடைசிக் கருவியாக, எவனை என் உயிருக்கும் மேலாக நினைத்தேனோ, அந்த அண்ணனை என் கையாலேயே பிடித்துக் கொடுத்துவிட்டேன். இவ்வளவு போதும் எங்களுக்கு. எங்களை மன்னியுங்கள்...''

தூய்மையான தெய்வத்தின் திருமுன்னிலையில் வேண்டப்படும் பிரார்த்தனை போல, உள்ளத்தின் ஆழத்திலிருந்து குழைவாக, பயத்தோடும் பக்தியோடும், கொஞ்சம் கொஞ்சமாய்ச் சொற்கள் வெளிப்பட்டன.

அருண் தெருவில் இறங்கினான் மௌனமாக.

**ர**யில் பிலாயை நெருங்கிக் கொண்டிருக்கிறது.

நாக்பூரில் வாங்கிய ஆரஞ்சுப் பழத்தை உரிக்கிறான் அருண். எதிரில் தன்னையே கொட்டக் கொட்டப்

பார்க்கும் ஒரு வடக்கத்திக் குழந்தையைக் கண்டு, சிரித்தபடி அதனிடம் ஒரு சுளை கொடுக்கிறான். அதன் தாயான இளம்பெண் "சுக்ரியா போலோ," என்கிறாள் அவளுடைய மொழியில்; குழந்தை ஏதோ கூறுகிறது.

லல்லியை நினைத்துக் கொண்டான் அருண். லல்லி அல்ல. கல்யாணி. சின்னக் கல்யாணி.

கல்யாணி, மண்ணைச் சுரண்டித் தின்னும் குழந்தை யாகத் தவழ்கிறாள், கால் ஜண்டை கிணுகிணுக்க.

கல்யாணி, ஸ்கர்ட்டும் ஸாக்ஸும் அணிந்த சிறுமி யாக, தோளில் அணிந்த பை அவளையே சுற்றிச் சுற்றி வர, "போய்ட்ற்றேன்!" என்று கூறிக் கொண்டு ஸ்கூல் பஸ்ஸில் ஏறுகிறாள்.

கல்யாணி, மேலாக்கைக் கண்டாலும் உலகத்தைக் காணாத இரண்டும் கெட்டானாக, ஹோஹ்ஹோ வென்று சிரித்து அரட்டை அடிக்கும் கொடுக்காக'த் திரிகிறாள்.

கல்யாணி, உலகத்தைத் தெரிந்து கொள்கிறாள். நிமிர்ந்த நெஞ்சமும் நேர் கொண்ட பார்வையுமாக, உலகத்தை இயக்குவிக்க, தன் பங்கைச் செய்யத் தயாரான கல்லூரி மாணவியாகிறாள்.

கல்யாணி, மனம் நிறைய மாலையிடுகிறாள் கண் நிறைந்த மணாளனுக்கு.

கல்யாணி, இன்னொரு சின்னக் கல்யாணியைப் பெறுகிறாள். வேதனைகளை வேடிக்கையாகத் தள்ளி, சிரித்துக் கொண்டே ஜீவனைத் தரும் கலையை, பண்பையும் அன்பையுமே பிரதானமாகப் போற்றும் பழக்கத்தை, தன் குழந்தைக்குக் கற்பிக்கிறாள்.

வாழையின் கீழே வாழை வளர்கிறது. கல்யாணியின் வம்சத்துக்கு முற்றுப்புள்ளி கிடையாது.

— நிறைந்தது —



ரா.கி.ரங்கராஜன் : 5.10.1927-ல் கும்பகோணத்தில் பிறந்தார் தந்தை மகாமகோபாத்தியாய ஆர்.வி.கிருஷ்மாச்சாரியார், மிகப் பெரிய சமஸ்கிருத வித்வான். ரங்கராஜன், தனது 16வது வயதில் எழுத ஆரம்பித்தார். 1946-ல் 'சக்தி' மாத இதழிலும் 'காலச்சக்கரம்' என்ற வார இதழிலும் உதவி ஆசிரியராகத் தொடர்ந்தார். 1950-ல் 'குமுதம்' நிறுவனம் சிறிது காலம் நடத்திய 'ஜிங்லி' என்ற சிறுவர் இதழில் சேர்ந்து, குமுதம் இதழில் 42 ஆண்டு காலம் உதவி ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார்.

இவர் 1500க்கும் மேற்பட்ட சிறுகதைகளும், 50 நாவல்களும், ஏராளமான கட்டுரைகளும், மொழிபெயர்ப்பு நாவல்களும் எழுதியுள்ளார். இவருடைய மூன்று நாவல்கள் திரைப்படமாக வெளிவந்துள்ளன. பல படைப்புக்கள் சின்னத்திரையிலும் இடம் பெற்றுள்ளன. ரங்கராஜன் 'சூர்யா', 'ஹம்ஸா', 'கிருஷ்ணகுமார்', 'மாலதி', 'முள்றி', 'அவிட்டம்' - போன்ற புனைப்பெயர்களில் தரமான சிறுகதைகள், வேடிக்கை நாடகங்கள், துப்பறியும் கதைகள், குறும்புக் கதைகள், மழலைக் கட்டுரைகள், நையாண்டிக் கவிதைகள்-என பலதரப்பட எழுத்துக்களைத் தந்தவர், ஒவ்வொரு புனைப் பெயருக்கும் - நடையிலோ, கருத்திலோ, உருவத்திலோ எதுவம் தொடர்பு இல்லாமல் தனித்தனி மனிதர்போல் எழுதிய மேதாவி. இந்தப் பல்திறமைக்கு ஒரே ஒரு முன்னோடி தான் உள்ளர்;

- கல்கி

'ரங்கராஜன் ஒரு கர்ம யோகி, குமுதம் ஸ்தாபன விசுவாசம், ஆசிரியர் எஸ்.ஏ.பி. மேல் பக்தி, கிடைத்தது போதும் என்கிற திருப்தி, சக எழுத்தாளர்கள் மேல் பொறாமையற்ற பிரிவு, நேசம், வெள்ளைச் சட்டை, வெள்ளை வேட்டி, நண்பர்களைக் கண்டால் கட்டியணைத்து முதுகில் ஒரு ஷொட்டு-இவைதான் இவருடைய சிறப்புகள்',

- சுஜாதா